# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Friday, the 19th August 1960.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I. QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Fire accident at Tondiarpet*

**S.N. Q.* 4.—SRI A. A. RASHEED: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the total amount of loss due to the fire accident in Tondiarpet on 5th August 1960;

(*b*) the cause of the fire and the help rendered; and

(*c*) the number of lives lost?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) About Rs. 50,000.

(*b*) The fire was caused by a spark from an oven.

A sum of Rs. 3,370 is proposed to be granted towards cash and clothing grants to the victims of the fire accident. Arrangements were made to provide shelter for the victims in the Corporation schools nearby. The Corporation authorities also undertook to feed the victims for three days.

(*c*) One male child besides a cow.

SRI A. A. RASHEED: Is it not a fact that fire engines did not reach the place in time? If so may I know the reason for the same?

THE HON. SRI M. A. MANICKAVELU: As soon as intimation is got, fire engines are rushed to the spot. Naturally it will take some time for the fire engines to reach the spot. There is no delay in the present case. The intimation might have been received probably late.

SRI A. A. RASHEED: May I know whether Government have taken permanent steps to rehabilitate those who lost their homes?

THE HON. SRI M. A. MANICKAVELU: The usual pattern is to give them ready help in the matter of rebuilding their huts. For that we give them some amount and for clothes we grant about Rs. 10 per person. This is just to help them to rehabilitate. It cannot be permanent rehabilitation.

**SRI A. GOVINDASAMY:** இம்மாதிரி தீ விபத்து ஏற்படுகிற நேரங்களிலெல்லாம் தீ அணைப்புப்படை மிகவும் தாமதமாகப் போகிறது. இதைத் துரிதப்படுத்துவதற்கு சர்க்கார் ஏதாவது நடவடிக்கை எடுக்குமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: இப்படி தாமதம் ஏற்படுவது பல காரணங்களால்—அதாவது தீ விபத்தினுடைய செய்தி கிடைப்பதற்கு தாமதமாகிறது, அதோடு அந்த இடங்களில் தண்ணீர் இறைப்பதற்கு வேண்டிய பிரஷர் கிடைப்பதில்லை— இப்படி பிராக்டிக்கலாக பல பிரதிகூலங்கள் இருக்கின்றன. கூடு மானவரை இதில் எதையெல்லாம் தீர்த்து வைக்க முடியுமோ அதையெல்லாம் தீர்த்து வைக்க அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது.

*Preventive Detention Act*

*281 *Q.*—SRI S. M. ANNAMALAI: கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) தடுப்புக் காவல் சட்டத்தை மேலும் நீடிக்க மாநில சர்க்காரின் ஆலோசனையை மத்திய சர்க்கார் கேட்டார்களா?

(ஆ) அப்படியானால், மாநில சர்க்கார் என்ன யோசனை கூறியுள்ளனர்?

(இ) இப்பொழுது இச்சட்டத்தின்கீழ் எத்தனை கைதிகள் நம் மாநிலத்தில் உள்ளனர்?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) Yes, Sir.

(*b*) The Government consider that it will not be in the public interest to divulge the suggestions made by this Government.

(*c*) No one, Sir.

SRI S. M. ANNAMALAI: ஸார், ஏற்கனவே இருந்து கொண் டிருக்கும் "க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட்"-ல் 151-வது செக்ஷன் இருக்கும் போது சர்க்காருக்கு இந்தச் சட்டம் தேவையா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: நான் நேற்றுத்தான் இதைப்பற்றி சொன்னேன் என்று நினைக்கிறேன். இப்போது இருக்கின்ற "க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட்", 151-வது செக்ஷன் பிரகாரம் 15 நாட்களுக்குத்தான் ஒருவரைப் பிடித்து வைக்க முடியும். ஆகவே தான் இதற்கு மேலாக தனியாக ஒரு சட்டம் தேவையாக இருக்கிறது.

*Assignment of lands in a forest area*

*282 *Q.*—SRI M. A. B. ARUMUGHASAMY: கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா, ஆத்தூர் தொகுதியில் கன்னிவாடி ஜமீன் மலையடிவாரத்தில் காடுகள் வளர்ப்புக்கு லாயக்கில்லாத நிலங்களை ஏழைகளுக்கு ஜாரி செய்யக் கோரி 29–9–59, 28–12–59 தேதிகளில் கனம் ரெவின்யு அமைச்சர் அவர்களிடம் மகஜர் கொடுக்கப்பட்டதா?

(ஆ) அப்படியானால், அதன்மீது என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டது?

19th August 1960]

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) Yes, Sir.

(ஆ) The petitioner, who is the hon. Member himself, was informed that the question of the assignment of the lands in the forest area of Kannivadi estate would be taken up for consideration after the introduction of ryotwari settlement in the estates areas in the Madurai district.

SRI M. A. B. ARUMUGHASAMY : ஸார், செட்டில்மென்ட் முடியும் வரை, மேற்கண்ட நிலங்களில் விவசாயம் செய்து கொண்டிருப்பவர்களை, தொடர்ந்து விவசாயம் செய்து கொண்டிருப்பதற்கு சர்க்கார் அனுமதிக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த செட்டில்மென்ட் நடந்து தீர்ந்தால் தான் இந்த நிலங்கள் எல்லாம் யார் யாருக்கு என்று தெரியும். ஒருக்கால் டாங்க் புறம்போக்குகளோ, அல்லது 'டாங்க் பெட்' களோ இருந்தால் அவைகளை எப்படி அனுமதிப் பது ? அவ்விதம் ஏதாவது இருந்தால் அவர்களை அப்புறப்படுத்த வேண்டியது அவசியமாகிறது.

SRI M. A. B. ARUMUGHASAMY : 'டாங்க் பெட்' களிலோ, அல்லது காட்டு இலாகாவுக்கு உபயோகமில்லாத நிலங்களிலோ விவசாயம் செய்து வருபவர்களுடைய நிலைமையைக் கருதி அவர்களை அந்த இடங்களிலே விவசாயம் செய்வதற்கு சர்க்கார் அனுமதிக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த விஷயம் செட்டில்மென்ட் முடிந்த பின்னல் தான் தெரியும். சர்க்காருக்கு இடைஞ்சல் இல்லாத இடங்களாக இருந்தால் அதை ஜாரி செய்து கொடுப்பதற்கு நடவடிக்கை எடுக்கலாம்.

*Hospital at Gingee*

* 283 Q.—SRI K. GOPALA KOUNDER : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) செஞ்சியில் உள்ள ஆஸ்பத்திரியில் புதிதாகக் கட்டப் பட்ட emergency வார்டில் நோயாளிகள் படுக்க படுக்கை வசதி யில்லாமலிருப்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

(ஆ) ஏன் இதுவரையில் படுக்கைகள் சப்ளை செய்யப்பட வில்லை ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) and (ஆ) The ward has been functioning with borrowed cots from 31st January 1960. Necessary arrangements have been made to purchase cots for the ward.

SRI K. GOPALA KOUNDER : ஸார், ஜில்லா சுகாதார அதிகாரி ஒன்றரை வருட காலமாக டென்டர் கோருவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். நாளது வரையிலும் எந்த

[19th August 1960

விதமான சாமான்களும் வந்து சேரவில்லை. ஆகவே கனம் அமைச்சர் அவர்கள் இதில் கவனம் செலுத்தி சாமான்களை தருவிப்பதற்கு வேண்டிய முயற்சிகள் செய்வார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU: கேட்கப்பட்டிருக்கும் கேள்வி கட்டில்களைப் பற்றியது. இப்போது ஏதோ பக்கத்திலிருந்து கடன் வாங்கி உபயோகப்படுத்துகிறோம். புதிதாக கட்டில்களுக்கு ஆர்டர் கொடுத்திருக்கிறோம். அவைகள் வந்தவுடன் கொடுக்கலாம்.

MR. SPEAKER: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் இப்போது சபையில் இல்லை. இன்னும் சிறிது நேரத்தில் வந்து விடுவார்கள். வந்தவுடன் 284-வது கேள்வியை எடுத்துக் கொள்ளலாம்.

*Medico-herbal gardens*

*285 Q.—SRI P. G. MANICKAM:
SRI S. M. ANNAMALAI: } கனம் ரெவின்யு அமைச்சர்
SRI M. P. SARATHI:
அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

சென்னை ராஜ்யத்திலே எந்தெந்த இடங்களிலே பற்பல விதமான நோய்களைத் தீர்ப்பதற்கான மூலிகைகள் உற்பத்தி செய்யக்கூடிய தோட்டங்கள் இருக்கின்றன?

THE HON. SRI M. A. MANICKAVELU: Medicinal plants are cultivated in the Medicinal Farm at Arumbakkam attached to the Hospital of Integrated Medicine, Madras, and in the Government Cinchona Plantations in the Anamalais and in the Nilgiris.

SRI P. G. MANICKAM: ஸார், மூலிகைகளை அதிகமாக உற்பத்தி செய்யும் திட்டங்களை கிராமப் பஞ்சாயத்துக்களின் நேரடிப் பார்வையின் கீழ் கொடுக்கலாம் என்பதைப்பற்றி திட்டக்கமிஷன் ஆராய்ச்சி செய்ததைப்பற்றி சென்னை சர்க்காருக்கு ஏதாவது விவரம் தெரிவிக்கப்பட்டிருக்கிறதா? அப்படியானால் அதன் பேரில் சர்க்கார் எடுத்துள்ள நடவடிக்கைகள் என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU: இதைப்பற்றி என்னிடம் தகவல் இல்லை. இப்போது இரண்டு மூன்று இடங்களில் இந்த மூலிகை ஆராய்ச்சி செய்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்துக்கள் எல்லாம் ஏற்பட்ட பின்னால் இவைகளைப் பஞ்சாயத்திடம் ஒப்படைப்பதைப்பற்றி ஆலோசனை செய்யலாம்.

SRI T. T. DANIEL: May, I know whether any research is being conducted on an all-State basis to find out the presence of valuable medicinal plants in various areas?

19th August 1960]

THE HON. SRI M. A. MANICKAVELU : Not any intensive research; but in a way in the places mentioned they are experimenting about the use of these plants—some of the known plants.

SRI V. SUBBIAH : நம் ராஜ்யத்தில் பொதிகை மலைச் சாரலில் இருக்கின்ற குற்றாலத்தில் எல்லாவித மூலிகைகளும் கிடைக்கின்றன. அந்த இடத்திலேயே நம் ராஜ்யம் பூராவுக்கும் தேவையான மூலிகைகளை உற்பத்தி செய்வதற்கு ஏதாவது திட்டமிருக்கிறதா?

THE HON. SRI M. A. MANICKAVELU : உள்நாட்டு வைத்திய முறை, அவைகளுக்குத் தேவைப்படும் மூலிகை இவைகளைப்பற்றி ஆராய்ச்சி செய்து புனருத்தாரணம் செய்வதற்கென்று ஒரு குழு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அவர்கள் இவைகளின் மீது என்ன ஆலோசனை சொல்லுகிறார்களோ, அதன்படி கவனிக்கலாம்.

SRI S. M. ANNAMALAI : ஸார், இந்த ஆராய்ச்சி செய்கின்ற குழுவானது மாகாணம் பூராவிலும் சர்வே செய்து பார்த்து, காட்டிலாகாவின் மூலமாகவும் வேறு பல மலைப் பிரதேசங்களிலும் கிடைப்பதையெல்லாம் பார்த்து, அதன் மூலம் மேலும் மேலும் மூலிகைகளை உற்பத்தி செய்வதற்குச் சர்க்கார் முன் வருமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பாது என்னவெல்லாம் மூலிகைகள் இருக்கின்றன, அவைகள் எங்கெல்லாம் கிடைக்கின்றன என்பதைப்பற்றி இப்போதுள்ள மனிதர்கள் போனால் ஆராய்ந்து பார்க்க முடியாது. ஏட்டுச்சுவடிகளில்தான் எல்லாம் எழுதி வைக்கப்பட்டிருக்கின்றன. அவைகளை எல்லாம் படித்துப்பார்த்துத் தான் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும்.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், இப்போது நம் நாட்டில் உற்பத்தி செய்யக்கூடிய மூலிகைகள் வெளிநாட்டுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகிறதா?

THE HON. SRI M. A. MANICKAVELU : உள்நாட்டிலும் பல இடங்களுக்கும் உபயோகப்படுகிறது. வெளிநாட்டுக்கும் சில மூலிகைகள் ஏற்றுமதியாகின்றன. "ஸெர்பென்டினு" என்கிற மூலிகை வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது.

SRI K. VINAYAKAM : What are the various kinds of herbs that are grown in that field in Arumbakkam? What is the expenditure incurred for growing them? May I know the value realised out of these herbs?

MR. SPEAKER : I think the hon. Member must pay a visit to Arumbakkam. (Laughter.)

THE HON. SRI M. A. MANICKAVELU : The question is too long for me to give all the necessary details now.

[19th August 1960

*Co-operative Inspectors*

* 284 *Q.*—Sri V. K. KOTHANDARAMAN :
Sri D. S. AUTHIMOOLAM : } Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the pay and allowances of the Senior and Junior Co-operative Inspectors durnig the training period; and

(*b*) whether the Reserve Bank of India shares the cost of training?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) The Senior and Junior Inspectors of Co-operative Societies are paid a stipend of Rs. 65 per mensem and Rs. 45 per mensem respectively during the period of their training. They are also paid travelling allowance under the Madras Travelling Allowances Rules.

(*b*) The cost is shared by the Central Government.

*Slaughter-houses*

* 286 *Q.*—Sri A. A. RASHEED : Will the Hon. the Minister for Local Administration be pleased to state whether there is any proposal to modernise slaughter houses in the Madras City?

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON : Yes, Sir.

Sri A. A. RASHEED : May I know, Sir, the details regarding the decision with reference to the modernisation of the slaughter houses?

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON : For the moment I cannot say anything in detail. But there is a suggestion by one Mr. Wernberg, a Danish Expert, who came from F.A.O. He has suggested that about Rs. 28,56,000 is needed for the improvement as per his suggestion and also an expenditure of Rs. 5,43,000 per annum towards maintenance. This is under the consideration of the Government.

*Cases of corruption in the Madurai District Board Office*

Mr. SPEAKER : கனம் அங்கத்தினர் சங்கரன் அவர்கள் இப்பொழுது சபையில் இல்லாததால் இந்தக் கேள்வியும் அதற்கான பதிலும் சபையின் விவாத வெளியீட்டில் அச்சிடப்படும்.

* 287 *Q.*—Sri V. SANKARAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether any case of bribery and corruption by some of the employees of the Madurai District Board Office was detected recently;

(*b*) if so, the details thereof: and

(*c*) the action taken thereon?

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON : (*a*) Yes, Sir. Three cases of corruption have been detected recently in Madurai District Board Office.

(*b*) & (*c*) A statement[a] is placed on the Table of the House

---

[a] Printed as Appendix I on page 107 Infra.

19th August 1960]

*Complaint against the President of Perumagoundanpatti Panchayat*

* 288 *Q.*—Sri A. GOVINDASAMY (on behalf of Sri M. P. SUBRAMANIAM): Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the Government have received any complaints against the President of the Perumagoundanpatti Panchayat in Salem district from the public of that village;

(*b*) if so, the nature of the complaint; and

(*c*) the action taken thereon?

The Hon. Sri C. SUBRAMANIAM: (*a*) Yes, Sir, Certain complaints were received by the Inspector of Municipal Councils and Local Boards, Madras, against the President of the Perumagoundanpatti Panchayat.

(*b*) The complaints relate to temporary misappropriation of Panchayat funds, improper maintenance of Panchayat accounts, etc.

(*c*) Necessary action is being taken by the Collector of Salem against the President for the irregularities committed by him.

Sri A. GOVINDASAMY: எவ்வளவு பணம் கையாளப்பட்டது? ஆடிட்டில் அதைப்பற்றி என்ன சொல்லப்பட்டிருக்கிறது?

The Hon. Sri C. SUBRAMANIAM: 1,000 ரூபாய் அளவுக்கு "டெம்பொரரி மிஸ்அப்ரோப்ரியேஷன்" இருந்ததாகக் கண்டுபிடிக்கப்பட்டது. இதைத் தவிர கணக்கு வைப்பதில் சில ஒழுங்கீனங்களும் கண்டுபிடிக்கப்பட்டு, அவைகளைச் சீராக்க நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது.

* 289 *Q.*—Mr. SPEAKER: The Hon. the Home Minister is not in Madras. It will be taken up on some other day.

*Pig iron*

* 290 *Q.*—Sri A. VEDARATHNAM: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தேனிரும்புக்கு விலைக் கட்டுப்பாடு இருக்கிறதா?

(ஆ) டன் 1-க்கு கட்டுப்பாட்டு விலை என்ன?

(இ) விலைக் கட்டுப்பாடு இல்லையானால், எப்போதிருந்து இல்லை?

(ஈ) கட்டுப்பாட்டை நீக்கியதன் காரணம் என்ன?

(உ) விலைக் கட்டுப்பாடு நீக்கிய பின் விலையில் என்ன மாறுதல் எற்பட்டிருக்கிறது?

[19th August 1960

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) There has been no price control over "wrought iron."

(ஆ) to (உ) Do not arise.

MR. SPEAKER : I want to clarify one thing. I would like the hon. Members to give English equivalent whenever they use certain terms in Tamil. For instance, the Department have interpreted about 'தேணிரும்பு' as wrought iron. Apparently, the hon. Member wants information only about pig iron. As the answer relates to wrought iron, I request the hon. Member to put a separate question.

SRI A. VEDARATHNAM : "பிக் அயர்ன்"-க்காவது கண்ட்ரோல் இருக்கிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : There is control for pig iron.

SRI A. VEDARATHNAM : சமீபத்திலே அதனுடைய கட்டுப்பாடு நீடிக்கப்பட்டதன் காரணமாக விலை உயர்ந்திருப்பதாகப் புகார் கூறப்படுகிறதே, அதைப் பற்றி விவரம் அறிவிக்க முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : I want the hon. Member to put a separate question in respect of pig iron.

*Chinnalapatti Co-operative Milk Supply Union*

*291 Q.—SRI M. A. B. ARUMUGHASAMY : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா, திண்டுக்கல் தாலுகா, சின்னாளப்பட்டி கூட்டுறவு பால் வினியோக சங்கத்தில் ஊழல்கள் இருப்பதாக டிபார்ட்மெண்டாரால் கண்டுபிடிக்கப்பட்டதா ?

(ஆ) ஊழல்களுக்குக் காரணமானவர்கள்மீது என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டது ?

(இ) அதன் முடிவு என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*) Criminal prosecution has been launched against the persons responsible for misappropriation of funds of the Society.

(*c*) The case is pending in the Court of the Additional First-class Magistrate, Madurai.

MR. SPEAKER : The matter is *sub judice*. I am afraid no further question can be asked.

19th August 1960]

*Certain facilities to Backward Classes*

*293 Q.—SRI P. G. MANICKAM: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பின்தங்கிய வகுப்பினர்களும், தகுதியுள்ள சமுதாயங்களும் முடிதிருத்த நிலயங்களையும் (சலூன்கள்), சலவைச் சாலைகளையும் (லாண்டரீஸ்), தையற்கடைகளையும் நிறுவுவதற்காக எந்த மாவட்டத்தை ஹரிஜன நல இலாகா தேர்ந்தெடுத்திருக்கிறது?

(ஆ) மேற்கண்ட ஒவ்வொரு தொழிலுக்கும் எத்தனை பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்?

(இ) ஒவ்வொருவருக்கும் எவ்வளவு தொகை உதவியாகக் கொடுக்கப்படும்?

THE HON. SRI P. KAKKAN: (அ) Salem district.

(ஆ) The loan will be given to fifty persons in each trade every year.

(இ) For saloons—Rs. 250 each.
For laundries—Rs. 150 each.
For tailoring shops—Rs. 400 each.

SRI P. G. MANICKAM: இவ்வாறு கடனைக் கொடுக்கப்படும் தொகை எவ்வளவு காலத்திற்குள் செலுத்தப்படவேண்டும்? எவ்வளவு தவணைகளாகச் செலுத்த வேண்டும் என்று சர்க்கார் ஏற்பாடு செய்திருக்கிறது?

THE HON. SRI P. KAKKAN: ஹரிஜன நல இலாகா டைரக்டர் அல்லது கலெக்டர் பார்த்து எத்தனை தவணைகளில் கட்டவேண்டுமென்று தீர்மானிக்கிறார்கள். கூடுமான வரையில் 10 இன்ஸ்டால்மெண்டில் கட்டுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

SRI V. SUBBIAH: இந்த மாதிரி உதவி கிராமப் புறத்தில் உள்ள சலவைத் தொழிலாளர்களுக்கும் கொடுக்கப்படுகிறதா? இல்லையென்றால் இனிமேலாவது கொடுக்க ஏற்பாடு செய்வார்களா?

THE HON. SRI P. KAKKAN: கிராமத்தில் இருக்கக் கூடிய சலவைத் தொழிலாளர்கள், மற்றவர்கள், எல்லோருக்கும்தான் கொடுக்கப்படுகிறது.

SRI M. K. SOMASUNDARAM: பெரிய பெரிய பட்டிணங்களில் வைத்திருக்கக் கூடிய மாதிரி கிராமத்தில் இருக்கக் கூடிய சலவைத் தொழிலாளர்கள் லாண்டரி மாதிரி வைக்காமல், வீடுகளில் வைத்துக்கொண்டு, வீடுகளிலிருந்து துணிகளை எடுத்து வந்து சலவை செய்வதால், அவர்களுக்கும் "அயர்ன் பாக்ஸ்" முதலியவைகளை விநியோகம் செய்ய சர்க்கார் முன் வருமா?

[19th August 1960

THE HON. SRI P. KAKKAN : இப்போது அந்த உத்தேசம் இல்லை. இருந்தாலும் கனம் அங்கத்தினர் தனியாகக் கேள்வி போட்டால் அதைப் பற்றியும் பரிசிலனை செய்யலாம்.

SRI T. T. DANIEL : May I know, Sir, to whom the application for the loan should be sent?

THE HON. SRI P. KAKKAN : To the Collector, Sir.

SRI A. GOVINDASAMY: முதலில் சேலம் மாவட்டத்தை எடுத்துக்கொண்டாலும், இதர மாவட்டங்களுக்கு விஸ்தரிப்பது எப்போது எடுத்துக்கொள்ளப்படும்?

THE HON. SRI P. KAKKAN : இந்த ஜில்லாவிலே ஏற்படுகின்ற வெற்றியைப் பொறுத்து இதர ஜில்லாக்களுக்கு விஸ்தரிக்கப்படும்.

*Co-operative Training College*

* 294 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there is any proposal to start a Co-operative Training College; and

(*b*) if so, when and where?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*) It is proposed to locate the Co-operative Training College at Madras. It is too early now to say when the College will be started.

SRI A. A. RASHEED : Sir, may I know whether the college will be under the control of the University and whether Diplomas or Degrees will be awarded after training?

THE HON. SRI R. VENKATARAMAN : It would be under the control of the Department.

SRI A. VEDARATHNAM : இப்போது கூட்டுறவுப் பயிற்சிக்கு என்னென்ன ஸ்தாபனங்கள் இருக்கின்றன? ஏதேனும் வேறு கல்லூரிகள் எங்காவது இருக்கின்றனவா? அப்படியானல் எங்கு?

THE HON. SRI R. VENKATARAMAN : சாதாரண ஸீனியர், ஜூனியர் இன்ஸ்பெக்டர்கள் பயிற்சிக்கு நம்முடைய ராஜ்யத்தில் நான்கு கூட்டுறவுப் பயிற்சி ஸ்தாபனங்கள் இருக்கின்றன. ஆனல் உயர்தரப் பயிற்சிக்கு பூனுவில் ஒரு பயிற்சிக் கல்லூரி இருக்கிறது. அதையே நாமும் உபயோகப்படுத்திக் கொள்ளலாம் என்று ரிஸர்வ் பாங்க் ஸ்தாபனத்தார் சொன்னர்கள். ஆனல் நமது ராஜ்ய சர்க்கார் நமக்குத் தனியாக வேண்டுமென்று முடிவு செய்திருக்கிறது.

SRI K. VINAYAKAM : Sir, May I know if the officials belonging to the Department are going to be trained in this college or is it open to the raw people coming out of the schools and colleges?

19th August 1960]

The Hon. Sri R. VENKATARAMAN : Persons are recruited to the posts of Co-operative Sub-Registrars and the Deputy Registrars. They will be first trained. Then there will be an in-training for the existing officers because we feel that these officers lose touch with the principles after sometime. Therefore they should be sent for refresher course and they will be sent to this college.

Sri A. A. RASHEED : May I know, Sir, whether the Central Government have promised to give any aid for this College?

The Hon. Sri R. VENKATARAMAN : No, Sir. The Government of Madras have proposed to run it out of their own funds.

*Increments to teachers*

*295 *Q.*—Sri N. R. THIAGARAJAN : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா போர்டு ஆசிரியர்கள் பெரும்பாலோருக்கு 1960 மார்ச் முடிய சம்பள உயர்வு கொடுக்காத காரணம் என்ன?

(ஆ) சென்ற நான்கு வருடங்களாக சம்பள உயர்வு கிடைக்காத ஆசிரியர்கள் கலெக்டரிடம் புகார் செய்தார்களா?

(இ) இப்படிப் புகார் செய்த ஆசிரியர்களின்மீது நடவடிக்கை ஏதேனும் எடுக்கப்பட்டிருக்கிறதா?

The Hon. Sri C. SUBRAMANIAM : (அ) Increments were not granted in the following cases :—

(1) some teachers were appointed in contravention of the rules of appointment; and

(2) some did not acquire the qualifications in craft, necessary for eligibility for increment.

The Special Officer has addressed the Government for the ratification of the irregular appointments. Increments will be sanctioned after Government pass orders.

(ஆ) & (இ) No, Sir.

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, Collectors are the Special Officers. May I know the reason why these teachers were appointed against the rules? What is the action proposed to be taken by the Government against these officers?

The Hon. Sri C. SUBRAMANIAM : Unfortunately, appointments were made by the District Board Presidents, who were non-officials functioning then.

[19th August 1960

*Harijan Welfare House-building Schemes*

*296 Q.—SRI M. A. B. ARUMUGHASAMY : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1959-60 ஆண்டில் ஹரிஜன நல வீடு கட்டும் திட்டத்தின் கீழ் மதுரை ஜில்லாவில் திண்டுக்கல் ரெவின்யூ டிவிஷனில் எந்தெந்த ஊரில் எத்தனை வீடுகள் கட்ட திட்டமிடப்பட்டது?

(ஆ) அவைகளில் எந்தெந்த ஊர்களில் எத்தனை வீடுகள் கட்டி முடிக்கப்பட்டன?

(இ) அவைகளுக்கு ஒதுக்கப்பட்ட தொகை எவ்வளவு?

THE HON. SRI P. KAKKAN : (அ) & (இ) A statement[a] is placed on the table of the Assembly.

(ஆ) Information is being collected and will be placed on the table of the House as soon as possible.

SRI M. A. B. ARUMUGHASAMY : ஸார், ஸ்டேட்மெண்டில் கொடுத்துள்ளபடி கட்டப்பட்ட வீடுகள் அனைத்தும், ஹரிஜனங்களுக்காக வீடு கட்டும் திட்டத்தின்கீழ் ஒதுக்கப்பட்டபடி, கட்டப்பட்ட வீடுகள்தானா? அல்லது ஒதுக்கப்பட்ட வீடுகளில் ஏதாவது ஒரு தொகுதியில் கட்டுவதற்கு தாமதம் ஏற்பட்டதால் மற்றொரு தொகுதிக்கு மாற்றி கட்டப்பட்டிருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : கட்டப்பட்ட வீடுகளுக்குக் கொடுக்கப்பட்ட பணம் ஹரிஜன நல இலாகாவிலிருந்துதான் கொடுக்கப்பட்டது. இதரத் தொகுதிகளுக்கு மாற்றப்பட்டதைக் குறித்துத் தனியாகக் கேள்வி போட்டால் பதில் சொல்லலாம்.

SRI A. GOVINDASAMY : மேஜை மீது வைக்கப்பட்டிருக்கும் அறிக்கையைப் பார்க்கும்போது மற்ற மாவட்டங்களைக் காட்டிலும் அதிகமாக மதுரை மாவட்டத்தில் திண்டுக்கல் பகுதியில்—150 வீடுகள் — கட்டப்பட்டிருக்கின்றன. அந்த மாவட்டத்திற்கு மட்டும் விசேஷ சலுகை காட்டக் காரணம் என்ன?

THE HON. SRI P. KAKKAN : மதுரை ஜில்லாவுக்கு மட்டும் தனிச் சலுகை என்பதல்ல. ஒவ்வொரு ஜில்லாவிலும் அந்தந்த அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் வீடுகள் கட்டிக் கொடுக்கத் திட்டமிடுகிறோம்.

*Boat Building Industry*

*297. Q.—SRI N. MARUDACHALAM (on behalf of SRI V. K. KOTHANDARAMAN) : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) படகு கட்டும் தொழிற்சாலை எங்கே உள்ளது?

(ஆ) இல்லையெனில், ஆரம்பிக்க உத்தேசம் உண்டா? எப்போது (?) எங்கே?

---

(a) Printed as Appendix II on page 107 infra.

19th August 1960]

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) & (ஆ) There are at present only small private units for building fishing boats in Cuddalore, Tuticorin, Nagapattinam, etc. The Government have sanctioned a scheme for the construction of a departmental boat building yard at a cost of Rs. 1,65,000 for fishing craft near Royapuram.

As regards construction of larger boats for transport of passengers and cargo, it is a matter coming within the purview of the Central Government. This Government have however requested the Government of India to establish a few such boat-building yards in Madras State.

SRI K. VINAYAKAM : What is the extent of progress that has been so far achieved in the Royapuram yard, Sir?

THE HON. SRI R. VENKATARAMAN : The Public Works Department have submitted their revised estimate for the lay-out of the proposed yard and the estimate is under scrutiny.

SRI A. GOVINDASAMY : கடலூரில் தனியார்கள் "போட்" கட்டும் தொழிலுக்கு அரசாங்கம் என்ன உதவி செய்திருக்கிறது?

THE HON. SRI R. VENKATARAMAN : என்ன உதவி கேட்கிறார்களோ அது கொடுக்கப்படும்.

SRI A. VEDARATHNAM : நாகையில் ஏற்பட்டிருக்கும் படகு கட்டும் தொழிற்சாலையில் என்ன மாதிரியான படகுகள் இப்போது கட்டப்படுகின்றன? இதுவரை எத்தனை படகுகள் கட்டப்பட்டிருக்கின்றன? அப்படிக் கட்டப்படும் படகுகளில் "பவர்" இணைக்க ஏதாவது முயற்சி எடுக்கப்பட்டிருக்கிறதா?

THE HON. SRI R. VENKATARAMAN : இவை தனியார் கட்டும் மீன் பிடிக்கும் படகுகள். எவ்வளவு படகுகள் கட்டப்பட்டிருக்கின்றன என்ற தகவல் சர்க்காரிடத்தில் இல்லை. விசைப் படகுகள் கட்ட சர்க்காரிடம் உதவிகோரினால் அது பற்றிச் சர்க்கார் பரிசீலிக்கும்.

SRI S. RANGANATHA MUDALIAR : Does boat-building include steam boat-building?

THE HON. SRI R. VENKATARAMAN : That comes under the purview of the Government of India, i.e., larger cargo and passenger boats.

SRI K. ANBAZHAGAN : விசைப் படகுகளைத் தனியார் கட்ட, அரசாங்கம் எந்த அடிப்படையில் உதவி செய்ய முன் வருகிறது? எந்த விகிதாசாரத்தில் உதவி கொடுக்கப்படுகிறது? அதே போல் விசைப் படகுகள் மீனவர் இலாகா சார்பிலும் கட்டுப்படுகின்றனவா?

THE HON. SRI R. VENKATARAMAN : மீனவர் இலாகாவினால் கட்டப்படுவதைப்பற்றித் தனிக் கேள்வி கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்களுக்குப் போட வேண்டும். மற்றப்படி, படகு கட்டும் தொழிற்சாலை அமைக்க தனியார் முன்வந்தால்

சர்க்கார் உதவி கிடைக்கும். என்னென்ன விதமான உதவிகள் தேவையென்று கோருகிறார்களோ அதைச் சர்க்கார் பரிசீலித்து உதவி செய்கிறது.

*Free supply of cows and buffaloes to Harijans*

*298 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

ஹரிஜனங்களுக்கு பசுமாடுகளும், எருமைகளும் இலவசமாக வாங்கிக் கொடுப்பதற்கான திட்டமானது அரசாங்கத்தால் பரிசீலனை செய்யப்பட்டுவரின், விவரங்கள் யாவை?

THE HON. SRI P. KAKKAN: There is no such proposal under consideration now.

SRI P. G. MANICKAM: ஸார், நமது அரசாங்கமானது சமுதாய நலத் திட்டம், தேசீய விஸ்தரிப்புத் திட்டம் மூலமாக மக்களுடைய பொருளாதாரத்தை உயர்த்துவதற்காக பசு மாடு களையும், எருமைகளையும் பாதி விலைக்கு வாங்கிக் கொடுக்கிறார்கள். ஆனால் அந்தப் பாதி விலையைக்கூட ஹரிஜனங்கள் கொடுக்க முடியாமல் இருப்பதால் ஹரிஜன நல இலாகா மூலமாக இவர்களுக்கு இலவசமாகவே இவற்றை வாங்கிக் கொடுக்க—சட்டத்தில் இடமில்லாவிட்டாலும், சட்டத்தை மாற்றியாவது—சர்க்கார் ஏற்பாடு செய்வார்களா?

THE HON. SRI P. KAKKAN: உணவு உற்பத்தித் திட்டத்தின் கீழ் ஹரிஜனங்களுக்குக் காளை மாடுகள் இலவசமாக வாங்கிக் கொடுக்கப்பட்டு உற்பத்தியைப் பெருக்க ஏற்பாடு செய்யப்பட்டது. பசு மாடு வாங்கிக் கொடுப்பது அவ்வளவு நல்லதல்ல என்று இந்த அரசாங்கம் முடிவு செய்திருப்பதால் அதை வாங்கிக் கொடுக்கத் தயாராக இல்லை. ஏழை ஹரிஜன மக்களுக்குப் பசு மாடுகள் வேண்டுமானால் கூட்டுறவுச் சங்கங்கள் வைத்து அதன் மூலம் அரசாங்கத்திற்கு விண்ணப்பித்தால் அவர்களுடைய பிழைப்புக்கு ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

SRI A. GOVINDASAMY: ஆதித் திராவிட மக்கள் நிலத்தை உழ காளை மாடுகள் வாங்கிக் கொடுப்பதில் சில காளைகள் நோய் வாய்ப்பட்டு விட்டால், அவர்களுக்கு இந்த அரசாங்கம் எப்படிச் சலுகை கொடுக்கிறது?

THE HON. SRI P. KAKKAN: மனிதர்களுக்கே நோய் வந்து விடுகிறது. மாட்டுக்கும் வந்து விடுகிறது. மாடுகள் நோயுற்றிருந்தால் ஹரிஜன நல இலாகா அதிகாரிக்கு எழுதினால் அதுபற்றிக் கவனிக்கப்படும்.

19th August 1960]

**SRI P. G. MANICKAM :** அவ்வாறு சட்டம் இயற்றப்படாவிடினும், சமுதாய விஸ்தரிப்புத் திட்டம், தேசிய விஸ்தரிப்புத் திட்டம் மூலமாகப் பாதித் தொகையைக் கொடுக்கும்போது ஹரிஜன மக்களுக்கும் அந்தத் தொகையைக் கடனாகவோ இனாமாகவோ கொடுக்க அரசாங்கம் முன் வருமா?

**THE HON. SRI P. KAKKAN :** கூட்டுறவு சங்கத்தின் மூலமாக பாதி கடனாகவும், பாதி இனாமாகவும் கொடுக்க ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது.

MR. SPEAKER : The questions to be answered by the Hon. Minister for Electricity will be taken up on some other date.

*Prices of gold and silver*

* 301 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Industries be pleased to state whether the Government have made any representation to the Union Government to check the rise in prices of gold and silver?

THE HON. SRI R. VENKATARAMAN : No, Sir.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that the price of bullion has increased abnormally in recent times? If so, will the Government consider the question of controlling its price?

THE HON. SRI R. VENKATARAMAN : That must only worry rich people. Government are not very much worried about it.

SRI A. A. RASHEED : May I know, Sir, whether the Government have received any protest from the Women's Organization regarding the increase in the price of gold?

THE HON. SRI R. VENKATARAMAN : None whatever except from Sri Rasheed.

*Sericulture Unit*

* 302 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சேலம் ஜில்லா ஹோசூரில் பட்டு உற்பத்திசாலை நிறுவுவதற்காக " Cetrral Silk Board " மூலம் எவ்வளவு தொகை உதவி கிடைக்கும்?

(ஆ) சென்னை ராஜ்யத்தில் எத்தனை பவுண்ட் " Raw Silk " 1959--60-ல் இறக்குமதி செய்யப்பட்டது?

(இ) 1960--61-ல் எத்தனை ஏகரா நிலப்பரப்பில் பட்டுப் பூச்சிகள் உற்பத்தி செய்யப்படும்?

(ஈ) விவசாயிகளுக்கு எத்தனை ரூபாய் கடனுகை 1960--61-ல் கொடுக்கப்படும்?

[19th August 1960

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) Rs. 7,500 in 1960–61.

(ஆ) This information is not available.

(இ) About 2,550 acres on 31st March 1950. It is estimated that the expansion during 1960–61 will be about 500 acres.

(ஈ) Rs. 90,000.

*Bridge on the Polur–Viralur Road*

* 307 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடஆற்காடு மாவட்டம் போளூரிலிருந்து வீரளூர் செல்லும் பாதையில் பாலம் ( bridge ) கட்ட 6—11—1957-ல் பொது மக்களிடமிருந்து மகசர் வந்ததா?

(ஆ) அப்படியானால் அதன் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (a) No, Sir.

(ஆ) Does not arise.

SRI S. M. ANNAMALAI : போளூரிலிருந்து செல்லும் ரோடானது ஜில்லா போர்டு ரோடாக இருக்கும் காரணத்தால் அந்த ரோடில் பஸ் போக்குவரத்து அதிகமாக இருந்தும் கூட பல ஆண்டுகளாக செப்பனிடப்படாமல் இருக்கிறது. ஒரு ஆறு அந்த ரோட்டின் குறுக்கே நான்கு இடங்களில் வருகிற காரணத்தால் நான்கு பாலங்கள் கட்ட சர்க்கார் நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவார்களா?

MR. SPEAKER : ஒரு "ப்ரிட்ஜே" கட்ட முடியாது என்கிற போது நான்கு ப்ரிட்ஜ்கள் எப்படிக் கட்டுவது?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அங்கு மூன்று பாலங்கள் கட்டுவதற்கு 5,40,000 ரூபாய் தேவைப்படுகிறது. இவைகள் "அப்ரூவ்டு ஸ்கீமில்" இடம் பெருததன் காரணமாக உடனடியாக எடுத்துக் கொள்ளப்படவில்லை.

*Caste names*

* 308 Q.—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) எந்த நபரும் அவருடைய பெயரோடுகூட ஜாதியைத் தெரிவிக்கும் வார்த்தை உபயோகிக்கக்கூடாதென்று சட்டம் இயற்றுவதுபற்றி மத்திய சர்க்கார் நம் மாகாண சர்க்காரின் அபிப்பிராயத்தை அறியத் தெரிவித்திருக்கிறார்களா?

(ஆ) அவ்வாறு தெரியப்படுத்தியிருப்பின், நம் மாகாண சர்க்கார் மத்திய சர்க்காருக்குத் தெரியப்படுத்தியிருக்கும் ஆலோசனையின் விவரங்கள் யாவை?

19th August 1960]

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) No, Sir.

(ஆ) Does not arise.

SRI A. A. RASHEED : May I know whether caste names will be entered during the taking of the next census?

THE HON. SRI C. SUBRAMANIAM : A separate question may be put.

*Roads for Vedanatham village*

* 309 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI P. U. SHANMUGAM) : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) திருவண்ணமலை தாலூகா பெண்ணாத்தூர் பிர்க்கா வேடநத்தம் கிராமத்தில் பாதை அமைப்பது பஞ்சநிவாரண வேலையில் சேர்க்கப்பட்டதா?

(ஆ) சேர்க்கப்பட்டிருந்தால் அதனை நிறைவேற்றாததற்குக் காரணங்கள் யாவை?

THE HON. SRI M. A. MANICKAVELU : Clauses (அ) & (ஆ) The proposal is under the consideration of the Government.

*Minakshi mills*

* 310 *Q.*—SRI A. VEDARATHNAM (on behalf of SRI N. R. THIAGARAJAN) : கனம் பொது மாராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

மதுரையிலிருந்து திருமங்கலம் செல்லும் ரஸ்தாவில் மதுரை நகர் மீனாட்சி மில்லுக்கு முன்னால் உள்ள ஹைவேஸ் ரோடை (மீனாட்சி) மில் அதிபர் தன் உபயோகத்தில் வைத்து இருப்பதைத் தடுக்க சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா?

THE HON. SRI P. KAKKAN : The Collector of Madurai has ordered the eviction of the encroachment on the road by the Meenakshi mills. The eviction proceedings have been stayed by the Collector of Madurai pending disposal of the appeal petition presented by the Director, Sri Meenakshi Mills, against the orders of eviction.

SRI V. SUBBIAH : மீனாட்சி மில் அதிபர் கோயில்பட்டி மில்லில் உள்ளவர்களுக்கு வீடு கட்டிக் கொடுக்க புறம்போக்கு நிலங்களை ஆர்ஜிதம் செய்திருப்பதாகத் தெரிகிறது. அந்த மாதிரித் தகவல் உண்டா?

MR. SPEAKER : தனிக் கேள்வி போடவேண்டும்.

SRI K. VINAYAKAM : What is the sort of encroachment? How much Government poramboke land is involved in this? Is it abutting the road which is being used by the public?

THE HON. SRI P. KAKKAN : This is a national highway. One hundred feet on either side of the road from the centre should be the minimum clearance. But in this case there is only 60 feet from the centre of the road. So, the Collector has ordered eviction.

### *All-India Adivasis' Conference*

* 311 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) இவ்வாண்டு மே மாதம் உதகையில் நடந்த அகில இந்திய ஆதிவாசிகளின் மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் சர்க்காருக்கு கிடைத்தனவா?

(ஆ) அப்படியானால் அவைகளின்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் யாவை?

(இ) மாநாட்டிற்காக சர்க்கார் செலவிட்ட தொகை எவ்வளவு?

THE HON. SRI P. KAKKAN : (அ) Not yet received.

(ஆ) Does not arise.

(இ) The Government have permitted an expenditure up to a ceiling of Rs. 5,125 (rupees five thousand one hundred and twenty-five only).

9-00 a.m. SRI S. M. ANNAMALAI : சர்க்கார் ஆதிவாசி மாநாட்டை நடத்தியதுபற்றி ஐவ்வாது மலையில் வாழும் ஏறத்தாழ 25,000 ஆதிவாசி மக்களுக்கு ஒன்றும் தெரியாது. ஏன் அரசாங்கம் அவர்களுக்கும் அழைப்பு விடுத்திருக்கக் கூடாது?

THE HON. SRI P. KAKKAN : ஆதிவாசி மாநாட்டை சர்க்கார் நடத்தவில்லை. பாரதிய ஆதிவாசிகள் சங்கம்தான் அந்த மாநாட்டை நடத்தியது என்று கனம் அங்கத்தினருக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

SRI S. M. ANNAMALAI : அப்படி நடத்தப்பட்ட மாநாட்டுக்கு சர்க்கார் ஏன் ஐயாயிரம் ரூபாய்க்கு மேற்பட்டு செலவழிக்க வேண்டும்? அதற்கு என்ன காரணம்?

THE HON. SRI P. KAKKAN : ஆதிவாசிகளுக்கு அரசாங்கம் எத்தனையோ நன்மைகள் செய்கின்றது. அதன்படி, அவர்கள் நன்மைக்காக மாநாடு நடத்தினால் அதற்கும் அரசாங்கம் உதவி செய்ய முன்வருகிறது.

### *Gypsies*

* 312 Q.—SRI P. G. MANICKAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவாகள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்யத்திலே எத்தனை நரிக்குறவர்கள் இருக்கிறார்கள்?

(ஆ) இவர்களுள் எத்தனை பேர்களுக்கு அரசாங்கம் வசதி செய்து கொடுத்துள்ளது?

THE HON. SRI P. KAKKAN : (அ) & (ஆ) The information is being collected and will be placed on the table of the House as soon as possible.

19th August 1960]

SRI P. G. MANICKAM : நரிக் குறவர்களுக்கு சர்க்காரால் என்ன என்ன விதமான வசதிகள் தற்போது அளிக்கப்பட்டு வருகின்றன?

THE HON. SRI P. KAKKAN : நிலங்கள் வாங்கிக் கொடுக்கப் படுகின்றன; வீடுகள் கட்டிக் கொடுக்கப்படுகின்றன; இன்னும் குழந்தைகளின் கல்விக்கு வசதி செய்யப்படுகிறது; அதைத் தவிர அவர்கள் கைத்தொழிலில் ஈடுபட்டால் அதையும் கவனிகக அரசாங்கம் முன்வரும்.

SRIMATHI A. S. PONNAMMAL : தலைவர் அவர்களே, அனேக இடங்களில் நரிக் குறவர்களுக்காக வீடு கட்டிக் கொடுத்தும் கூட, அவர்கள் அங்கு வசிக்காமலிருக்கிறார்கள். அதுபற்றி அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுக்கும்?

THE HON. SRI P. KAKKAN : சில இடங்களில் நன்றாக வசிக் கிறார்கள்; மக்களோடு மக்களாகப் பழகி வேலை செய்கிறார்கள். சில இடங்களில் வசிக்காமல் போகிறார்கள் என்றால், என்ன காரணம் என்று அவர்களுக்குத்தான் தெரியும். எனக்குத் தெரியவில்லை.

SRI A. GOVINDASAMY : நெய்வேலிப் பகுதியில் நரிக் குறவர்களுக்கு வீடு கட்டித் தரப்பட்டிருக்கிறது. ஆனால், விவசாயத்திற்குப் போதுமான நிலம் கொடுக்காததால், அந்த இடத்தில் வசிக்காமல் அந்த இடங்களைக் காலி செய்துவிட்டுப் போய்விட்டார்கள். ஆகவே, அவர்கள் விவசாயம் செய்யவும் அரசாங்கம் புறம்போக்கு நிலத்தை ஒதுக்கித்தர முயற்சிப் பார்களா?

THE HON. SRI P. KAKKAN : நெய்வேலிப் பகுதியில் நரிக் குறவர்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. கிணறுகள் வெட்டிக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. நிலமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவர்களுக்குப் போதுமான நிலம் கொடுக்கப்படவில்லை என்று கனம் அங்கத்தினர் நினைக்கிறார்களா என்று தெரியவில்லை.

SRI K. VINAYAKAM : நரிக் குறவர்கள் தினந்தோறும் குளிப்பதில்லை; குளிக்க வேண்டுமென்பதை நம்புவதுமில்லை. அவர்கள் தினந்தோறும் குளிக்கும் வகையில், தண்ணீர் வசதி இருக்கும் இடத்தில் அவர்களைக் குடியிருக்கச் செய்ய முடியுமா? மழை பெய்தாலும்கூட, மழையில் நனையக் கூடாது என்று ஒரு புறமாக ஒதுங்கிக் கொள்கிறார்கள். ஆகவே, அவர்கள் அடிப் படையிலே செய்ய வேண்டிய நல்ல காரியங்களைச் செய்வதற்கு வசதி செய்யாமல், அவர்களுக்கு வீடு, மற்றவை கட்டிக்கொடுப் பதினால் அவ்வளவாகப் பயன் இல்லை. முக்கியமாக, அவர்கள் குளித்து ஆரோக்கியமாக இருக்கக்கூடிய வழிகளைக் கடைப் பிடிக்கச் செய்ய அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI P. KAKKAN : முதலில் வீடு கட்டிக் கொடுத்து, அங்கு வசிக்கும்படி செய்தால்தானே குளிக்க வசதி செய்து கொடுக்கமுடியும்? கூடுமானவரை அந்த நண்பர்கள் நன்றாகக்

[19th August 1960

குளிப்பதற்கும், உடுத்துவதற்கும் முன்வந்துகொண்டிருக்கிறார்கள். இப்பொழுது அவர்களில் சில பேர்களைப் பார்த்தால், அவர்கள் எந்த சமூகத்தைச் சேர்ந்தவர்கள் என்று சொல்லமுடியாமல் ஆச்சரியப்படும் வகையில் இருக்கிறார்கள்.

SRI S. RANGANATHA MUDALIYAR : Do the Government know that so far as these Narikoravars are concerned their nomadic spirit is so great that they refuse to be settled and therefore some coercive measures have to be adopted by the Government to settle them at one place to prevent wastage of manpower?

THE HON. SRI P. KAKKAN : That is why we have asked them to settle in one place and take advantage of the facilities offered by the Government.

*State Labour Advisory Board*

*** 313 *Q.*—SRI S. M. ANNAMALAI :** கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 12, 13—2—1960 தேதிகளில் நடந்த மாநில தொழிலாளர் ஆலோசனை போர்டின் (State Labour Advisory Board) கூட்டத்தில் என்னென்ன முடிவுகள் எடுக்கப்பட்டன?

(ஆ) அவைகளில் அமுலாக்கப்பட்டவை எவை?

THE HON. SRI R. VENKATARAMAN : A statement [a] furnishing the information is placed on the table of the House.

*Bridge across Bhavani river*

*** 314 *Q.*—SRI P. G. MANICKAM :** கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப் பட்டிருக்கின்ற கோயம்புத்தூர் ஜில்லா கோபிச்செட்டிப்பாளையம் தாலுகா பெருந்தலையூர் கிராமத்தில் பவானி ஆற்றின்மீது பாலம் கட்டும் வேலை எப்போது ஆரம்பிக்கப்படும்?

(ஆ) இப்பாலம் கட்டுவதற்காக கணக்கிடப்பட்டிருக்கும் தொகை எவ்வளவு?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (அ) & (ஆ) The detailed estimate and plans are under final scrutiny. The final cost of the work will be worked out and the work taken up for execution after technical sanction is accorded.

*North Arcot District Co-operative Central Bank*

*** 315 *Q.*—SRI S. M. ANNAMALAI :** கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) வடஆற்காடு மாவட்டக் கூட்டுறவு மத்திய பாங்கில் இதுவரை பணம் தள்ளுபடி ( write off ) செய்யப்பட்டுள்ளதா?

[a] Printed as Appendix III on pages 108-109, infra.

19th August 1960]

(ஆ) அப்படியானால், எவ்வளவு பணம் என்ன காரணத்திற்காக?

(இ) 1960-ல் எவ்வளவு பணம் தள்ளுபடி செய்ய வேண்டும் என்று கோரிக்கை வந்துள்ளது?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) Yes, Sir.

(ஆ) & (இ) During 1959–60, a total sum of Rs. 4,402.57 (Rupees four thousand, four hundred and two and naye Paise fifty-seven only) due from three liquidated co-operative societies was written-off by the District Co-operative Central Bank, Vellore, as these societies had no realisable assets. During the current year, one proposal for the write-off of a sum of Rs. 3,299.98 (Rupees three thousand two hundred and ninety-nine and naya Paise ninety-eight only) due from Achamangalam Co-operative Society (liquidated) was received. This amount was also written off by the bank.

*S.S.L.C. Examination*

* 315-(அ) Q.—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) எஸ்.எஸ்.எல்.சி. பரீட்சையில் மாறுதல் செய்வது சம்பந்தமாக அரசாங்கத்தாரால் பரிசீலனை ஏதாவது நடத்தப்பட்டு வருகிறதா ?

(ஆ) அவ்வாறு பரிசீலனை நடத்தப்பட்டுவரின் விவரங்கள் யாவை?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) & (ஆ) The question of reform of examinations in general is being considered by the Government of India and organisations under them in consultation with the State Governments. This Government are co-operating in the Seminars and Conferences held on this subject. Concrete proposals in regard to the reform of the present system of examination have not so far emerged.

SRI K. ANBAZHAGAN : இந்தக் கேள்வியில், 'எஸ்.எஸ்.எல்.சி. தேர்வு நடத்துவதிலே ஏதேனும் மாற்றம் இருக்குமா' என்பது அடிப்படைக் கேள்வியாக அமைந்திருக்கிறது. எஸ்.எஸ்.எல்.சி. தேர்வு நடத்தி, அதற்குப் பிறகு, ஹையர் செகண்டரிக்கு மற்றொரு தேர்வு நடத்தும் நிலைமை ஏற்படுமா? அப்படியானால், ஓராண்டுக்கு இரண்டு தேர்வுகள் எழுதவேண்டிய நிலைமை மாணவர்களுக்கு ஏற்படுமல்லவா?

THE HON. SRI C. SUBRAMANIAM : பொதுவாக பரீட்சை முறையை மாற்றியமைக்க ஏதாவது பரிசீலனையில் இருக்கிறதா என்று கேட்டிருக்கும் கேள்விக்குப் பதில் சொல்லியிருக்கிறேன். பத்தாவது வகுப்பு தீர்ந்ததற்குப் பிறகு ஒரு பரீட்சையும், 11-வது வகுப்பு தீர்ந்ததற்குப் பிறகு ஒரு பரீட்சையும் நடத்துவதா என்ற பிரச்னை தனியாக விவாதிக்கப்பட வேண்டியது.

*Rural drinking water scheme*

* **315-** (ஆ) *Q.*—SRI **S. M. ANNAMALAI**: *கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—*

*(அ) நம் மாநிலத்தில் பாதுகாக்கப்பட்ட கிராமக் குடி தண்ணீர் திட்டத்தைப்பற்றி யு.எஸ். தூது கோஷ்டி ஆராய்ந்து வருகிறதா?*

*(ஆ) அதனுடைய ஆலோசனைகள் சர்க்காருக்குக் கிடைத்தனவா?*

*(இ) அவைகளை அமுல் நடத்த சர்க்கார் எடுத்துக்கொண்ட முயற்சிகள் யாவை?*

THE HON. SRI M. A. MANICKAVELU: (அ) & (ஆ) The Technical Co-operation Mission Experts have submitted their report to the Government of India, who have forwarded a copy to this Government also.

(இ) The Government of India are examining the report and their decisions in the matter are being awaited.

SRI S. M. ANNAMALAI: *அவர்கள் கூறிய முக்கிய ஆலோசனைகள் என்ன என்று சொல்ல முடியுமா?*

THE HON. SRI M. A. MANICKAVELU: *இன்னும் அந்த ரிபோர்ட்டை நானும் பார்க்கவில்லை. பார்த்ததற்குப் பிற்பாடு தான் சொல்லமுடியும்.*

*Fish stalls*

* **315-** (இ) *Q.*—SRI **P. G. MANICKAM**: *கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—*

*(அ) கோயம்புத்தூர் ஜில்லாவிலே எத்தனை முனிசிபாலிடிகளிலும், பஞ்சாயத்து போர்டுகளிலும், மீன்கள் விற்பனை செய்வதற்கான நிலையங்கள் (* stalls *) சர்க்கார் உதவியோடு கூட ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன?*

*(ஆ) 1960-61-ம் வருடத்தில் எத்தனை இடங்களிலே மேற்கண்ட மீன் விற்பனை நிலையங்கள் ஏற்படுத்தப்படும்?*

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: (அ) Municipalities—Twelve (six stalls each by the Coimbatore and Tiruppur Municipalities).

Panchayats—Nil.

(ஆ) So far no proposals in this regard have been received by the Director of Fisheries either from municipalities or from panchayats.

19th August 1960]

SRI P. G. MANICKAM: தற்போது மேற்கொண்டு ஸ்டால்கள் தேவை என்று எத்தனை முனிசிபாலிடிகளும் பஞ்சாயத்துக்களும் சர்க்காருக்கு விண்ணப்பித்திருக்கின்றன? அவைகளுள் 1960-61-ம் ஆண்டில் எத்தனை ஸ்டால்களை எடுத்து நடத்த சர்க்காருக்கு திட்டம் இருக்கிறது?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: கொடுத்திருக்கும் கேள்வி கோயமுத்தூர் ஜில்லாவைப் பொறுத்த அளவில் உள்ளது. அதற்குள்ள பதிலைக் கொடுத்திருக்கிறேன். வேறு தகவல் வேண்டுமென்றால் தனிக் கேள்வி போட வேண்டும்.

*Over-head tanks*

*315 (ஈ) Q.—SRI S. M. ANNAMALAI: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) வட ஆர்க்காடு மாவட்டம், போளூர் தாலூகா, கடலாடி, குன்னத்தூர், குருவிமலை, நாரணமங்கலம் ஊராட்சி மன்றங்களிடமிருந்து 13—7—1959-ல் குடிதண்ணீருக்காக "ஓவர் ஹெட் டாங்குகள்" கட்ட கோரி மகசர்கள் வந்தனவா?

(ஆ) அப்படியானால், அவைகளின் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU: (அ) & (ஆ) The information is being collected and will be placed on the table of the House as soon as possible.

SRI S. M. ANNAMALAI: இந்தத் திட்டம் தீட்டும்போது காம்ப்ரெஹென்ஸிவ் ஸ்கிமில் திட்டப்படுமா? அல்லது தேசிய குடி தண்ணீர்த் திட்டத்தின் கீழ் எடுப்பதற்கு சர்க்கார் ஆலோசனை செய்துகொண்டிருக்கிறதா? பஞ்சாயத்து போர்டுகளிடம் போதிய பணம் இல்லாததால், தேசிய குடி தண்ணீர்த் திட்டத்தின் கீழ் இந்தத் திட்டங்களை சாங்ஷன் செய்ய சர்க்கார் முன்வருமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: அந்தத் தகவல் எல்லாம் என்னிடத்தில் இல்லை. தகவல் கேட்டிருக்கிறோம். வந்ததற்குப் பிற்பாடு சொல்கிறோம்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR: உயர் நிலைத் தண்ணீர்த் தொட்டிகளைக் கட்டிவிட்ட பிறகு, 'தண்ணீர் சுகாதாரமான முறையில் இல்லை' என்று சொல்லப்பட்டு. எலெக்ட்ரிக் பம்ப் செட்டுக்குக் கனெக்ஷன் கொடுக்க மறுக்கப்படுகிறது. ஏற்கெனவே கட்டப்பட்டிருக்கும் தொட்டிகளைப் பொறுத்த வரையில், சட்டத்திலிருந்து விதி விலக்குக் கொடுத்து உத்தரவு அனுப்பப்படுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: தண்ணீர்த் தொட்டி கட்டுவதற்கு முன்னாலேயே, அங்கு கிடைக்கும் தண்ணீர் சுகாதார முறைப்படி சுத்தமான தண்ணீரா என்று பார்த்துத்தான் கட்டுவது உண்டு. அப்படி இல்லாமலும் கட்டிவிடுகிறார்கள்.

இருந்தாலும், அந்தப் பகுதியில் அதைவிட மோசமான தண்ணீர் இருக்கிற காரணத்தால், அந்த விதியைத் தளர்த்தலாம் என்ற யோசனை அரசாங்கத்திற்கு இருக்கிறது.

**Sri M. R. Kandaswami Mudaliyar**: பர்மிஷன் இல்லாமல் செய்ததற்கு தடைகள் போடுவதானால் சரி, இந்த உத்தரவுகள் வருவதற்கு முன்னால், கட்டப்பட்ட தொட்டிகளுக்கு இப்பொழுது விதிவிலக்கு கொடுக்கலாம் என்பதை சர்க்கார் கவனிக்க முடியுமா? வீணாக ரூ. 10,000 வரை செலவு செய்தது வெறுமனே கிடக்கிறது. அங்கு நல்ல தண்ணீரும் இல்லாததால் அதை உபயோகிக்க அனுமதி கொடுக்கும் உத்தேசம் உண்டா?

**The Hon. Sri M. A. Manickavelu**: விதிகளைத் தளர்த்துவதாக உத்தேசம் என்றுதான் சொன்னேன். இந்தத் தண்ணீர் நல்லதாக இல்லாவிட்டாலும், அங்கு இருக்கும் குளம், குட்டைகளிலுள்ள தண்ணீர் மோசமானதாக இருப்பதால், இந்தத் தண்ணீரே மேல் என்ற வகையில், விதியைத் தளர்த்தலாம் என்று உத்தேசம்.

*No confidence motion on the Panchayat Board Presidents*

* 315- (உ) *Q.*—**Sri S. M. Annamalai**: கனம் முதலமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 1958-ம் ஆண்டு பஞ்சாயத்து சட்டப்படி 1960-ல் எத்தனை பஞ்சாயத்து போர்டு தலைவர்கள் மீது நம்பிக்கை இல்லாத தீர்மானங்கள் நிறைவேறின?

(ஆ) எத்தனை அங்கிகரிக்கப்பட்டன? எப்போது?

**The Hon. Sri C. Subramaniam**: (*a*) In 1960, no-confidence motions were passed under the Madras Panchayats **Act**, 1958, against the Presidents of Orathur, Thenampadugai Panchayats in the Thanjavur district and Melpallipattu, Alagusanai **and** Sayanavaram Panchayats in the North Arcot district.

(*b*) The matter is under examination.

**Sri S. M. Annamalai**: ஸார், இந்த பஞ்சாயத்துச் சட்டம் எப்பொழுது அமுலுக்கு வந்தது? இந்த நம்பிக்கை இல்லாத் தீர்மானங்கள் எப்பொழுது நிறைவேற்றப்பட்டன? அதற்கு உண்டான விதிகள் சரியாக இல்லாததால்தான் இப்படி வந்தது என்பது உண்மையா? அப்படியானால், அதை ஏன் சர்க்கார் உடனடியாகச் சரி செய்யவில்லை?

**The Hon. Sri C. Subramaniam**: இதிலே ஒரு சின்ன சட்டச் சிக்கல் இருக்கிறது. 1950-ம் ஆண்டு ஆக்ட் பிரகாரம், "நோ-கான்ஃபிடென்ஸ் மோஷன்" போட இடமில்லை; 1958-ம் ஆண்டு ஆக்ட் படி அப்படி இடம் இருக்கிறது. 1950-ம் ஆண்டு சட்டப் பிரகாரம் எலெக்ஷன் நடந்திருந்தால், அந்த பிரசிடென்ட் மேல் இந்த "நோ-கான்ஃபிடென்ஸ் மோஷன்" கொண்டுவரலாமா

என்பதில் கருத்து வேற்றுமை இருக்கிறது. அது சம்மந்தமான முடிவு, சட்ட நிபுணர்களின் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டு கூடிய சீக்கிரத்தில் எடுக்கப்படும்.

SRI S. M. ANNAMALAI : அப்படிப்பட்ட முடிவு எடுக்க எவ்வளவு காலம் பிடிக்கும்? பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்கள், சில பிராந்தியங்களில் அக்டோபர் 2-ம் தேதி ஏற்பட இருப்பதால், அதற்குள்ளாக அந்த முடிவைச் சர்க்கார் எடுப்பார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM : கூடிய சீக்கிரத்தில் முடிவு எடுக்க முயற்சி செய்யப்படும்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : சில பஞ்சாயத்துக்கள் நல்ல முறையில் நடை பெறுவதற்கு, அவற்றை இரண்டாகப் பிரித்தால், ஒவ்வொரு பஞ்சாயத்தும், நல்ல வருவாய் இருப்பதனால், நல்ல முறையில் இயங்க முடியும் என்று கேட்டிருப்பதால், அம்மாதிரிப் பஞ்சாயத்துக்களை இரண்டாகப் பிரித்துக் கொடுக்க சர்க்கார் முயற்சி எடுக்குமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : அது அடுத்த கேள்வி சம்பந்தமானது.

MR. SPEAKER : இது பிரசிடெண்ட் மேல் "நோ-கான்பிடன்ஸ் மோஷன்" சம்பந்தமானது. அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம் ?

SRI A. GOVINDASAMY : இந்தக் கேள்வியின் பதிலில் கொடுக்கப்பட்ட பஞ்சாயத்துக்களுக்கு 1958-ம் வருஷ சட்டம் நிறைவேறிய பிறகு எலெக்ஷன் நடந்ததா என்று சொல்லுவார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM : என்னிடம் இருக்கும் தகவல்படி, இவர்கள் 1950-ம் வருஷ சட்டப் பிரகாரம் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்.

*Bifurcation of Panchayats*

* 315-ஊ Q.—SRI S. M. ANNAMALAI : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) வடஆற்காடு மாவட்டத்தில் பஞ்சாயத்துக்களை பிரிக்க வேண்டுமென்று எத்தனை கிராமங்களிலிருந்து கோரிக்கைகள் வந்தன?

(ஆ) அவைகளின் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் என்ன ?

(இ) போளூர் தாலுகா தேப்பனந்தல், வெங்கட்டம் பாளையம் கிராமங்களிலிருந்து மகசர் வந்ததா?

(ஈ) அப்படியானால் அதன் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன ?

[19th August 1960

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Representations were received in respect of 60 villages in the North Arcot district for bifurcation of panchayats.

(*b*) A statement [a] is laid on the table of the House.

(*c*) Yes, Sir.

(*d*) The attention of the hon. Member is invited to items 32 and 14 respectively of the statement referred to in clause (*b*).

SRI S. M. ANNAMALAI : ஸார், சில பஞ்சாயத்துக்களைப் பிரிப்பதுபற்றி, "It is under consideration" என்று சொல்லப் பட்டிருக்கிறது. அக்டோபர் 2-ம் தேதி சில பிராந்தியங்களில் பஞ்சாயத்து யூனியன் ஏற்பட இருக்கிறது. அதற்கு முன்னால், பஞ்சாயத்துக்களைப் பிரிப்பதா, பிரிக்காமல் இருப்பதா என்பதை உடனடியாகப் பரிசீலனை செய்து, உத்தரவு போடுவார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதுதான் பரிசீலனையில் இருக்கிறது; பரிசிலனை முடிந்ததும், உத்தரவுகள் பிறப்பிக்கப் படும்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : ஆட்டியாம்பட்டிக் கிராம பஞ்சாயத்தைப் பிரிக்க வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டிருக்கிறார்கள். பஞ்சாயத்து யூனியன் ஏற்படுவதற்கு முன்னால், அந்தப் பஞ்சாயத்துக்களை உடனடியாக ஏற்படுத்த முயற்சிப்பார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM : என்னென்ன விண்ணப் பங்கள் வந்திருக்கின்றனவோ, அவற்றைப் பரிசீலனை செய்து முடிவு எடுக்க வேண்டும்.

SRI A. GOVINDASAMY : ஒரே மணியக்காரர் அதிகாரத்தின் கீழ் ஒரு மைல் விஸ்தீரணத்தில் 4, 5 கிராமங்கள் இருந்து, 3,000 4,000 ஜனத்தொகை கொண்ட பஞ்சாயத்துக்கள் இருக்கின்றன. அதனால் கிராமத்தார்கள் அல்லல்படுகிறார்கள்.

THE HON. SRI C. SUBRAMANIAM : அதைப்பற்றித்தான் சொன்னேன், கஷ்டம் இருக்கிறது என்று. ரொம்ப சிறு கிராமமாகப் போய்விட்டால், வசதி இல்லாமல் பஞ்சாயத்து நன்றாக நடைபெற முடியாமல் போய்விடும். போட்டிகள் இருப்பதனாலும், கிராமங்களில் கஷ்டம் ஏற்படுகிறது. ஆகவே, ஒரு பொது விதி இதற்குச் செய்ய முடியவில்லை. அந்தந்த கிராமங் களின் சூழ்நிலையை அனுசரித்துச் செய்ய வேண்டியிருக்கிறது.

SRI S. M. ANNAMALAI : ஸார், தெப்பனந்தாள் கிராம மக்கள் தனிப் பஞ்சாயத்துக் கோரி, மகஜர் வந்து, இரண்டு முறை பரிசீலனை செய்து, விடப்பட்டிருக்கிறது என்று சொல்லப் பட்டிருக்கிறது. அங்கே சந்தை இருக்கிறது; சந்தையில் வரும் வருமானத்தை 16 : 6 என்ற முறையில் பிரித்து அந்த அடிப் படையில் பஞ்சாயத்தை இரண்டாகப் பிரிக்கலாம் என்று மக்கள் கோரியிருக்கிறார்கள். அதைப் பிரித்துக் கொடுக்க சர்க்கார் முன் வரக் கூடாதா என்று கேட்க விரும்புகிறேன்.

---

[a] Printed as Appendix IV on pages 110–115 infra.

19th August 1960]

THE HON. SRI C. SUBRAMANIAM : அது சட்டப்படி செய்யக் கூடியதாக இருக்க வேண்டும். ஒவ்வொரு தனிப்பட்ட கிராமத்தைப் பொறுத்த பிரச்சினைகளையும் பரிசீலனை செய்து முடிவு எடுக்க வேண்டியிருக்கிறது.

*Street Lights*

* 315-(எ) *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) வட ஆற்காடு மாவட்டம் போளூர் தாலுகாவில் எத்தனை கிராமங்களுக்கு தெரு விளக்குப் போடவேண்டுமென்று பஞ்சாயத்துக்களிடமிருந்து கோரிக்கைகள் வந்தன?

(ஆ) அனுமதிக்கப்பட்ட கிராமங்களில் வேலைகள் முடிந்து விட்டனவா?

(இ) இல்லையானால், காரணமென்ன?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (அ) No representations have been received by the Government from any of the panchayats in the Polur taluk of North Arcot district for provision of street lighting.

(ஆ) A list ஆ of panchayats in Polur taluk which have been provided with street lighting is placed on the table of the House.

(இ) Does not arise, Sir.

MR. SPEAKER : அடுத்த கேள்வி, 315-எ . . . .

SRI A. GOVINDASAMY : ஒரு "கிளாரிபிகேஷன்" ஸார். அறிக்கையில் எந்தெந்த பஞ்சாயத்துக்களில் லைட்டுகள் போடப் பட்டிருக்கின்றன என்று கொடுத்திருக்கிறது. கேள்வியில் எத்தனை கிராமங்களுக்கு வேண்டுமென்று கேட்டார்கள் என்று இருக்கிறது. . . .

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : கேள்வியின் (ஆ) என்ற பகுதிக்கு பதிலளிக்கும் முறையில், அனுமதிக்கப்பட்ட கிராமங்களில் வேலைகள் முடிந்துவிட்டனவா என்றதற்கு, அந்த பஞ்சாயத்துக்களின் பெயர்களைக் கொடுத்திருக்கிறது.

*Use of Thiru for Sri*

* 315 (ஏ) *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) "ஸ்ரீ" என்ற சொல்லை மாற்றி "திரு" என்று எழுது வதற்கு அனுமதி கோரி எத்தனை நகராட்சி மன்றங்களிடமிருந்து தீர்மானங்கள் வந்தன?

(ஆ) அவற்றில் அனுமதிக்கப்பட்டவை எத்தனை?

ஆ Printed as Appendix V on page 116 infra.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) Corporation of Madras, seventeen municipal councils and one panchayat, Sir.

(*b*) The matter is under the consideration of the Government.

**SRI S. M. ANNAMALAI :** நம் இராச்சியத்தில், தமிழே ஆட்சிமொழி, தமிழே போதனைமொழி என்று சொல்லும்போது, உடனடியாக அந்தத் தீர்மானங்களை ஆமோதிக்கக் கூடாதா? பரிசிலனை செய்யும் விஷயத்தில் ஏன் தாமதம்?

**THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON :** பரிசீலனை முடிந்ததும், பதில் கொடுக்கப்படும்.

**SRI K. ANBAZHAGAN :** சென்னை நகராண்மைக் கழகமும், பஞ்சாயத்து அலுவலகங்களும் கொடுத்திருக்கும் தீர்மானங்களை அரசாங்கம் அனுமதிக்க மறுப்பது ஏன்?

**THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON :** அவர்கள் தீர்மானத்தை அரசாங்கம் கவனிக்காமல் இல்லை.

SRI K. VINAYAKAM : May I know what is the odium attached to the word " Sri " and what is the sanctity attached to the word " Thiru " excepting that they come from two different languages which means the same as " Mr." in English literature?

MR. SPEAKER : To whom is the hon. Member putting the question? The hon. Member must ask the municipality concerned. How can the Hon. Minister answer it?

SRI K. VINAYAKAM : The Hon. Minister can give the Government's views on the question.

THE HON. SRI C. SUBRAMANIAM : The point for consideration is we should have uniform expressions to be adopted in this. But if anybody were going to address a person as " Thiru " nobody is going to object to it.

**SRI A. VEDARATHNAM :** தமிழ் மொழியிலேயே இப்பொழுது, பல வடமொழி எழுத்துக்கள், ஜ, ஷ, ஸ, ஹ போன்றவை இணைந்து சேர்ந்திருக்கின்றன. அவைகளைத் தமிழ் மொழியாகவே எடுத்துக் கொள்வதில் தவறு என்ன இருக்கிறது?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** தவறு ஒன்றுமில்லை; " திரு " என்று போடுவதிலும் தவறு இல்லை என்பது என் கருத்து. அப்படிப் போடுகிறவர்களுக்கு ஆட்சேபணை ஒன்றும் இல்லை, தடை ஒன்றும் இல்லை.

**SRI K. ANBAZHAGAN :** வடமொழி எழுத்துக்களைப் படிக்க முடியாதவர்கள் இருக்கிறார்கள். ஆகவே, அவைகளைத் திருத்த அரசாங்கத்தார் முன் வருவார்களா?

19th August 1960]

THE HON. SRI C. SUBRAMANIAM : அதை எழுத முடியாதவர்கள், "திரு" என்று எழுதுகிறார்கள். சர்க்கார் காரியாலயங்களில் உள்ளவர்களுக்கு அதை எழுதத்தெரியும். தெரிந்தவர்களும் "திரு" என்று போடலாம்; தடை ஒன்றுமில்லை.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இந்த வார்த்தைகளை உபயோகிக்கும் முறையிலே, "திரு" என்பதை "ஸ்ரீ" என்பதற்குப் பதிலாகப் போட வேண்டும் என்று சொல்கிறவர்கள், அதே முறையில், தங்கள் பெயர்களில் வரும் எழுத்தையும்—சிலர் அப்படி வைத்திருக்கிறார்கள் இன்னமும்—மாற்ற, அதற்கும் அரசாங்கம் திட்டம் போடுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : தனிப்பட்டவர்களின் உரிமையைப் பாதிக்கக் கூடியதைச் செய்ய முடியாது; பொதுக் காரியங்களில் எப்படி உபயோகிக்க வேண்டும் என்றுதான் நாம் செய்ய முடியும்.

MR. SPEAKER : Questions are over.

[*Note*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

II. CALLING ATTENTION TO THE LOCK-OUT IN THE SUN BEEDI FACTORY, JALARPET.

MR. SPEAKER : I have received notice under rule 41 from Sri V. K. Kothandaraman calling the attention of the hon. Minister for Industries to a matter of urgent public importance.

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I beg to call the attention of the Hon. the Minister for Industries to a matter of urgent public importance, viz., lock-out by the management of the Sun Beedi Factory, Jalarpet, North Arcot district.

ஸார், சமீபத்தில் பீடித் தொழிலாளர்களுக்கு வேண்டிய பாதுகாப்புச் சட்டமும், அது போன்று குறைந்த பட்சக் கூலிச் சட்டமும் வந்திருந்தும்கூட இன்றைய தினம் முதலாளிகளால் கதவடைப்பு செய்யப்படுகிறது. தொழிற்சங்கப் பிரதிநிதிகளையும், முதலாளிகளுடைய பிரதிநிதிகளையும் அழைத்து ஒரு ஒப்பந்தம் செய்ததற்குப் பிறகு மீண்டும் இன்றைக்கு இந்த மாநிலத்தில் பல இடங்களில் முதலாளிகள் கதவடைப்பு செய்து தொழிலாளர்களை வேலை இல்லாத நிலைமைக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள் என்பது இன்றைக்கு சர்க்காருக்கு நன்றாகத் தெரிந்த விஷயம். இது போன்று தான் இந்த மாதம் மூன்றாம் தேதி முதற்கொண்டு ஜோலார்பேட்டை ஸன் பாக்டரி பீடித் தொழில் முதலாளி கதவடைப்பு செய்திருக்கிறார்கள். அதன் விளைவாக சுமார் 1,500 தொழிலாளர்கள் வேலை இழந்து அவர்களுடைய குடும்பங்கள் பட்டினியாக இருக்கின்றன. அப்படிப்பட்ட ஒரு நிலைமை இப்பொழுது அங்கே ஏற்பட்டிருக்கிறது. குறைந்த கூலிக்கு அவர்கள் வேலை செய்ய வேண்டும் என்பதுதான் இந்தக் கதவடைப்பின்

[Sri V. K. Kothandaraman] [19th August 1960

ஒரே நோக்கம். ஆகவே இன்றைக்கு அவர்களுடைய நோக்கமெல்லாம் எப்படியாவது குறைந்த கூலிக்கு அவர்களைப் பணிய வைக்கவேண்டும், அந்த முறையில் அவர்களிடமிருந்து வேலை வாங்க வேண்டும் என்பது தான். அது காரணமாக இருப்பதால் இதைப்பற்றி உடனடியாகப் பரிசிலனை செய்து இதற்குப் பரிகாரம் தேடுவதில் கவனம் செலுத்தப்பட வேண்டும் என்பதற்காக வேண்டித்தான் இந்தச் சந்தர்ப்பத்தில் கனம் அமைச்சர் அவர்களுடைய ஞாபகத்திற்குக் கொண்டு வரும் முறையில் இதைக் கொண்டு வந்திருக்கிறேன். ஆகவே இதில் தீவிர கவனம் செலுத்த வேண்டும் என்கிற முறையில் அதிகாரிகளின் மூலமாக இதில் தீவிர கவனம் செலுத்தி இதைப்பற்றி பரிசிலனை செய்ய வேண்டுமெனக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, on the 24th July 1960, the North Arcot District Beedi Workers' Union represented to the Labour Officer, Vellore, that the management of Sun Beedi Factory had locked out about 30 branches of the factory with effect from 22nd July 1960, throwing out of employment about 1,500 workers without any notice.

The Labour Officer, Vellore, who contacted the proprietor has reported that prior to 11th July 1960, the proprietor was paying Rs. 1-6-0 for 1,000 Jadi beedies and two annas as commission to the agent. Under the settlement dated 11th July 1960 reached between the representatives of the employers and employees of the Beedi Industry the rate of wages for Jadi beedi was revised as Rs. 1.69 for 1,000 beedies. The proprietor was accordingly paying this rate of Rs. 1.69 as well as annas two as commission to the agents. From the first week of August, however, the proprietor discontinued the commission with the result that the agents refused to take raw materials for distribution to the workers, and the workers were thrown out of employment.

The Labour Officer has been instructed to persuade the proprietor to pay wages as per the settlement and also the commission to the agents or in the alternative to employ the workers directly under him and pay wages as per the settlement. The Madras Provincial Beedi Factory Owners Association and the North Arcot District Beedi and Tobacco Merchants Association have also been requested to advise their member beedi factory owners to pay wages according to the settlement, dated 11th July 1960 and to continue to pay the commission to the agents. I may add that the Government are taking every step in this behalf.

III.—NON-OFFICIAL BUSINESS.

MR. SPEAKER : To-day we have non-official business. We shall take up Bills. The first Bill on the agenda is the Madras 'Swayamariyathai' Marriages Validation Bill, 1959 (L.A. Bill No. 30 of 1959).

A. BILLS.

(1) THE MADRAS 'SWAYAMARIYATHAI' MARRIAGES VALIDATION BILL, 1959 (L.A. BILL NO. 30 OF 1959).

SRI S. M. ANNAMALAI : I beg to move—"that the Madras 'Swayamariyathai' Marriages Validation Bill, 1959 (L.A. Bill No. 30 of 1959, be taken into consideration."

SRI A. GOVINDASAMY : Sir, I second the motion.

MR. SPEAKER : Is not the hon. Member Sri S. M. Annamalai making a speech?

**SRI S. M. ANNAMALAI :** நான் பேசப்போகிறேன். ஸார், சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இந்த சுய மரியாதைத் திருமணம் ஏறத்தாழ இருபது அல்லது முப்பது ஆண்டு காலமாக நம் மாநிலத்தில் நடைபெற்று வருகின்றது. இப்படிப்பட்ட சுய மரியாதைத் திருமணங்கள் எல்லாம் சட்டப்படி செல்லுபடி யாகாது என்று சென்னை உயர் நீதி மன்றம், இன்னும் பல நீதி மன்றங்கள் தீர்ப்புக்கூறி இருக்கின்றன. அப்படித் தீர்ப்பு அளித் ததன் காரணமாக பல லட்சக் கணக்கான குடும்பங்கள் நம் முடைய மாநிலத்திலும் சரி, வேறு மாநிலங்களிலும் சரி, பாதிக் கப்பட்டிருக்கின்றன. அப்படி சுய மரியாதைத் திருமணங்கள் செய்து கொண்டதனால் அப்படிச் செய்து கொண்டவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளுக்கு சொத்துரிமை இல்லை என்று நீதி மன்றங்கள் தீர்ப்பு அளித்திருக்கின்றன. இதனால் பல லட்சக் கணக்கான குடும்பங்கள் பாதிக்கப்பட்டிருக்கின்றன. அதன் காரணமாகத்தான் இந்த சுயமரியாதைத் திருமணங்கள் எல்லாம் நம்முடைய மாநிலத்தில் செல்லுபடியாக வேண்டும் என்பதற் காகத்தான் இப்படிப்பட்ட ஒரு சட்டத்தைக்கொண்டு அப்படிப் பட்ட திருமணங்களை செல்லுபடியாக்க வேண்டும் என்பதற் காகவே இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறேன். இப்படிப் பட்ட சுயமரியாதைத் திருமணங்கள் எல்லாம் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள்தான் செய்து கொண்டி ருக்கிறார்கள் என்பதற்காக இதைக் கொண்டு வரவில்லை. எத்தனையோ பேர்கள் செய்து கொண்டிருக்கிறார்கள். பல அமைச்சர்கள்கூட சுய மரியாதைத் திருமணங்களுக்கு தலைமை தாங்கி நடத்தி வைத்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட திருமணங் களும் செல்லுபடியாகும்படியாகச் செய்ய வேண்டும் என்ப தற்காகத்தான் இதைக் கொண்டு வந்திருக்கிறேன். இப்பொழுது அப்படிப்பட்ட திருமணங்கள் எல்லாம் செல்லுபடியாகாது என்று சொல்லப்பட்டிருக்கிறபடியால் பல லட்சக்கணக்கான பிள்ளைகள் சொத்துக்கு உரிமை இல்லை என்று சொல்லக்கூடிய காரணத்தால் அப்படிப் பட்ட மக்களுக்கு பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்பதற்காக அந்தத் திருமணங்கள் செல்லுபடியாக இருக்கவேண்டும், அதைப் போலவே வருங்காலத்தில் செலவு இல்லாமல் சுய மரியாதைத்

திருமணங்கள் அதிகமாக நடைபெற வேண்டும் என்பதற்காகவும், ஏனென்றால் தற்சமயம் இருக்கக்கூடிய வைதீக முறைப்படி நடக்கக்கூடிய திருமணங்களுக்கு அதிகப்படியாக செலவு ஆகிறது என்கிற காரணத்தால் செலவு இல்லாமல் சுயமரியாதைத் திருமணங்கள் செய்துகொள்ள அநேகம் பேர்கள் முன்வருவார்கள் என்ற காரணத்தினாலும், அதற்கு அனுகூலமாக அந்தத் திருமணங்கள் எல்லாம் செல்லுபடியாகும்படியாக இருக்க வேண்டும் என்பதற்காகவும் இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. செலவு குறைவாக அந்தந்த இடத்திலுள்ள தாசில்தாரிடம் சென்று இப்படிப்பட்ட திருமணங்களை நடத்திக் கொள்ளலாம் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி தாசில்தாரிடம் இதற்கு என்று பிரத்யேகமாக வைக்கப்பட்டிருக்கும் ரிஜிஸ்தரில் பதிவு செய்துகொண்டால் போதும் என்றும் வகுக்கப்பட்டிருக்கிறது. அதைத் தவிர வருங்காலத்தில் பல ஆட்சி மன்றங்கள் ஏற்படப்போகின்றன. அந்த அந்த இடங்களில் இப்படிப்பட்ட திருமணங்களை பதிவு செய்து கொள்ளலாம் என்று இந்த மசோதாவில் சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் பல லட்சக் கணக்கான குடும்பங்கள் பாதுகாக்கப்படும். நான் கொடுத்திருக்கக்கூடிய மசோதாவில் இதற்குமுன் சுயமரியாதைத் திருமணங்கள் செய்து கொண்டவர்கள் இந்தச் சட்டம் அமுலுக்கு வந்த பிறகு இரண்டு வருஷத்திற்குள் அவர்கள் தாசில்தாரிடம் விண்ணப்பம் செய்துகொண்டு திருமணம் நடந்த சமயத்தில் யார் இருந்தார்களோ அப்படிப்பட்டவர்களில் இரண்டு சாட்சிகளை வைத்துக்கொண்டு தாசில்தாரிடம் பதிவு செய்துகொள்ள வேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறேன். அதைப்போலவே வருங்காலத்தில் திருமணங்கள் செய்து கொள்ளக்கூடியவர்கள் அந்தந்த ஊராட்சி மன்றங்களில் தங்களுடைய திருமணங்களைப் பதிவு செய்துகொள்ளலாம் என்றும் குறிப்பிட்டிருக்கிறேன். அங்கு அதற்கு என்று ஒரு ரிஜிஸ்தர் வைக்கப்பட்டிருக்க வேண்டும் என்றும் குறிப்பிட்டிருக்கிறேன். பழைய காலத்தில் செய்து கொண்ட திருமணங்கள் எல்லாம் செல்லும்படியாக வேண்டும் என்பதற்காகவும் அதன் மூலம் ஏற்பட்ட குழந்தைகளுக்கு சொத்துரிமை அளிக்கவேண்டும் என்பதற்காகவும் அவர்களுக்கு பாதுகாப்பு அளிக்கும் முறையில் அந்தக் குடும்பங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் முறையில் அப்படி திருமணங்கள் செய்து கொண்டவர்கள் இரண்டு சாட்சிகளை வைத்துக்கொண்டு அந்தந்த ஊர் தாசில்தார் முன்னிலையில் பதிவு செய்துகொள்ளவேண்டும் என்றும் இந்த மசோதாவில் நான் குறிப்பிட்டிருக்கிறேன்.
9–30 a.m. இதுபோன்ற மசோதா முன்பு கொண்டு வரப்பட்டது. அப்படிக் கொண்டு வரப்பட்ட மசோதாவுக்கு பல திருத்தங்கள் கொடுக்கப்பட்டன. ஆனால் என்ன காரணத்தினாலோ பிறகு வேண்டுமானால் எடுத்துக் கொள்ளலாம் என்று விட்டுவிட்டார்கள். அந்தக் காரணத்தையொட்டி உள்துறை அமைச்சர் அவர்கள் சட்டமன்ற உறுப்பினர்கள் கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்லும்போது, "அந்தத் திருமணங்களை ஏன் செல்லுபடியாக்கக்கூடாது, நீங்கள் மசோதா கொண்டு வாருங்கள், அதன்பிறகு சர்க்கார் தங்கள்

19th August 1960] [Sri S. M. Annamalai]

அபிப்பிராயத்தை வெளியிடும்'', என்று சொல்லியிருக்கிறார்கள். அந்தக் காரணத்தையொட்டித்தான் இந்த மசோதாவை நான் தயாரித்து சட்டமன்றத்தின் முன்னால் வைத்திருக்கிறேன். இதைச் சர்க்கார் அவர்கள் நல்ல மனத்துடன் பரிசிலனை செய்து, இதை உடனடியாகச் சட்டமாக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

**SRI A. GOVINDASAMY** : கனம் சட்டமன்றத் தலைவர் அவர்களே, இந்த சுயமரியாதைத் திருமணங்களை செல்லுபடியாக்கும் மசோதாவை எங்கள் கட்சியின் சார்பில் கனம் அங்கத்தினர் திரு. அண்ணாமலை அவர்கள் கொண்டு வந்திருப்பதை வரவேற்று அதில் என்னுடைய கருத்தையும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இதேமாதிரி ஒரு மசோதாவை ஏற்கனவே இங்கே நிதி இலாகா அமைச்சராக இருந்த ஸ்ரீ குட்டிகிருஷ்ண நாயர் அவர்கள் இந்த அவையில் கொண்டு வந்தார்கள். அதைப்பற்றியும் பேசப்பட்டது. அதைப் பொறுக்குக் கமிட்டிக்கு விட்டார்கள். பிறகு என்ன காரணத்தினாலோ அதை மீண்டும் பரிசிலனைக்குக் கொண்டு வராமலேயே விட்டுவிட்டார்கள். இந்தமாதிரி திருமணங்கள் மலையாள பகுதியில், கேரளப் பகுதியில் அதிகமாக நடப்பதை அன்றையதினம்—அந்த மசோதாவைப் பிரேரித்த நேரத்தில்—இங்கே சட்ட அமைச்சராக இருந்த ஸ்ரீ குட்டிகிருஷ்ண நாயர் அவர்கள் தெளிவாக எடுத்துக் கூறினார்கள். அதுபோல் சடங்கு சம்பிரதாயமாக நடக்காத திருமணங்களைச் செல்லுபடியாக்க வேண்டுமென்ற கருத்து நல்லமுறையில் வலியுறுத்தப்பட்டது. ஆனால் இம்மாதிரி நடக்கிற சுயமரியாதைத் திருமணங்கள் செல்லுபடியாகாது என்று உயர்நீதி மன்றம் தீர்ப்பு அளித்த காரணத்தினால்—இதுவரையில் நடந்த சுயமரியாதைத் திருமணங்கள், இனிமேல் நடக்கப்போகிற சுயமரியாதைத் திருமணங்கள் செல்லுபடியாகும் என்று செய்வதற்கு இந்தச் சட்டம் வேண்டுமென்று இங்கே சொல்கிறோம். சடங்கு பூர்வமாகச் செய்யப்படுகிற திருமணங்கள் மட்டும் எப்படிச் செல்லுபடியாகும்? சடங்குகள் இல்லாமல், குறிப்பிட்ட தலைவரை வைத்து, திருக்குறள் போதிக்கப்பட்டு—அதில் உள்ள நல்ல கருத்துக்கள் எல்லாம்—திருமணச் சம்பந்தமாக அவசியமான பல நல்ல கருத்துரைகள் எல்லாம் வழங்கப்பட்டு—இம்முறையிலே செய்யப்படுகிற திருமணங்கள் ஏன் செல்லாது என்று கேட்கிறேன். வேத நெறிப்படி செய்யப்படுகிற சடங்குகள், சொல்லப்படுகிற மந்திரங்கள் எல்லாம் நமக்குப் புரியக்கூடிய நிலைமையில் இருக்கிறதா என்றால் அதுவும் இல்லை. அவை ஒன்றும் நமக்குப் புரியவும் இல்லை. நமக்கு என்றால்—பி.ஏ., எம்.ஏ., படித்தவர்களுக்குங்கூடப் புரியவில்லை. அந்தமாதிரி செய்வதினாலே விசேஷ பலன், முன்னேற்றங்கள் இருக்கிறதா என்றால் அதுவும் கிடையாது. 'ஏதோ முன்னோர்கள் செய்தார்கள். அந்த முறைப்படி செய்கிறோம்', என்று நமக்குப் புரியாத வடமொழியில் மந்திரங்களை எல்லாம் சொல்லிக்கொண்டு, புரியாத சடங்குகள் பலவற்றைப் பின்பற்றிக்கொண்டு போவதில்

பயன் என்ன? அந்தத் திருமணத்திற்கு சாட்சிகளாக நம் கண்ணுக்குத் தெரியாத மும்மூர்த்திகளையும், தேவர்களையும் வைக்கிறோம். ஆனால் அப்படிச் செய்யப்படுகிற திருமணங்களிலேயே சங்கடங்கள் ஏற்பட்டு கோளாறுகள் ஏற்பட்டு கோர்ட் மூலமாக அவை செல்லுபடியாகத் தக்கதா என்று விசாரணைக்கு வருகிறபோது—அந்தத் திருமணத்தைப் பண்ணிவைத்த புரோகிதர்கள் கோர்ட்டுக்கு வந்து சாட்சி சொன்னதாகத் தெரியவில்லை. ஆனால் சுயமரியாதை முறையில் செய்யப்படுகிற திருமணங்களுக்கு —நிச்சயமாக அந்தத் திருமணங்களைச் செய்து வைக்கிறவர்களே கோர்ட்டுக்குச் சாட்சிகளாக வருவார்கள். கடந்த முப்பது ஆண்டு காலமாக குறிப்பிட்ட கட்சிக்காரர்களினால் மட்டும் நடத்தப்பட்டு வந்த நிலைமை மாறி இப்போது சுயமரியாதைத் திருமணம் பல ரூபத்தில் நடத்தப்படுகிறது. காங்கிரஸ் கட்சி சுயமரியாதைத் திருமணம் என்றால் கதர் திருமணம் என்று பேசுவார்கள். கம்யூனிஸ்டுக் கட்சித் திருமணம் என்றால் புரட்சிகரமான திருமணம் என்பார்கள். (ஸ்ரீ எம். கல்யாணசுந்தரம்: அப்படியொன்றும் நான் பார்க்கவில்லை). திரு கல்யாணசுந்தரம் அவர்கள் பார்க்கவில்லை என்கிறார்கள். ஆனால் புதுவைப் பகுதியில் திரு. சுப்பையா அவர்கள் தலைமையில் நடந்த திருமண அழைப்பிதழில் புரட்சித் திருமணம் என்று போடப்பட்டிருந்தது. (ஸ்ரீ கே விநாயகம்:—வோட்டுக்காக.) நண்பர் திரு. விநாயகம் அவர்கள் வோட்டுக்காக என்கிறார். அது அவர்களுடைய கருத்தாக இருக்கலாம். நான் வேண்டுமானாலும் அவை ஒவ்வொன்றுக்கும் ஒரு காரணம் சொல்லக்கூடும். கதர் திருமணம் என்றால் இரண்டுபேரும் கதராடை அணிந்துகொண்டு, காங்கிரஸ் கட்சியின் கொள்கைகளை இரண்டு பேரும் ஆதரிக்கக்கூடியவர்களாக இருக்கலாம். புரட்சித் திருமணம் என்றால் இரண்டுபேரும் அந்தப் புரட்சிக் கருத்துக்களை ஆதரிக்கின்ற கொள்கை உடையவர்களாக இருக்கலாம். ஒருவர் ஒரு கொள்கைக்காரராக, இன்னொருவர் இன்னொரு கொள்கைக்காரராக அமைந்து அதனால் வாழ்க்கையில் சங்கடங்கள் ஏற்படுவதற்குப் பதிலாக இரண்டு பேர்களும் ஒரே கருத்துடையவர்களாக அமைவதை அக்குறிப்புகள் காட்டலாம்.

நான்கூட ஒரு சுயமரியாதைத் திருமணத்திற்கு—அதுவும் கனம் அமைச்சர் திரு. கக்கன் அவர்கள் தலைமையில் நடந்த திருமணத்திற்குச் சென்றிருந்தேன். உண்மையில் அன்று அவர்கள் அங்கு பேசிய கருத்துக்களை அரசாங்கம் ஏற்றுக்கொள்ள வேண்டும். இன்றையதினம் ஒரு சாதிக்காரர்களுக்குள்தான் திருமணம் நடக்கவேண்டுமென்ற கருத்து நாட்டில் இருந்து வருகிறது. அது மாறியாக வேண்டுமென்ற கருத்து உண்மையில் மிகச் சிறந்ததாகும். (கனம் ஸ்ரீ பி. கக்கன் :—அது சுயமரியாதைத் திருமணம் அல்ல.) திரு. கே. பி. எஸ். மணி திருமணத்திற்கு அவர்கள் தலைமை வகித்து நடத்தியதைத்தான் நான் குறிப்பிடுகிறேன். நாளைக்கு அதுவும் கோர்ட்டுக்குச் சென்றால் அது எப்படிச் செல்லுபடியாகும் என்று தெரியவில்லை. ஆகவேதான் இப்பேர்ப்பட்ட திருமணங்களை செல்லுபடியாக்கத்தக்க இந்த

19th August 1960] [Sri A. Govindasamy]

மசோதாவை யாவரும் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று நாங்கள் கேட்டுக்கொள்கிறோம். அதனால் நாங்கள் இதைச் சுயமரியாதைத் திருமணம் என்று சொன்னால் யாரும் தப்பாக நினைக்கவேண்டாம் என்று அமைச்சர் அவையைக் கேட்டுக்கொள்கிறேன். (கனம் ஸ்ரீ கே. காமராஜ்:—நாங்கள் ஒன்றும் நினைக்கவில்லை.) நீங்கள் நினைத்துக்கொள்ளமாட்டீர்கள். நாட்டில் இன்றுள்ள நிலைமை மாறி ஒரு சாதிவிட்டு இன்னொரு சாதியில் திருமணம் செய்து கொள்ளக்கூடிய நிலைமை வரவேண்டும். இதற்கு எடுத்துக் காட்டாக அமைச்சர் அவையிலேயே அப்படி நடைபெற்று இருக்கிறது. அது உண்மையில் வரவேற்கத் தக்கதுதான். அதுவும் முதல் அமைச்சர் அவர்களே அதில் ஒன்றும் ஆட்சேபணை இல்லை என்கிறபோது இந்த மசோதாவை எல்லோரும் ஆதரித்துச் சட்டமாக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இம்மாதிரி ஒரு சட்டம் செய்வதில் எம்மாதிரியான ஆபத்தும் இருக்காது. தயவு செய்து அமைச்சர் அவை கூர்ந்து இதைப் படித்துப் பார்த்து ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். உண்மையிலேயே, இன்றையதினம் வேதிய முறைப்படி சொல்லப்படுகிற மந்திரங்கள், செய்யப்படுகிற சடங்குகள் ஒன்றும் நமக்குப் புரியவில்லை. இது எல்லோருக்கும் தெரியும். ஆகவே இந்த முறையில் தான் திருமணம் நடக்கவேண்டும் என்று நினைப்பது சரியல்ல. அப்படிச் செய்யாவிட்டால் அது செல்லுபடியாகாது என்று இருக்கும்படியான நிலைமையை மாற்ற வேண்டியது மிக மிக அவசியமாகும். சிலர் கோயிலில்கூடத் திருமணம் செய்து கொள்கிறார்கள். ஆகவே இனி இம்மாதிரி நடக்கக்கூடிய திருமணங்களும் கூடச் செல்லுபடியாகத் தக்கதாக, இதுவரையிலும் நடந்திருக்கும் திருமணங்கள் செல்லுபடியாகத் தக்கதாக இந்த மசோதாவை நிறைவேற்றவேண்டுமென்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். இதை நிறைவேற்றுவதனால் எங்களுக்கு ஆட்சேபணை இல்லையென்றாலும் எதிர்ப்பு வருமோ என்று அச்சப்படலாம். பச்சைத் தமிழர்களுடைய ஆட்சியில் அத்தகைய அச்சத்திற்கு இடமே இல்லை. இதுவரையிலும் செய்து வந்த நல்ல காரியங்களுக்கு நல்ல ஆதரவு இருந்து வருவதைப்போலவே இந்த நல்ல காரியத்திற்கும் ஆதரவு இருக்கும் என்று சொல்லிக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM: கனம் சபா நாயகர் அவர்களே, இந்த மசோதா சீர்திருத்தத் திருமணங்களை சட்டபூர்வமாக ஆக்கவேண்டுமென்ற நல்ல நோக்கத்தோடு கொண்டுவரப்பட்ட ஒரு மசோதா. இருப்பினும் இதைத் தயாரித்தவர்கள் இதில் சரியான கவனம் செலுத்தவில்லை என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். "சுயமரியாதைத் திருமணம்" என்பது நம் நாட்டில் ஒரு குறிப்பிட்ட அரசியல் கருத்து உடையவர்கள் கொடுத்து அழைத்திருக்கக்கூடிய ஒரு பெயர். அதே பெயரை இதற்கும் கொடுத்திருக்கிறார்கள். ஒரிந்து ஆணும், பெண்ணும் மட்டும் தான் சுயமரியாதை சீர்திருத்த திருமணம் செய்வது என்பது அர்த்தம் இல்லை. ஆரம்பத்திலேயே மதச் சடங்குகள் அற்ற புரோகிதம் இல்லாமல் செய்யக்கூடிய திருமணத்திற்கு சுய

[Sri M. Kalyanasundaram] [19th August 1960

மரியாதைத் திருமணம் என்று அழைத்து அந்த அளவிற்கு மக்களிடையே சீர்த்திருத்த மனோபாவத்தை ஏற்படுத்தி சமுதாயத்தில் உள்ள மாறுபாடுகளை தகர்த்தெறியக் கூடிய அளவிற்கு முன்னணியில் நின்றவர்களைப் பாராட்ட வேண்டியதுதான். இதில் பல சங்கடங்கள் இருக்கின்றன. இம் மாதிரி திருமணம் செய்துகொண்ட தம்பதிகளுக்கு இதனால் பல கஷ்டங்கள் இருக்கலாம். ஆனால் இப்பொழுது காலம் மாறி விட்டது, பல முறைகளிலே திருமணங்கள் நடந்துகொண்டிருக் கின்றன. எங்களுடைய கட்சி சார்பிலே பல திருமணங்கள் நடக் கின்றன. ஹிந்து ஆண் முஸ்லீம் பெண்ணை மணந்துகொள்ளும் சந்தர்ப்பம் இருக்கிறது. கிருஸ்தவப் பெண் இந்து ஆணைக் கல்யாணம் செய்யும் சந்தர்ப்பம் இருக்கிறது. பிராமண ஆண் ஹரிஜனப் பெண்ணை கல்யாணம் செய்யும் சந்தர்ப்பம் இருக்கிறது. இதுமாதிரி மதம் மாறிகூட திருமணங்கள் நடந்தேறிவருகிறது. அப்பேர்ப்பட்டத் திருமணங்களெல்லாம் நடத்தி வருகிறோம். சுய மர்யாதைத் திருமணம் என்பது ஒரு குறிப்பிட்ட கோட்பாட்டுக்கு உட்பட்டு செய்துக்கொள்ளுகிற திருமணம். சுயமரியாதைத் திருமணங்களிலேகூட தாலி கட்டக்கூடிய சடங்குகள் நடந்தி ருப்பதை பல சந்தர்ப்பத்தில் பார்த்திருக்கிறேன். இதைவிடப் புரட்சிகரமான முறையில் எங்கள் கட்சியில் திருமணங்கள் நடந் திருக்கின்றன. புரட்சி என்றால் திருமணத்தில் மாறுதல் என்று தான் அர்த்தம். திருமணச் சடங்குகள் மேற்கொள்ளாமலேயே இன்னும் தீவிரமான முறையில் மதத்திற்கு அப்பாற்பட்ட ஜாதிக்கு அப்பாற்பட்ட திருமணம் நடந்துக் கொண்டிருப் பதைப் பார்க்கிறோம். இதற்கு முன்னணியில் நின்றவர்களை நாம் பாராட்டவேண்டும். அதேசமயத்தில் ஒரு குறிப்பிட்ட அரசியல் கருத்தை மட்டும் தழுவி இருக்கக்கூடிய காரணத்தால் இது சுயமரியாதைத் திருமணம் என்ற முறையில் அரசியல் திருமணமாக இருக்கக்கூடாது என்பதுதான் என்னுடைய அபிப் பிராயம். சுயமரியாதைத் திருமணம், கதர் திருமணம், கம்யூ னிஸ்ட் திருமணம், சோஸியலிஸ்டு திருமணம் என்று இப்படியெல்லாம் வந்துவிடக்கூடாது. (குறுக்கீடு) இந்து முஸ்லீம் திருமணம் போய் இதற்குப் பதிலாக கட்சி சார்பில் திருமணங்கள் வந்துவிடக்கூடாது. இந்தத் திருமண காலங்களில் இதுபோன்ற நிகழ்ச்சிகளில் பல அரசியல் கருத்து உடையவர்கள் ஒன்றாகக்கூடி உட்கார்ந்து சாப்பிடக்கூடிய சந்தர்ப்பமாவது இருக்கவேண்டும். இங்கே ஒரு குறிப்பிட்ட சுய மரியாதைத் திருமணத்திற்கு மட்டும் சட்டபூர்வமாக பாதுகாப்பு இருக்கவேண்டுமென்று சொல்லப்படுகிறது. நாங்கள் இதை ஏன் சட்டபூர்வமாக இருக்கவேண்டுமென்று வற்புறுத்தவில்லை என்றால், நாங்கள் சீர்திருத்த திருமணத்தை நடைமுறையிலே கொண்டுவந்திருக்கிறோம். என்னைப் போன்றவர்கள் சிறுவயதிலே கல்யாணம் செய்துக் கொண்டவர்கள் ஒரே ஜாதியில் கல்யாணம் செய்துக் கொண்டிருக்கலாம். சமீபத்தில் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் நடந்த திருமணங்கள் ஜாதிவிட்டு ஜாதி, மதம் விட்டு மதம் பல நடந்திருக்கின்றன. ஆனால் இப்பொழுது இருக்கும்

ஸ்பெஷல் மாரியேஜ்ஸ் சட்டத்திற்கு உட்பட்டு விழாவை எப்படி வேண்டுமானாலும் நடத்திக்கொள்ளலாம், இந்த ஆக்ட்டின் பிரகாரம் ரிஜிஸ்டர் செய்துவிடவேண்டுமென்று நாங்கள் முடிவு எடுத்திருக்கிறோம். சொத்துரிமைக்காகத்தான் இந்த புதிய சட்டத்திற்கே அவசியம் ஏற்படுகிறது. எங்கள் கட்சியைப் பொறுத்தவரை சொத்துரிமையைப்பற்றி நினைக்க வேண்டிய அவசியம் இல்லை. ஜாதி மத பிடிப்பு காரணமாக சொத்துரிமையையும் நாங்கள் ஆதரிப்பதில்லை. ஜாதியும், மதமும், சொத்துரிமையும் ஒருவர் திருமணத்திற்கு குறுக்கிடக்கூடாது. திருமணம் செய்துக்கொள்ளும் ஆடவனும், பெண்ணும் ஒருவருக்கொருவர் மனம் ஒப்பி செய்துக்கொள்வதற்கு திருமணம் என்று அர்த்தம். இந்த மசோதாவுக்குத் திருத்தம் கொடுக்கவேண்டுமென்றால், இந்த மசோதாவின் அடிப்படையிலேதான் மாற்றம் கொடுக்க வேண்டும். இதைக் கொடுப்பதற்கு முன் என்னைக் கலந்திருந்தால் ஏதாவது திருத்தம் செய்திருக்கலாம். இப்பொழுது திருத்தம் கொடுக்கவேண்டுமென்றால் எனது மனதிற்கு திருப்தி ஏற்படாது. ஆகையால் இந்த மசோதாவை நான் ஆதரிக்கவுமில்லை, எதிர்க்கவுமில்லை என்று தெரிவித்துக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

**SRI K. ANBAZHAGAN:** கனம் சட்டப்பேரவை தலைவர் அவர்களே, அரசாங்க அலுவல் அல்லாத முறையில் மாற்றுக் கட்சியினரால் சுயமரியாதைத் திருமணங்கள் முறைப்படி, சட்டப்படி ஏற்றுக்கொள்ளப்பட வேண்டுமென்பதற்காக இந்த மசோதா தரப்பட்டிருக்கிறது. இந்த மசோதாவையொட்டி சில கருத்துக்களை நான் கூற விரும்புகிறேன். 'சுயமரியாதைத் திருமணம்' என்ற கருத்தை பொதுவுடமைக் கட்சியைச் சார்ந்த தலைவர் கூறியது எனக்குச் சற்று வியப்பை ஊட்டுகிறது. காங்கிரசைச் சேர்ந்த யாராவது அப்படிச் சொன்னால் ஒரு வேளை இந்தத் திருமணத்தை நடத்தவேண்டுமென்று திராவிட இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் சற்று முன்னேடிகளாக இருக்கிற காரணத்தினால் மாறுபட்ட கருத்து அவர்களுக்கு ஏற்படுகிறதோ என்று எண்ணலாம். சுயமரியாதைத் திருமணத்திற்கு கட்சி வேறுபாடு ஒன்றும் கிடையாது. காங்கிரஸ்காரர்கள் பகுத்தறிவுக் கொள்கையை ஏற்றுக்கொள்ளா விட்டாலும், சில காங்கிரஸ்காரர்களும், கம்யூனிஸ்டு கட்சியைச் சேர்ந்த திரு. ஜீவானந்தம் அவர்களும் இம்மாதிரி திருமணங்களை முன்னின்று நடத்தியிருக்கிறார்கள். எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் இம்மாதிரி திருமணங்கள் நடைபெறுகின்றன. இதிலே கலந்து கொள்வதில் எந்த வித மாறுபாடும் அவர்களுக்குத் தோன்றுவது கிடையாது. எந்த மாறுபாடும் தோன்றாத முறையில் எல்லோரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய முறையில் நடைபெறுகின்ற இந்த சுயமரியாதைத் திருமணத்தை இன்றைய தினம் சில சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் சமூகப்பழக்கமாக மேற்கொண்டு மிகப் பெரிய அளவில் நடத்தி வருகிறார்கள். கனம் முதல் அமைச்சர் உயர்

திரு காமராஜ் அவர்கள் அடிக்கடி திருமணங்களுக்குப் போவாரோ மாட்டாரோ எனக்குத் தெரியாது, அவர்களுடைய சமுதாயத்தைச் சார்ந்தவர்களின் திருமணங்களில் 100-க்கு 98 திருமணங்கள் இந்த வழியில் புரோகித மறுப்புத் திருமணமாகத்தான் நடைபெறுகின்றன. சுயமரியாதைத் திருமணம் என்பது புரோகித மறுப்புத் திருமணமல்லாது வேறு அல்ல. சுயமரியாதைத் திருமணத்தில் தாலி கட்டுதல்கூட நடைபெறுகிறது என்று சிலர் எடுத்துச்சொன்னுர்கள். சுயமரியாதைத் திருமணம் பகுத்தறிவுத் திருமணமாக நடைபெற வேண்டும் என்பதுதான் என்னுடைய கருத்து. ஒரு வகுப்பிலே நடைபெறும் திருமணமும் சுயமரியாதைத் திருமணம்தான். ஜாதி, மதம் மாறி நடைபெறும் திருமணமும் சுயமரியாதைத் திருமணம்தான். மகிழ்ச்சிக்காகவும், பக்திக்காகவும் திருக்குறள், தேவாரம் படித்து நடைபெறுகிற திருமணமும் சுயமரியாதைத் திருமணம்தான். ஆனல் சுயமரியாதைத் திருமணத்தில் புரோகிதர் காலில் விழுகிற அந்த அவமானமான ஒரு செயல் இருக்காது. இந்த முறையில் நடைபெறுகின்ற திருமணம் அவரவர்கள் மரியாதையைக் காப்பாற்றிக் கொள்ளுகின்ற திருமணமாகும். சுயமரியாதைத் திருமணத்தின் அடிப்படை நோக்கம், சமத்துவ நோக்கமே தவிர வேறு அல்ல. சீர்த்திருத்தத் திருமணம், சுயமரியாதைத் திருமணம் ஜாதி மதத்திற்கு அப்பாற்பட்ட திருமணமாக, கலப்பு திருமணமாக ஏற்பட முடியும். சுயமரியாதைக் கொள்கைப்படி நடைபெறுகிற திருமணங்கள் ஒரு அரசியல் கட்சியைச் சார்ந்த திருமணமாக நடைபெற முடியாது. இத்திருமணம் இன்றைய தினம் சட்டப்படி ஏற்றுக்கொள்ளப் படவில்லை என்ற நிலைமை இருக்கிறது. சுயமரியாதைத் திருமணம் செய்து கொண்ட தம்பதிகளிடையே கசப்பு ஏற்பட்டு அதற்குப்பின்னல் வழக்கு மன்றத்திலே போகக்கூடிய நிலையில் சட்டப்படி செய்துக் கொண்ட திருமணம் அல்ல என்று கருதக்கூடிய நிலைமை இருக்கிறது. அப்படி சட்டப்படி ஏற்றுக்கொள்ளப்படாத திருமணங்கள் என்று சொல்லும்போது உண்மையிலே நல்ல நோக்கத்தோடு திருமணம் செய்துக்கொண்டவர்கள் பாதிக்கப்படுகிறுர்கள். அவர்களுடைய குழந்தைகள் பாதிக்கப்படுகிறுர்கள். அரசியல் நோக்கத்தோடு அல்லாமல் நல்ல எண்ணத்தோடு இவ்வாறு செய்யப்பட்ட திருமணங்கள் செல்லத்தக்கது அல்ல என்று உயர்நீதி மன்றத்திலே முடிவு கூறக்கூடிய நிலை ஏற்பட்டிருக்கிறது. ஆகவே அப்படிப்பட்டவர்களுக்கு சட்ட பாதுகாப்பு தேடிக்கொடுக்க வேண்டுமென்ற நோக்கத்தோடுதான் இந்த மசோதா கொண்டுவரப்பட்டது. ஆனல் அப்படிப்பட்ட வழக்குகள் சமீப காலத்தில் உயர்நீதி மன்றத்தில் எதுவும் வரவில்லை, இதனல் இதில் ஒன்றும் குறை நிகழ்ந்து விடாது என்று கூறினர்கள். நல்லவேளையாக, இம் மாதிரி வழக்கு வருகிற துர்ப்பாக்கியம் ஏற்படவில்லை என்று சொல்ல விரும்புகிறேன். பதிவுத் திருமணங்கள்கூட சில நேரங்களில் இக்கட்டான நிலைக்கு வருகின்றன. சில தினங்களுக்கு முன் அரியலூரில் உள்ள நீதிமன்றத்தில் ஒரு பதிவுத் திருமணத்தின் பேரில் நடைபெற்ற வழக்கில் அது இரண்டு பேர்

19th August 1960] [Sri K. Anbazhagan]

களுக்கும் இடையே ஏற்பட்ட ஒரு காண்ட்ராக்டே தவிர அது முழுத் திருமணமாகாது என்ற கருத்தைச் சொல்லி அது ஒரு ஒப்பந்தமே என்று தெரிவிக்கப் பட்டது. அப்படி அதை ஒரு ஒப்பந்தம் என்று கூறும்போது சில இடையூறுகள் குடும்பத்தில் ஏற்பட்டு விடுகின்றன. அது மட்டுமல்ல. தமிழ்த் திருமணம் அல்லது சீர்திருத்த திருமணம் செய்து கொண்டவர்கள் அதற்குப் பிறகு தங்கள் திருமணத்தை பதிவு செய்து கொள்ள பல இடையூறுகள் ஏற்படுகின்றன. பதிவுத் திருமணங்களுக்கு, ஸ்பெஷல் மாரியேஜ் ஆக்ட் இருந்தாலும் முன்னால் சுய மரியாதைத் திருமணம் செய்து கொண்டவர்கள் பின்னால் ரெஜிஸ்டர் செய்து கொள்ளப் போனால் அதற்குத் தடைகள் இருக்கின்றன. அங்கு பல தொல்லைகள் இருக்கின்றன. இந்தத் திருமணத்தை மனதார ஏற்றுக் கொள்வதற்கு இன்று சட்டத்தில் பாதுகாப்பு இல்லை. கோவிலிற்கு சென்று திருமணம் செய்து கொண்டால் அதற்கு பாதுகாப்பு இருக்கிறது. அம்மி மிதித்து, அருந்ததி பார்த்து, ஐயர் காலில் விழுந்து செய்யும் திருமணங்களுக்கு இன்று சட்டப் பாதுகாப்பு இருக்கிறது. ஏழடி எடுத்து வைத்து திருமணம் செய்து கொண்டால் அதற்கு சட்டப்பாதுகாப்பு இருக்கிறது. ஆனால் ஒரு தலைவர் முன் வைத்து பலர் முன்னிலையில், தாலி கட்டி திருமணம் செய்து கொண்டால் கூட அதற்கு சட்டப் பாதுகாப்பு இல்லை. ஆக, நான் கேட்டுக் கொள்வது மாற்றுக் கட்சியினர் இந்த மசோதாவைக் கொண்டு வருவதில் திருப்தியில்லா விட்டால் ஆளும் கட்சியைச் சார்ந்தவர்கள் இதற்கு ஒரு மசோதா கொண்டு வந்து அந்தத் திருமணங்களுக்கு பாதுகாப்பு அளிக்கட்டும். வெவ்வேறு மதத்தைச் சார்ந்தவர்கள் திருமணம் செய்து கொள்வதில்லை என்றால் அதற்கு சமுதாயம் ஒத்து வருவதில்லை. புரட்சிகரமான மனமுடைய வாலிபர்களும், புரட்சிக் கருத்துள்ள பெண்களும் சேர்ந்து சமுதாயத்தை எதிர்த்து தனியாக திருமணம் செய்து கொள்கிறார்கள். அவர்களை வரவேற்கிறேன். ஆனால், அவர்கள் முன்னாலேயே பதிவு செய்து கொள்கிறார்கள். ஆனால் பலர் பொதுவான முன்னேற்ற நோக்கம் மட்டும் கொண்டவர்கள் திருமணம் செய்து கொள்ளும்போது இந்தப் பாதுகாப்பைத் தேடிக் கொள்ள தவறி விடுகிறார்கள். முன்னாலேயே பதிவு செய்து கொள்வது நல்லதுதான். அதை மறுக்கவில்லை. ஆனால் சமுதாயத்தில் உள்ள எல்லா மக்களுக்கும் அதைச் செய்ய முடியுமா என்றால் முடியாது. அதற்கு வசதியிருக்கிறதா என்றால் இல்லை. எனவே செய்து கொள்ளப்பட்ட திருமணங்களை அவை முறையான திருமணமாகயிருந்தால் அதைப் பதிவு செய்து கொள்ள வழிவகை காண வேண்டும்; நமது சென்னை சட்ட மன்றம், தமிழ் நாட்டு மக்களின் பழக்க வழக்கங்களைப் பாதுகாக்க கடமை பூண்டதாகும். இன்றுள்ள சமுதாயச் சட்டங்கள், சிவில் சட்டங்கள் அந்தந்த வட்டாரத்தின் பழக்க வழக்கங்களை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப் பட்டவைதான். வருணாசிரம அடிப்படையில் இருந்தாலும்கூட, வங்காளத்தை எடுத்துக்கொண்டால், அங்குள்ள மக்களின் பழக்க வழக்கங்களை

யொட்டியும், தமிழ் நாட்டை எடுத்துக்கொண்டால் இங்குள்ள மக்களின் பழக்க வழக்கங்களை யொட்டியும், கேரளத்தை எடுத்துக் கொண்டால் அங்குள்ள மக்களின் பழக்க வழக்கங்களை யொட்டியும் சில சட்டங்கள் இந்து சட்டத்திலே இயற்றப் பட்டிருக்கின்றன. அதே முறையில் இன்றையதினம் தமிழ் நாட்டு மக்களின் பழக்க வழக்கங்களையொட்டி வளர்ந்து வருகிற திருமண முறை சட்டத்தில் இடம் பெற்ருக வேண்டும். இந்த சுயமரியாதைத் திருமணம் பழக்க வழக்கங்களில் கலந்து விட்ட தொன்று. இதன் அடிப்படையில் சீர்திருத்த நோக்கம் இருந்தாலும் மக்கள் பொதுவாக ஏற்றுக்கொள்கிற ஒன்ருகும், இது. ஆகவே, அது சட்டத்தில் இடம் பெற வழிவகை காண வேண்டும். இந்தத் திருமணம் சட்டத்தில் இடம் பெற வேண்டுமா, அது அவசியந்தானு, இதற்கு என்ன தேவை என்று சிலர் எண்ணக்கூடும். ஒரு சமுதாயத்தில் அந்த மக்கள் பின்பற்றுகிற பழக்கவழக்கங்கள் சட்டத்திற்குட்பட்டு, முறைப்படியானுல்தான் அந்த மக்கள் சட்டத்தை மதிப்பவர்களாக இருப்பார்கள். இன்று நாட்டில் சீர்திருத்த திருமணம் லட்சக் கணக்கில் நடந்து வருகின்றன. அவை சட்டப்படி ஏற்றுக் கொள்ளப்பட்டதல்ல என்ற நினைப்பு மக்களுக்கு ஏற்பட்டால் சட்டத்தினுல் ஒரு பயனு மில்லை என்றில்லாது அது துருப்பிடித்த சட்டம், சமுதாய விரோதச் சட்டம் என்ற நினைப்பு ஏற்படுமானுல் மக்கள் சட்டத் திற்கு உட்படாத மனப்பான்மைதான் பெறுவார்கள். அது ஒரு நாட்டின் நன்மைக்கு உகந்ததல்ல. ஆகவே மக்களின் நல்ல பழக்க வழக்கங்களை காப்பாற்றுவதற்காக, இந்த சுயமரியாதைத் திருமணத்தை சட்டப்படி ஏற்றுக்கொள்ளப்படும் திருமணமாக ஆக்குவதற்கு அரசாங்கத்தார் முன் வரவேண்டும். அது மட்டு மல்ல. தமிழர்களுக்கு இந்த தனி உரிமை எதற்காக என்று சிலர் கேட்கக்கூடும். நாகர்களுக்கு இன்று கிடைத்திருக்கும் தனி உரிமையை நான் இங்கு நினைப்பூட்டிக் கொள்வேன். நாங்கள் நாகரீகமிக்கவர்கள் என்று நாகர்கள் பெருமை பேசமாட்டார்கள். தனிப்பட்ட இலக்கியப் பண்பாட்டுச் சிறப்பினை நாகர்கள் பெற்றி ருக்கவில்லை. இருந்தாலும் அவர்கள் தங்கள் பழக்க வழக்கங்களில் வைத்திருக்கும் அதிகப் பற்று காரணமாக அவர்கள் தங்களுக் குள்ள தனி உரிமையைப் பாதுகாத்துக் கொள்ள இன்று டெல்லி சர்க்காரிடம் தங்கள் தனி உரிமைக்கு சலுகை தேடி பெற்றுக் கொண்டிருக்கிருர்கள். நீதிமன்றம்கூட அவர்களுக்கு தனியான முறையில் அமைய வேண்டுமென்று கேட்டிருக்கிருர்கள். அதை எண்ணிப் பார்க்கும்போது தமிழ் மக்களின் பழக்க வழக்கங் களுக்கு ஏற்ற முறையில் இந்தத் திருமணச் சட்டம் திருத்தப் படவேண்டும். அப்படி திருத்தம் செய்து இந்த சுயமரியாதைத் திருமணங்களை சட்டப்படி ஏற்றுக்கொள்ளும்படியான நிலை பிறப் பிக்கப் படவேண்டும். இதில் ஏதாவது கருத்து மாறுபாடு இருந்தால் அதை ஆளும் கட்சியினர் தெரிவித்து அந்தக் கருத்துக்களைத் திருத்த முன்வரவேண்டுமேயல்லாது இந்த மசோ தாவை கைவிட்டுவிட்டால் நான் அவர்களை சுயமரியாதையற்ற வர்கள் என்று சொல்ல மாட்டேன், ஆனுல் மற்றவர்களின் சுய

19th August 1960] [Sri K. Anbazhagan]

மரியாதையை இகழ்கிறவர்கள் என்றுதான் கூறுவேன். ஆகவே, மற்றவர்களின் சுயமரியாதையைக் காக்கும்பொருட்டாவது இந்த மசோதா உரிய இடத்தில் இடம் பெறவேண்டுமென்று கேட்டுக் கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

**SRI P. S. CHINNADURAI :** மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, இன்றையதினம் இந்த சுயமரியாதைத் திருமண மசோதாவானது ஒரு விசேஷமான சலுகை கோருவதற்காக இங்கு பிரேரேபணை செய்யப்பட்டிருக்கிறது என்றுதான் நான் கருதுகிறேன். திருமணம் என்றால் அது ஒரு புனிதமான சடங்கு. இல்லறம் ஏற்க விரும்புகிற வயது வந்த ஒரு ஆணும் பெண்ணும் பலர் முன்னிலையில் அவர்கள் அந்த இல்லறத்தை ஏற்கிறோம் என்று அறிவித்து இல்லறத்தைத் தொடங்குவதற்குள்ள முதன்மையான சடங்காக கையாளப்படுவதுதான் திருமணம். இந்தத் திருமணத்தை நாட்டிலுள்ள ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு சமூகப் பிரிவைச் சேர்ந்தவர்களும் ஒவ்வொரு வகையாக நடத்தி வந்திருக்கிறார்கள், நடத்திக் கொண்டும் வருகிறார்கள்.

(Sri K. Vinayakam in the Chair)

நம் ராஜ்யத்தைப் பொருத்த வரையில் இரண்டு விதமான திருமண சடங்குகள் அங்கீகாரம் செய்யப்பட்டிருக்கின்றன. ஒன்று, அந்தந்த மத சம்பிரதாயப்படி நடத்தப்படுகிற திருமணங்கள். மற்றொன்று, மத சம்பிரதாயத்தை அனுசரித்தோ அனுசரிக்காமலோ பொதுவாக நடத்தப்படுகிற பதிவுத் திருமணங்கள். என்னுடைய கருத்தில் எல்லாவகை திருமணங்களையும் பதிவு செய்து கொள்வதற்கு ஏற்பாடு செய்வதுதான் சிறந்த முறை. எப்படி ஜனன மரண பதிவேடு வைத்திருக்கிறோமோ அதேபோல் எந்த சமூகப் பிரிவை அல்லது ஜாதியைச் சார்ந்தவர்களாக இருந்தாலும் அவர்கள் எவ்வகையில் திருமணம் நடத்திக் கொண்டிருந்தபோதிலும், எந்த வகையான விழா நடத்தியோ அல்லது சடங்கு நடத்தியோ நடத்தாமலோ திருமணம் நடத்திக் கொண்டிருந்தபோதிலும் அவர்கள் அந்தத் திருமணத்தை பதிவு செய்து கொள்வது என்பதுதான் இன்றைய சமுதாய அமைப்பிற்கு பரிபூர்ணமாக ஏற்றதாகும். அதற்குரிய முறையில் ஏற்கனவே இருக்கிற மத சம்பிரதாய பூர்வமாக நடத்தப்படுகிற திருமணங்களை பதிவு செய்து கொள்ளவேண்டுமென்ற முறையில் ஒரு திருத்த மசோதா இங்கு பிரேரேபணை செய்யப்பட்டிருக்குமானால் நான் அதை ஆதரவு காட்டி வரவேற்றிருக்கக் கூடும். இந்த சபையிலே இதற்கு முன்னால் இதுபற்றி கேள்விகள் எழுந்த நேரத்தில் நான் உப கேள்விகள் கேட்டதுண்டு. உப கேள்விகள் மூலம் ஆலோசனைகள் கூறியதும் உண்டு. எல்லா வகைத் திருமணங்களையும் பதிவு செய்து விடுவதற்கான ஒரு ஏற்பாட்டை அரசாங்கம் செய்வார்களா என்று மாத்திரம்தான் கேட்டேன். அதற்கு சர்க்கார் தரப்பிலிருந்து கூறப்பட்டது, திருமணங்களை பதிவு செய்து கொள்வதற்கு புதிதாகச் சட்டம் ஒன்று வேண்டியதில்லை, யார் திருமணத்தை பதிவு செய்துகொள்ள வேண்டுமென்று விரும்புகிறார்களோ அவர்கள் அப்படி பதிவு

செய்து கொள்ள இப்பொழுது வகையிருக்கிறது என்று சொன்னார்கள். அப்படி பதிவு செய்து கொள்வதும், கொள்ளாததும் அவரவர்கள் இஷ்டம் என்று விட்டுவிடுவதற்குப் பதிலாக புரோகிதரை வைத்து மத சம்பிரதாயங்கள், சடங்குகள், அனுசரித்து நடத்தப்படுகிற திருமணத்தைக்கூட பதிவு செய்து கொள்ளத்தான் வேண்டும். அப்படி பதிவு செய்து கொண்டால் தான் திருமணம் ஊர்ஜிதமாகும் என்ற அளவில் சட்டத்தை திருத்தி வைப்பது முக்கியமானதொன்று என்றுதான் 10-00 a.m. நான் கருதுகிறேன். மத சம்பிரதாய சடங்குகளை அனுசரித்ததாக இருந்தால், அல்லது புரோகிதரைக் கொண்டு திருமணங்களை நடத்தினல் பிற்போக்கான திருமணம், அல்லது வைதீகத் திருமணம் என்று சொல்லப் பட்டது. அதே சமயத்தில் புரோகிதர் இல்லாமல் நடத் தப்படுகின்ற திருமணம், சீர்திருத்த திருமணம், அல்லது சுய மரியாதைத் திருமணம் என்றெல்லாம் வர்ணிக்கப்படுகிறது. நான் அதனை ஒப்புக்கொள்வதற்கில்லை. வைதீகத் திருமணம் புரோகிதர்களை வைத்துக்கொண்டு மத சம்பிரதாயப்படி நடத்தப்படுகிற திருமணங்களில் ஏற்படுகிற செலவைக் காட்டிலும் மற்ற சீர் திருத்தத் திருமணம் அல்லது சுயமரியாதைத் திருமணம் என்று சொல்லப்படுகின்ற முறையில் திருமணம் நடைபெறும்போது அதிகமான செலவு ஏற்படுவதை நான் பார்க்கிறேன். புரோகிதரை வைத்துக்கொண்டு நடத்தப்படும் திருமணத்தை எடுத்துக் கொண்டால், அவர் வந்து ஏதோ ஒன்றிரண்டு மந்திரங்களை சமஸ்கிருதத்திலோ அல்லது தமிழிலோ சொல்லி திருமணத்தை நடத்தி வைப்பார். அதற்காக நாம் அவருக்குக் கொடுப்பது ஒன்றேகால் ரூபாய், அதோடு தேங்காய், பழம், முதலியவைகளும் ஒரு முறத்தில் அரிசியும். (குறுக்கீடு) கோயம்புத்தூர் ஜில்லா கொஞ்சம் பணக்கார ஜில்லா என்பதினுல் எங்கள் இடங்களில் எல்லாம் ஒன்றேகால் ரூபாய் கொடுக்கிறோம். ஆனல் சுய மரியாதைத் திருமணம், அல்லது சீர்திருத்த திருமணம் என்கிற பெயரால் சில இடங்களுக்கு சில பெரியார்கள் அழைக்கப்படுகிறார்கள். அவர்களுக்குப் போக, வரச் செலவுக்குப் பணம் கொடுக்கவேண்டும். அதோடுமட்டுமல்லாமல் தனியாக இதற்குக் கட்டணம் என்ற முறையில் ரூபாய் 100 கொடுத்துக் கொண்டு வருவதாகவும் தெரிகிறது. புரோகிதர் வந்து நடத்தி வைத்தால் வெறும் தேங்காய், பழம், அரிசி இவைகளோடு தீர்ந்து போகும். ஆனல் சில பெரியவர்கள் வந்து திருமணத்தை நடத்தி வைக்க வரும்போது அவர்களுக்குத் தனியாக உணவு கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் எல்லாம் ஏற்படுகின்றது என்பதையும் நான் அறிகிறேன். அதோடு கனம் அங்கத்தினர் திரு. அன்பழகன் அவர்கள் புரோகிதர் காலில், திருமணம் செய்துகொண்ட மணமக்கள் விழுவதைப்பற்றி சொன்னார்கள். புதிதாகத் திருமணம் செய்துகொண்ட மணமக்கள் பெரியவர்களின் காலில் விழுந்து வணங்குவது எங்கள் பக்கத்தில் சகஜமானதுதான். அதிலும் எங்கள் பக்கத்தில் திருமணம் ஆனவுடன் அங்கு யாரெல்லாம் பெரியவர்கள் வந்திருக்கிறார்களோ அவர்களுடைய காலில்

19th August 1960] [Sri P. S. Chinnadurai]

தொட்டு கும்பிடுவது சாதாரண பழக்கம். அதிலும் வயதில் மிக பெரியவர்கள் யாராவது இருந்தால், அவர்களின் காலில் நெடுஞ் சாண் கிடையாக விழுந்து கும்பிட்டு ஆசிர்வாதம் பெற்றுக் கொள்வது வழக்கம். புதிதாக மணம் செய்துகொண்ட தம்பதிகள் இவ்விதம் செய்வது அவர்களின் முழு விருப்பமே அல்லாது இதில் எந்தவிதமான நிர்ப்பந்தமும் கிடையாது. சொல்லப்போனல் புரோகிதர் வந்து திருமணத்தை நடத்தினவுடனேயே அவரை அனுப்பிவிடுவதை நாம் பார்க்கிருேம். அதோடு அதே திருமண நாளில்தான் பல திருமணங்கள் இருக்கும், அய்யரும் ஓடிக் கொண்டேயிருப்பார். ஆகவே காலைத்தொட்டு கும்பிடுவது என்பது நல்ல பழக்கமல்ல என்று சுயமரியாதையுள்ள, தமிழ் பண்பாடுள்ள யாரும் கூற முன் வரமாட்டார்கள். அதிலும் இவ்விதம் காலில் விழுந்து கும்பிட வேண்டாம் என்று தடுத்தால்கூட விடுவது கிடையாது. எனக்கு ஏற்பட்ட பல அனுபவங்களின் மூலம் சொல்ல முடியும், திருமண வைபவங் களுக்கு செல்லும்போது காலைத் தொட்டு, கும்பிட வருவார்கள், என்னை மட்டுமல்ல, எல்லோரையும் கும்பிட வருவார்கள். அப்போது வேண்டாம் என்று சொன்னலும் அவர்கள் கண்டிப்பாக தொட்டு கும்பிட்டு ஆசிர்வாதம் பெற்றுக்கொள்வதை நான் பார்த்திருக்கிறேன். இதில் அவர்களுக்கு எந்தவிதமான நிர்பந்தமும் கிடையாது. ஏதோ புரோகிதர்களின் காலில் விழுகிருர்கள் என்று சொன்னர்கள். ஆனல், சீர்திருத்த திருமணங்களில் என்ன நடைபெறுகிறது என்ருல் அவர்களுக்குரிய கட்டணமும் கொடுத்துவிட்டு அவர்கள் காலில் விழுந்து கும்பிடு கிருர்கள். இவ்விதம் நடப்பதில்லை என்று கனம் அங்கத்தினர் திரு. அன்பழகன் அவர்கள் சொல்ல முடியாது. ஆகவே புரோகிதர் இல்லாமல் நடத்துவதுதான் சீர்திருத்த திருமணம், மற்றவை எல்லாம் சீர்திருத்த திருமணம் அல்ல என்று சொல்லுவது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வது போல்தான் ஆகும். அதோடு தமிழ்த் திருமண முறையைப்பற்றி கனம் அங்கத்தினர் அவர்கள் குறிப்பிட்டார்கள். தமிழ்த் திருமணங்கள் எல்லாம் எவ்விதம் இருந்தன, பண்டைக்கால முறைகள் எல்லாம் எவ்விதம் இருந்தன என்பதைப்பற்றி தமிழ் இலக்கியங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. என்னைவிட அதிகமாக தமிழ இலக்கியங்களை திரு. அன்பழகன் அவர்கள் படித்திருப்பார்கள். அதில் தமிழ் முறையைப்பற்றி சொல்லப்பட்டிருப்பதைப் பார்த்தால் களவொழுக்கத்தைப்பற்றி வெகு சிறப்பாக சொல்லப் பட்டிருக்கிறது. அதன் பிறகுதான் கற்பியலைப்பற்றி வர்ணிக்கப் பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட கால கட்டத்திற்கு நாம் போக வேண்டும் என்று விரும்புகிருர்களா என்று அறிய விரும்புகிறேன்.

நாகர்களைப்பற்றி கூறினர்கள், நாகர்கள் ஏதோ பழைய சம்பிரதாயத்தில் ஒருக்கால் இருந்து கொண்டிருக்கலாம், ஆனல் இன்றைக்கு முன்னேற்றம் அடைந்திருக்கிற நாம் ஏன் பின்னுக்குப் போகவேண்டும் என்று கேட்கிறேன். பண்டை இலக்கியங்களில் கூறப்பட்டிருக்கும் களவொழுக்கத்தை அனு சரித்து திருமணம் நடைபெற வேண்டுமென்று இந்த

[Sri P. S. Chinnadurai] [19th August 1960

சபையிலுள்ள அங்கத்தினர்கள் யாராய் இருந்தாலும் அவர்கள் எந்த கட்சியாய் இருந்தாலும், அல்லது எந்த தனிப்பட்ட அங்கத்தினரும் கூற முன்வரமாட்டார்கள் என்று நம்புகிறேன். அந்த காலத்தை எல்லாம் கடந்து நாம் புதிய காலகட்டத்தை அடைந்து கொண்டிருக்கிறோம். அதற்கு தகுந்தபடி நாம் நடந்து கொள்ள வேண்டும். நம்முடைய சூழ்நிலைக்கு ஏற்ற வகையில் எந்த முறையில் நமது திருமணங்களை நடத்தாலம் என்பதைப்பற்றி ஆராய்ச்சி செய்யவேண்டும். அப்படி பார்க்கும்போது திருமணங்கள் எந்த முறையில் நடந்தாலும், எந்த ரீதியில் நடந்தாலும், யார் தலைமையில் நடந்தாலும், அதில் எந்த ஜாதி, அல்லது எந்த மதத்திலுள்ளவர்களாய் இருந்தாலும், எல்லா வகைத் திருமணங்களையும் பதிவு செய்து கொள்ளவேண்டும் என்கின்ற முறையின் மூலமாகத்தான் ஒரு சிறந்த நல்ல சம்பிரதாயத்தை, நல்ல சமுதாய சூழ்நிலையை ஏற்படுத்தி வைக்க முடியும் என்று நான் உண்மையாகக் கருதுகிறேன். சுயமரியாதைத் திருமணங்கள் எல்லாம் செல்லத்தக்கவையாய் இருக்கவேண்டும் என்ற எண்ணத்தோடுதான் இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கவேண்டும். ஜாதிவிட்டு ஜாதி, அல்லது மதம் விட்டு மதம் என்கின்ற முறையில் எல்லாம் திருமணம் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றபொழுது, இவ்விதம் எந்த வகையில் நடைபெற்றாலும் அவைகளுக்கு எல்லாம் ஒரு தனிப்பட்ட சலுகை கிடைக்கவேண்டும் என்ற நோக்கத்தோடுதான் இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது என்று நான் கருதுகிறேன். இப்போதிருக்கிற நிலையில் பார்த்தால் மத சம்பிரதாயத்தை அனுசரித்து நடத்தப்படுகின்ற திருமணங்கள் எல்லாம் பதிவு செய்து கொள்ளப்படாவிட்டாலும் செல்லத்தக்கதாகும் என்கிற முறையில் இருக்கிறது. இதில் இப்போது சலுகை கிடைக்கிறது என்றிருந்தபோதிலும் காலத்திற்கு ஒவ்வாத ஒரு முறையின் மூலம் சலுகை கிடைக்கவேண்டும் என்று கோருவது முறையானதல்ல. காலத்திற்கு தகுந்தவாறு அமலில் இருக்கின்ற நிலைமைக்குத் தக்கவாறு எந்தவிதமான சிக்கல்களும் ஏற்படாதவாறு எல்லாவிதத் திருமணங்களையும் பதிவு செய்து கொண்டால்தான் செல்லுபடியாகும் என்கின்ற நிலையை ஏற்படுத்தினாலும் நல்லது என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன். அது ஒன்றுதான் நல்லது. ஒரு குறிப்பிட்ட சலுகை கிடைக்கவேண்டும் என்பதற்காக ஒரு மசோதா கொண்டு வருவதானது இருக்கின்ற நிலைமையை இன்னும் சிக்கலுள்ளதாக்கிவிடும் என்று சொல்ல விரும்புகிறேன்.

மேலும் கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்திரம் அவர்கள் எடுத்துக்காட்டியதுபோல் இம்மசோதாவில் பல குறைகள் இருக்கின்றன. இவைகளின்மீது இன்னும் கொஞ்சம் கவனம் செலுத்தினால் அவைகளை நிவர்த்தி செய்திருக்கலாம். இவைகளை எல்லாம் கருத்தில் கொண்டு, எதிர்க் கட்சிக்காரர்கள் இதை எதிர்க்கிறார்கள் என்று திரு. அண்ணாமலை அவர்களோ, அவர்களுடைய கட்சிக்காரர்களோ கருதவேண்டியதில்லை. யார்மீது அவர்கள் கோபப்படுவதாக இருந்தாலும் எங்கள் கட்சியின்மீது அவர்கள் கோபப்படுவதற்கு காரணம் இல்லை. நான் இங்கு குறிப்பிடுகின்ற

19th August 1960] [Sri P. S. Chinnadurai]

கருத்துக்களை எல்லாம் எதிர்க்கட்சியில் இருந்து வந்த கருத்துக்கள் என்று எண்ணித் தள்ளிவிடாமல், சொல்லப்படுகின்ற நல்ல கருத்துக்களை அடிப்படையாக வைத்துக்கொண்டு ஒரு நல்ல சமுதாயத்தை அமைப்பதற்கு முன் வரவேண்டும். அதில் சர்க்கார் கவனம் செலுத்தவேண்டும். கட்சி வேறுபாடாக நான் இதை குறிப்பிடவில்லை, கட்சி கண்ணேட்டத்துடன் எங்கள் கட்சி திருமண வைபவங்களைக் கருதவில்லை, பொதுவாக நாட்டில் ஒரு நல்ல சமுதாய அமைப்பை ஏற்படுத்தவேண்டும். அதற்கு திரு. அண்ணமலை அவர்களும், அவர்களை சேர்ந்தவர்களும் முயற்சிக்கவேண்டும். தமிழ் நாட்டில் இருக்கின்ற சூழ்நிலையை ஆராய்ந்து பார்த்து அதற்குத் தகுந்த முறையில் சட்டத்தைக் கொண்டுவருவதுதான் நல்லது. எல்லாவகைத் திருமணங்களையும் பதிவு செய்து கொள்ளவேண்டும் என்கின்ற முறையில், நாட்டில் நடைபெறுகின்ற திருமணங்கள் எல்லாம் பதிவுத் திருமணங்களாக்குவதற்குரிய வகையில் ஒரு ஏற்பாட்டை சர்க்கார் செய்ய வேண்டும். ஆகவே கனம் அங்கத்தினர் திரு. அண்ணமலை அவர்கள் கொடுத்திருக்கும் இந்த மசோதாவை திரும்ப பெற்றுக்கொண்டு வேறு ஒரு மசோதாவைக் கொண்டுவரவேண்டும் என்று கேட்டுக் கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

**SRI A. VEDARATHNAM**: அறிவிற் சிறந்த அவைத்தலைவர் அவர்களே, இந்த சுயமரியாதைத் திருமண மசோதாவை இங்கே கொண்டு வந்திருப்பதைப் பற்றி எனக்கு வியப்பாக இருக்கிறது. ஏனெனில், இந்த மசோதாவில் கண்ட திருமணங்கள் மட்டும்தான் சுயமரியாதைக்குரியது, ஏனைய திருமணங்கள் சுயமரியாதை யற்றது என்பது எனக்கு முதலிலே விளங்கவில்லை. நியாயமாகப் பார்க்கப் போனல் ஏனைய திருமணங்கள்தான் அதற்குரியது—சுயமரியாதைத் தன்மை வாய்ந்தது—என்று குறிப்பிட விரும்புவதோடு இந்த மசோதாதான் அதற்குப் புறம்பாகக் கொண்டுவரப் பட்டிருக்கிறது என்பதையும் நான் கூற விரும்புகிறேன். இந்த மசோதாவைப் பிரேரேபித்தவர்கள் கூறினர்கள், இப்போதுதான் ஏதோ புதிதாக இந்தக் கலப்பு மணங்கள் நடைபெறுவதாக. அது அவர்கள் ஒன்றும் நூதனமாகக் கண்டுபிடித்த விஷயம் அல்ல. எத்தனையோ ஆயிரமாயிரம் ஆண்டுகளாக இந்த மணங்கள் நடைபெற்றுதான் வருகின்றன. அந்தந்தக் காலத்திற்குத் தக்கபடி பல நீதி நூல்கள்—சுக்கிர நீதி, பாராசர ஸ்மிருதி போன்ற நீதி நூல்கள்—அந்தந்தக் காலத்தையொட்டி தோன்றி வந்திருக்கின்றன. பகவான் கீதையிலே "சாதுர் வர்ணம் மயா ச்ருஷ்டம்" என்று—நான்கு வர்ணங்களை சிருஷ்டித்தது நான் என்று—கூறியிருக்கிறர். இதற்கு வெகு காலத்திற்குப் பின்பு மனு ரிஷி காலத்திலே கலப்பு மணங்கள் நிறம்ப நடைபெற்றிருக்கின்றன என்பது தெரிய வருகிறது நூல்கள் ஆராய்ச்சி காரணமாக. மனு தர்ம சாஸ்திரம் வகுக்கின்ற காலத்தில் மனு நீதியில் இதற்கெல்லாம் பாகுபாடுகள் குறிப்பிடப் பட்டிருக்கிற காரணத்தினுல் இது ஒன்றும் நவீனம் அல்ல என்ற விஷயம் அதிலிருந்து காணக் கிடைக்கிறது. அப்போது இந்தக்

கலப்பு மணங்களைப் பாகுபாடு செய்து மனு தர்ம சாஸ்திரத்தில்—10-வது அதிகாரத்தில் என்று நினைக்கிறேன்—"சங்கர ஜாதி" என்ற தலைப்பில் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். பிராம்மணன், க்ஷத்திரிய ஸ்திரியை மணந்து குழந்தை பிறந்தால் அதற்கு என்ன பெயர், க்ஷத்திரியன் பிராம்மண ஸ்திரீயை மணந்து குழந்தை பிறந்தால் அதற்கு என்ன பெயர் என்றெல்லாம் அதிலே குறிப்பிடப்பட்டுள்ளன. "அனுலோமம்", "பிரதிலோமம்" என்பதெல்லாம் மனு தர்ம சாஸ்திரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள விஷயம் என்று தெரிவிக்க விரும்புகிறேன். இப்படி நான்கு வர்ணங்களுக்குள் கலப்பு மணம் நடந்திருக்கின்றது. பிராம்மணர்கள், அடுத்த க்ஷத்திரிய, வைஸ்ய, சூத்திர ஸ்திரீக்களை மணந்து பிறக்கக் கூடிய குழந்தைகள் இருக்கிறார்களே அவர்கள் "அனுலோமம்" சூத்திரர்கள், மற்ற ஜாதிப் பெண்களை மணந்து குழந்தை பிறந்தால் அதற்கு "பிரதிலோமம்" என்று பெயர். "அனுலோமம்" வகுப்பில் வரக் கூடியவர்கள் "யக்ஞோபவீதம்" போட்டுக்கொள்ளக்கூடியவர்கள்—அதாவது பூணூல் போட்டுக் கொள்ளக் கூடியவர்கள்—மற்றவர்களுக்கு இந்த உரிமை கிடையாது என்று சவிஸ்தாரமாக வர்ணிக்கப்பட்டு குறிப்பிடப் பட்டுள்ளது. எனினும் இந்த மணங்கள் கலப்பு மணமாக நடந்த போதிலும் எல்லோரும் ஒரே முறையைத்தான் கடைபிடித்து வந்தார்களேயல்லாமல், நினைத்தபடி—இஷ்டப்படி—மணமுடித்துக் கொண்டார்கள் என்று எந்த நிலையிலும் ஆராய்ந்து அறிந்து கொள்வதற்கில்லை. ஆனதால் இந்த மணம் என்பது ஒரு தெய்வீகத் தன்மை வாய்ந்த செயல். அதை இஷ்டப்படி மனம் போனவாறு செய்வது என்று வைத்தால்—அதற்கு ஒரு கட்டுத் திட்டம் இல்லாமலிருந்தால்—நாட்டிலே இப்போதே தவறான முறைகளுக்கு இடம் நிறைய ஏற்பட்டு வருகிற காலத்தில் இந்த மாதிரி மணவினைகளுக்கு இருக்கிற கட்டுப்பாடுகளையும் அகற்றி விட்டால் எந்த நிலையில் கொண்டுபோய் விடும் என்ற விஷயத்தை அரசாங்கம் கூர்ந்து பார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன்.

சமீபத்தில்—கொஞ்ச காலத்திற்கு முன்பு—மதுரை ஸ்ரீ சோம சுந்திர பாரதி அவர்களுக்கும், ஸ்ரீ ராகவ அய்யங்கார் அவர் களுக்கும் இடையில் மண விஷயமாக ஒரு பெரிய காண்ட்ரவர்ஸி—தகராறு—வந்து பத்திரிக்கைகளில் வியாசங்களும் எதிர் வியாசங்களும் வந்தன என்பதை அன்பர்கள் கவனித்திருப்பார்கள் என்று நம்புகிறேன். சுயமரியாதைத் திருமணத்தை யாராவது ஒரு பெரியார் நடத்துவார், எதாவது என்றால் அவர் சாட்சி என்று வரக்கூடும், கண்ணுக்குத் தெரியாத தெய்வங்களை சாட்சியாக வைத்தால் அவர்கள் வர மாட்டார்கள் என்றெல்லாம் கூறப் பட்டன. தெய்வங்களை சாட்சி என்று பிரதிக்ஞையில் கூறுகிறார்களேயல்லாமல், அங்கு இருக்கக் கூடியவர்கள் சாட்சியாக வரலாம், அல்லது மணம் முடிக்கிற புரோகிதர்கள் சாட்சியாக வரக் கூடும். பெரியார்கள் வருவதைப் போல. கண்ணுக்குத்

19th August 1960] [Sri A. Vedarathnam]

தெரியாதவர்கள் சாட்சியாக அழைக்கப்படவேண்டிய அவசியம் கிடையாது. அதோடு மாத்திரமல்லாமல் ஏதோ ஒரு வகுப்பார் பேரில் ஏற்பட்ட கோபத்தினால் இந்த சுயமரியாதைத் திருமணம் தோற்றுவிக்கப்பட்டதேயல்லாமல் வேறு காரணம் இருப்பதாகத் தெரியவில்லை. அந்த மாதிரி இந்தத் திருமணங்களை முடிப்பதெல்லாம் ஒரே வகுப்பார் என்று நினைக்க இடமில்லை. நம் நாட்டிலே அநேக வகுப்பார்கள் அந்தந்த வகுப்பிலேயே புரோகிதம் செய்கிற பழக்கம் தொன்றுதொட்டு இன்றும் இருக்கிறது. பிராம்மணர்களுக்குள் திருமணம் செய்விக்கிறவர்கள்—புரோகிதர்கள்—இருக்கிறார்கள். அதே போல் அந்தந்த வகுப்பிலும் இருக்கிறார்கள். சைவர்களுக்கு குருக்கள் நடத்தி வைக்கிறார்கள். பண்டாரங்கள் என்று சொல்லப்படுகின்றவர்களும் இந்தப் புரோகிதம் செய்கிறார்கள். வள்ளுவப்பண்டாரங்கள் ஹரிஜன வகுப்பில் நடத்துகிறார்கள். ஏதோ ஒரு வகுப்பார் செய்கிறார்கள் என்று அவர்கள் பேரில் ஏற்பட்ட கோபம் காரணமாக ஒரு புது திருமண முறையைப் புகுத்த வேண்டுமென்று நினைப்பது சரியான விஷயம் அல்ல. தொன்று தொட்டு ஆயிரமாயிரம் ஆண்டுகளாக இருக்கக் கூடிய பழக்கத்தை சரியான காரணம் இல்லாத நிலையில் மாற்றவேண்டுமென்று நினைப்பது முறையாகாது. சட்டப்படி செய்யவேண்டுமென்று சொன்னால் இப்போதே ஷரத்தும் இருக்கிறது. பதிவு செய்யப்பட்டால் இப்போதே மணங்கள் சட்ட சம்மதமாகாததாக ஆகாது. லட்சக்கணக்கான மணங்கள் நடந்திருப்பதாகச் சொன்னார்கள். அவர்கள் சொல்லுகிற அளவுக்கு இந்த மாதிரி மணங்கள் நடந்திருக்குமா என்று ஐயுறுகிறேன்—இவர்கள் மிகைப்படுத்திக் கூறுவதாக எண்ணுகின்றேன். கோடிக்கணக்கான திருமணங்கள் இமயம் முதல் குமரி வரையில் பழைய முறையை அனுஷ்டித்து நடத்தப்படும் காரணத்தினால்—கட்சி சார்பிலே நடக்கக் கூடிய திருமணங்கள் ஒரு சிலவைதான்—இந்த முறையை மாற்றி அமைக்க எந்த விதமான அவசியமும் தோன்றியிருப்பதாகத்தோன்றவில்லை. இதை அரசாங்கம் அங்கீகரிக்கக் கூடாது என்று தெரிவித்துக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* SRI K. R. VISWANATHAN : அவைத் தலைவர் அவர்களே, இந்த சுயமரியாதைத் திருமணப் பதிவு மசோதாவைப் பற்றிச் சில கருத்துக்களை நான் கூற ஆசைப்படுகிறேன். இந்த சுயமரியாதைத் திருமண நிகழ்ச்சியானது நம் தமிழ் நாட்டிலேயே ஒரு சிறந்த நிகழ்ச்சி என்றுகூடச் சொல்லலாம். இந்த நிகழ்ச்சியானது கடந்த 20, 30 ஆண்டுகளுக்குள்ளாக நிகழ்ந்து வருகின்ற நிகழ்ச்சி என்று சொன்னால் அது ஒப்புக் கொள்ளத் தகுந்ததாகும். இத்தகைய நிகழ்ச்சி சமுதாயத்திலே இருந்த ஒரு பெரும் குறையை நீக்க, சமயத்திலே உள்ள விதிகளைச் சரிவரப் பயன்படுத்தாத காரணத்தால், அதனைத் துர்விநியோகப்படுத்த ஆரம்பித்த காரணத்தால், ஒரு சில தலைவர்கள் அத்தகைய ஜாதி ஏற்றத் தாழ்வுகளைப் போக்க இது ஒரு

வழியாகும் என்ற முறையிலேதான் இந்தச் சுயமரியாதைத் திருமணமானது வழக்கத்திற்கு வந்தது. இன்றைக்கு 20 ஆண்டுகளுக்கு முன்பு அங்கு ஒரு திருமணம், இங்கு ஒரு திருமணம் என்ற முறையிலேதான் இந்த சுயமரியாதைத் திருமணம் நடந்து வந்தது.

முக்கியமாக, தமிழ் நாட்டிலே தலைவராக இருக்கும் பெரியார் அவர்கள் முதலிலே அதைத் துவக்கி வைத்தார்கள் என்று சொன்னால், இல்லையென்று சொல்ல முடியாது. அத்தகைய நிலையை நாட்டு மக்கள் நாள் செல்லச் செல்ல, காலப் போக்குக்குத் தகுந்தவாறு மாறி வந்த காரணத்தினால், மாற்றத்தை விரும்பி ஏற்றார்கள். அதற்கு முன் புரோகிதத் திருமணம் எங்கும் நடந்து வந்தாலும்கூட, புரோகிதத் தொழிலோடு மட்டுமல்லாமல், அதிலே வரும் வருவாயை ஏற்பதோடு மட்டுமல்லாமல், மற்றவர்களுடைய சுயமரியாதைக்கு இழுக்குத் தேடக் கூடிய முறையிலே நடந்து வந்த காரணத்தினால் இத்தகைய சுயமரியாதைத் திருமணம் அதிகமான அளவில் நடக்க வழியாக இருந்தது. அந்தத் திருமணம் சுய மரியாதைத் திருமணம் என்று பெயர் பெற்றது. இதில், கடவுளுக்கு இடமில்லையென்று சொன்னார்கள். சில திருமணங்களில் கடவுளுக்கு இடம் உண்டு, தமிழ்த் திருமணமாக நடைபெறும் என்று சொன்னார்கள். பிறகு, நடைபெற்று வருகின்ற சுயமரியாதைத் திருமணமானது யார் யார் அந்தத் திருமணத்தை நடத்துகிறார்களோ அவர்களுடைய எண்ணப்படி நடந்து வந்தது. சுயமரியாதைத் திருமணம் என்று சொல்லும்படி தனிப்பட்ட முறை இருக்கின்றதா என்று பார்த்தால் அப்படி ஒரு முறை கிடையாது. எத்தனை தலைவர்கள் அந்தத் திருமணத்தை முன்னிருந்து நடத்தி வைக்கிறார்களோ அத்தனை முறையாக அந்தத் திருமணம் அமைந்திருக்கிறது. ஆகவே, சுயமரியாதைத் திருமணம் என்பதற்கு ஒரு உரு இல்லை, முறை இல்லை என்றுதான் சொல்லவேண்டும். கடவுளை முன் வைத்து நடத்தப்படும் திருமணங்கள் நூற்றுக்கணக்கில் நடைபெறுகின்றன. கடவுளை முன் வைத்து சமயத்தை ஒட்டிய முறையில் நூற்றுக்கணக்காக திருமணங்கள் நடைபெறுகின்றன. ஆணையும் பெண்ணையும் இணைப்பதை மட்டும் நோக்கமாகக் கொண்டு சடங்குகள் இல்லாமல் நூற்றுக்கணக்கான திருமணங்கள் நடைபெறுகின்றன. தாலி கட்டும் பழக்கம் சில திருமணங்களில் இருக்கிறது. சில திருமணங்களில் தாலி கட்டும் பழக்கம்கூடக் கிடையாது என்ற முறையிலே ஒருவருக்கொருவர் மோதிரம் மாற்றிக் கொள்வது, அல்லது மாலை மாற்றிக் கொள்வது என்ற முறையிலே சில திருமணங்கள் நடைபெறுகின்றன. இந்த மாதிரிப் பல முறையாக இந்த சுயமரியாதைத் திருமணமானது நடைபெற்று வருகிறது. இப்படி வழங்கிக் கொண்டிருக்கும் திருமணத்தை இன்று பதிவு செய்யவேண்டுமென்ற நிலைமைக்கு இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. இந்தத் திருமணத்தின் வரலாற்றை மட்டும் நான் கூறிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

19th August 1960] [Sri K. R. Viswanathan]

தமிழ் நாட்டில்—இந்தியா முழுவதிலும் நடைபெறுகின்ற திருமணங்களில் இந்து சாஸ்திரப்படி நடத்தப்படும் திருமணங்கள் தான் செல்லுபடியாகும் என்று சொல்லக் கூடிய ஒரு நிலைமை இருந்து கொண்டிருக்கிறது. அப்படி புரோகிதத்தின் மூலம், சடங்குகளைச் செய்து இவற்றையெல்லாம் நடத்த வேண்டுமென்ற முறை எப்படி ஏற்பட்டது? தமிழ் நூல்கள்படி ஆராய்ந்து பார்த்தால், அப்போது எவ்விதச் சடங்குகளும் கிடையாது. ஆணும் பெண்ணும் காதல் கொண்டு, களவு நிலை மாறி, கற்பு நிலையில் திருமணமாக முடிகிறது என்ற நிலைமை போய், பொய்யும் வழுவும் புகுந்த பின்னர் இந்தப் புரோகித முறை வந்தது. அந்தப் புரோகிதச் சடங்குகள் எல்லாம் ஊழல் வயப்பட்டன; ஆகையால அவற்றைத் திருத்தியமைக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு இந்த சுயமரியாதைத் திருமணமானது முதலிலே ஏற்பட ஆரம்பித்தது. அங்கே, ஆணும் பெண்ணும் உண்மையாகவே தமிழ் முறைப்படி, இலக்கியத்தில் சொன்ன முறைப்படி, காதல் ஒருமித்து ஒன்றுபட வேண்டுமென்ற நோக்கத்தோடு இந்தச் சீர்திருத்த மணமானது துவங்கியது. ஆகவே, இந்தச் சீர்திருத்த மணத்திலே மிக முக்கியமாக வேண்டப்பட்டது, சடங்குகளை அகற்றுவது மாத்திரமல்ல; சுய மரியாதையைப் பறிகொடுக்கும் தன்மையை மாற்றுவது மாத்திரமல்ல; காதல் ஒருமித்து இருவர் மனமும் ஒன்றிய நிலையிலே மனம் புரிந்து கொண்டு வாழ்க்கை நடத்த வேண்டுமென்ற நோக்கந் தான். ஆகவே, 30 ஆண்டுகளுக்கு முன்பு துவங்கிய இந்த முறையில் திருமணம் புரிந்து கொள்வோர் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டிருக்கின்றனர். புரோகித முறையில் திருமணம் புரிந்து கொண்டால் தான் செல்லும் என்று ஆங்கிலேயர்கள் சட்டத்தில் எழுதி வைத்தனர். அந்த முறையில் இப்போது பொய்யும் வழுவும் புக ஆரம்பித்து விட்டன. அதை அகற்றும் முறையில் சீர்திருத்தத் திருமணத்தைத் துவங்கிய பெரியவர்கள் மக்களுடைய மனோநிலையை நல்ல நிலையில் மாற்றியமைக்கத் தவறி விட்டார்கள் என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது. உண்மையிலேயே ஆண், பெண் இருவர் மனோநிலையைத் திருந்திய நிலையிலே வைப்பதற்கு அவர்கள் முயற்சித்து இருப்பார்களானால், சடங்கு முறையை மாற்ற எவ்வளவு அக்கறை கொண்டார்களோ அந்த அளவுக்கு மனோநிலையை மாற்றியமைக்க அக்கறை கொண்டிருந்தார்களானால் இததகைய சட்டமே வேண்டியதில்லை; இத்தகைய பதிவு முறையே வேண்டியதில்லை. அவர்கள் செய்யத் தவறிய கடமையை இப்போதாவது செய்ய முற்படுவார்கள் என்று நினைக்கிறேன். சுய மரியாதைத் திருமணம் நாள்தோறும் பெருகிக் கொண்டே போகும்போது பதிவுசெய்துகொள்ள வேண்டிய அவசியமில்லையென்று கூறிக்கொள்ள விரும்புகிறேன். நான் 20 ஆண்டுகளுக்கு முன் தமிழ்த் திருமண முறையிலே திருமணம் செய்து கொண்டேன். என்னுடைய திருமணத்தை நான் பதிவு செய்து கொள்ளவில்லை; பதிவு செய்து கொள்ள விரும்பவும் இல்லை. எங்களுடைய மனம் திருந்திய நிலையில் இருந்து ஒருவரையொருவர். . . .

**Sri P. S. CHINNADURAI :** தலைவர் அவர்களே, காங்கிரஸ் கட்சிக் கொறடா அவர்கள் கனம் அங்கத்தினர் அவர்களுக்குப் பக்கத்திலே போய் உட்கார்ந்து கொண்டு சொல்லிக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. அது சரிதானா?

TEMPORARY CHAIRMAN (Sri K. Vinayakam): There is no point of order; any hon. member has got a right to move about in the House.

**Sri K. R. VISWANATHAN :** அன்பர் சின்னதுரையவர்கள் "சொல்லிக் கொடுத்து நான் பேசுகிறேன்" என்று கூறிய நிலைமை கண்டு வருந்துகிறேன்.

ஆகவே, ஆண், பெண் இருவருடைய மனோநிலையை மாற்றியமைக்கத் தலைவர்கள் பாடுபட வேண்டுமென்று கேட்டுக் சொள்கிறேன். நண்பர் சின்னதுரையவர்கள், "தமிழ்த் திருமணம் செய்ய 100 ரூபாய் கேட்கிறார்கள்" என்று சொன்னார்கள்.

10-30 a.m. நான்கூட ஆங்காங்கு திருமணங்களைச் செய்து வைக்கப் போவதுண்டு. ஆனால், சட்டசபை உறுப்பினராக வந்த பிறகு திருமணம் செய்து வைப்பதற்கு அதிகமான அழைப்புகள் வர ஆரம்பித்தன. அப்படி அழைப்பு வரும்போது, நான் என்ன சொன்னேன் என்றால், 'நான் அனாதை இல்லம் நடத்திக்கொண்டு வருகிறேன், அந்த அனாதை இல்லத்திற்காக வேண்டி ஒரு திருமணத்திற்கு நூறு ரூபாய் கொடுத்தால்தான், தமிழ்த் திருமணத்தை நடத்திவைக்க நான் வருவேன்; இல்லாவிட்டால் வர முடியாது' என்று சொன்னேன். அப்படிச் சொன்ன பிறகு, அழைப்புகள் தாமாகக் குறைய ஆரம்பித்தன. என்னுடைய வேலைகள் தாமாக இயங்கிக்கொண்டிருக்கின்றன.

இன்றைக்கு ஆயிரக்கணக்கான தமிழ்த் திருமணங்கள் சீர்திருத்த முறையில் நடந்துகொண்டிருக்கின்றன. ஒவ்வொரு கிராமத்திலும், இரண்டு முதல் பத்து திருமணங்கள் வரையில் நடக்கின்றன. ஆனால், மக்களுடைய பக்குவ நிலை என்ன, சீர்திருத்தத் திருமணங்கள் எந்த ஊழல்களை நீக்குவதற்காகச் செய்யப்படுகின்றனவோ அதை மக்கள் உணருகிறார்களா, அந்த ஊழல்களை அவர்கள் நீக்கிக்கொள்கிறார்களா என்று கணவன் மனைவி நினைத்துப் பார்க்கவேண்டும். ஒரு நல்ல சூழ்நிலையை, நல்ல மனோபக்குவ நிலையை ஏற்படுத்தினால் திருமணங்களைப் பதிவு செய்துகொள்ள வேண்டிய அவசியம் இல்லை. அப்படிப் பதிவு செய்துகொள்ள வேண்டுமானாலும், அதற்கும் முன் சட்டங்கள் இருக்கின்றன. அதன்படி பதிவு செய்துகொள்ளலாம். ஆகையால், இத்தகைய மசோதாவுக்கே இடமில்லை என்று தெரிவித்துக் கொண்டு நான் என்னுடைய உரையை முடித்துக் கொள்ளுகின்றேன்.

* **Sri M. R. KANDASWAMI MUDALIYAR :** தற்காலிக தலைவர் அவர்களே, இப்பொழுது சபை முன் கொண்டுவரப்பட்டிருக்கும் சீர்திருத்தத் திருமணங்களைச் செல்லுபடியாக்குவது குறித்த

19th August 1960] [Sri M. R. Kandaswami Mudaliyar]

விவாதத்திலே நானும் பங்கெடுத்துக்கொள்ள முற்படுகின்றேன். அதற்கு அவர்கள் கொடுக்கும் பெயர் 'சுயமரியாதைத் திருமணம்' என்று நான் நினைக்கிறேன். அந்தத் திருமணத்தின் பொருள் சுயமரியாதைத் திருமணம் அல்ல; அது நம்முடைய மாகாணத்தி லுள்ள ஹிந்துக்களை அவமரியாதை செய்யக்கூடிய தீர்மானம் என்றுதான் நான் சொல்வேன்.

தலைவர் அவர்களே, அங்கத்தினர்கள் சொல்கிற மாதிரி, அதில் ஏதாவது கருத்துக்கள் இருக்கின்றனவா என்று பார்த்தால், சீர் திருத்தக் கருத்துக்கள் வேண்டுமானால் அதில் இடம்பெறத் தகுதி உள்ளதாக இருக்கிறதே தவிர, சுயமரியாதைத் திருமணம் என்பதற்குள்ள பொருளே அதில் கிடையாது. அவர்கள் சொல்வது—'புரோகிதர்கள் இல்லாமல் நடத்துவது தான் சுயமரி யாதைத் திருமணம், புரோகிதர் வைத்து நடத்தக் கூடியவர்கள் சுயமரியாதை அற்றவர்கள்' என்ற முறையில் இருக்கிறது. ஹிந்து சமுதாயத்தைப் பழித்து, இழித்துப் பேசக்கூடிய நிலைமைக்கு அந்தத் தீர்மானத்தின் உட்பொருள் இருக்கிறது. ஆகையால், அந்தத் தீர்மானத்தை நான் வன்மையாகக் கண்டிக்கிறேன்.

(Mr. Speaker in the Chair.)

அவர்கள் சொல்லும் சீர்திருத்தக் கருத்துக்கள் தற்சமயம் நாட்டிலே நடைமுறையில் இருந்து கொண்டுதான் இருக்கின்றன. இன்றைக்குப் புரோகிதர்களை வைத்துத் திருமணம் செய்யக் கூடிய இடமே மிக மிகக் குறைவாக இருக்கிறது. புரோகிதர்கள் சொல்லக்கூடிய மந்திரங்கள் நாம் புரிந்துகொள்ளக்கூடிய பாஷை யில் இல்லை என்ற காரணத்தால், இப்பொழுது எல்லா இடங்களி லும் தமிழிலேயே நல்ல பாசுரங்களைச் சொல்லி, இனிமையான பாக்களைப் பாடி திருமணங்கள் நடைபெறுகின்றன. இவை களெல்லாம் சுயமரியாதை உள்ள திருமணம் அல்லவா என்று சிந்தித்துப் பார்க்கும்போது, அவர்கள் எந்தப் பொருளைக் கொண்டு, எந்தக் கண்ணோட்டத்திலே மற்றவைகளையெல்லாம் சுயமரியாதைத் திருமணம் அல்ல என்று நினைக்கிறார்கள் என்பது எனக்குப் புரியவில்லை. அந்த இடத்தில் பார்க்கும்போது தான், அவர்கள் ஏதோ ஒரு தவறைச் செய்துவிட்டு, அந்தத் தவறை இந்த மாகாணம் பூராவிலுமே செய்யவேண்டும் என்ற முறையில் தங்களுடைய கட்சியின் கொள்கையாக அதைப் பரப்பவேண்டும். தாங்கள் தான் இந்தச் சீர்திருத்தக் கருத்தைக் கொண்டுவரக் கூடியவர்கள் என்ற நிலைமையை நம்முடைய நாட்டிலே பரப்ப வேண்டும் என்ற முறையிலே அவர்கள் அதைக் கொண்டு வருகிறார்கள். உண்மையாகவே இந்த நாட்டில் நடைபெறும் திருமணங்கள் சீர்திருத்த முறையில் நடைபெற வேண்டுமென்றால் அதை நான் ஆதரிக்கத் தயாராயிருக்கிறேன். நம்முடைய நாட்டிலே இப்பொழுது நடைபெறும் திருமணங்களில் அதை அனுசரித்துக்கொண்டுதான் வருகிறார்கள். பாஷை தெரியவில்லை யாதலால் கடவுளின் நாமத்தைச் சொன்னாலும், அவர்கள் என்ன சொல்கிறார், நம்மைத் திட்டுகிறாரா, போற்றுகிறாரா என்று தெரிவ

தில்லை. இப்பேர்ப்பட்டவர்களை வைத்து, திருமணம் நடத்தினால் தான் அது உண்மையான திருமணம் ஆகுமா என்று கனம் அங்கத்தினர் திரு. அன்பழகன் அவர்கள் கேட்டார்கள். அது சீர்திருத்தக் கருத்துதான். காலத்தின் போக்கை அனுசரித்து மக்களுடைய மனோநிலையை அனுசரித்து சீர்திருத்தம் செய்ய வேண்டியது அவசியம். அந்த முறையிலே சீர்திருத்தக் கருத்துக்கள் நம்முடைய மக்களிடையே பரவித்தான் நமக்குத் தெரியாத பாஷையில் மந்திரங்களைச் சொல்வதை நீக்கிவிட்டு, தமிழில் நல்ல முறையிலே பாக்களைப் இன்னிசையோடு பாடி திருமணங்களை நடத்திக் கொண்டு வருகிறார்கள். இன்றைக்குக்கூட திருமணம் ஒன்று நடந்தது.

**SRI K. ANBAZHAGAN :** கனம் தலைவர் அவர்களே, மதிப்பிற்குரிய அங்கத்தினர் அவர்கள் பேசுகிறபோது, பல்வேறு வகையாக நடைபெறும் தமிழ்த் திருமணங்களையெல்லாம் சுயமரியாதைத் திருமணம் அல்ல என்று நாங்கள் பிரித்துப் பேசுவதாகக் கண்டித்துச் சொல்கிறார். எல்லாத் திருமணங்களையும் இதுவரை சட்டப்படி ஒப்புக்கொள்ளாமல் விலக்கப்பட்டிருக்கும் பல வகையான தமிழ்த் திருமணங்களையும் சேர்த்துதான் பேசியிருக்கிறோம். எனவே நாங்கள் பிரித்துப் பேசவில்லை என்று அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**SRI M. R. KANDASWAMI MUDALIAR :** சபாநாயகர் அவர்களே, நண்பர் அவர்கள் சொல்லிய கருத்திலே, அவர்கள் சொல்லியதெல்லாம் சுயமரியாதைத் திருமணம் நடக்கக்கூடியதைக் கோர்ட்டிலே செல்லுபடியாவது இல்லை என்று சொல்கிறார்கள். செல்லுபடியாவது இல்லை என்று சொல்வது மூன்றாவது தவறு என்று நான் சொல்கிறேன்.

இன்றைக்கு நூற்றுக்கணக்கான திருமணங்கள் அம்மாதிரி மத சம்பிரதாய முறையிலே, புரோகிதர்கள் இல்லாமலேயே, நடந்திருக்கின்றன. அவைகளை எந்த ஹைகோர்ட்டும் தள்ளுபடி செய்யவில்லை. ஏனென்றால், மத சம்பிரதாயப்படி தெய்வ நம்பிக்கையோடு நடைபெறும் திருமணத்தை அவர்கள் தள்ளுவது இல்லை. மத சம்பிரதாயமே இல்லாமல் மக்களிடத்திலே தவறான கருத்தைப் பிரசாரம் செய்கிறார்கள். அங்கே சொல்லும்போது 'புரியாத பாஷையிலே பேசுகிறார்கள் ஒரு வகுப்பினர் ஆகையால், அது கூடாது' என்று சொல்கிறார்கள், அதை மக்கள் ஆதரிக்கிறார்கள். அதை வைத்துக்கொண்டு சீர்திருத்தம் என்று சொல்லி சுயமரியாதைத் திருமணம் என்று அவர்கள் சொல்கிறார்கள். தாலி கட்டாமல் செய்வதும், பெரியாரை வைத்துச் செய்வதும் தான் சுயமரியாதைத் திருமணம் என்று நினைக்கிறார்கள். ஆனால், பெரியாரை வைத்துச் செய்யாமல் ஒரு தமிழர், தமிழிலேயே நல்ல பாட்டுகளைப் பாடி திருமணம் நடத்தினால் அது செல்லுபடியாகும் என்று கோர்ட்டிலே ஒத்துக்கொள்ளுகிறார்கள். மத சம்பிரதாயத் திருமணத்தை யாரும் மறுப்பது இல்லை. அப்படியிருக்கும்போது

19th August 1960] [Sri M. R. Kandaswami Mudaliyar]

அதை அவர்கள் ஒத்துக்கொள்வதாயிருந்தால் ஆட்சேபணைக்கே இடமில்லை. அந்த முறையில் நடந்துகொண்டு வருகின்றன. எல்லாத் திருமணங்களும் அந்த முறையிலே நடக்காததால், 'அய்யர் சொல்கிறார், அவர்களுக்கு அடி வருடி' என்று நண்பர் சொல்கிறார். அது பொருத்தமல்ல. ஒருவன் கள்ளுக் கடைக்குச் சென்று, 'அவன் கிடக்கிறான் குடிகாரன், எனக்குப் போடு ஒன்றரை பாட்டில்' என்று சொன்னதாக ஒரு கதை உண்டு. அதுபோல, ஐயர் இரண்டு ரூபாய் வாங்கிக்கொண்டால், ஏமாற்று கிறார் என்று ஊரெல்லாம் சொல்லிப் பிரசாரம் செய்துவிட்டு, மக்களிடையே சீர்திருத்தக் கருத்தைப் பரப்புவதாகச் சொல்லிக் கொண்டு, 'நான் அந்தத் திருமணத்திற்குத் தலைமை வகிக்க வர வேண்டுமென்றால், 100 ரூபாய் கொடுக்கவேண்டும், கொடுத்தால் தான் வருவேன்' என்று சொல்வது என்றால், இதுவா மக்களுடைய செலவைக் குறைக்கக்கூடியது? எதிர்க்கட்சி நண்பர் திரு. அண்ணாமலை அவர்கள் சிக்கனத்தைப் பற்றிக் குறிப்பிட்டார். ஐயருக்கானால் ஐந்து ரூபாய் செலவு; ஆனால், அவர்கள் தலைவர் களைக் கூப்பிட்டால், 100 ரூபாய் செலவு; இதிலே என்ன செலவு குறைகிறது? செலவு குறைவதாகச் சொன்ன திரு. அண்ணாமலை அவர்களின் வாதமும் இதில் அடிப்பட்டுப் போய்விட்டது. அந்தக் கருத்துக்கு இடமே இல்லை.

நம்முடைய முன்னோர்கள் வைத்திருக்கக்கூடிய பாஷை தெரியவில்லையென்றால் தமிழிலே செய்யுங்கள். தமிழ் மொழியின் மூலமாக, நம்முடைய மத சம்பிரதாயப் பிரகாரம் சடங்குகள் வைத்துச் செய்வதில் கஷ்டம் இல்லை. பெரிய செலவும் பொது மக்களுக்கு இல்லை.

எனக்கு முன்னால் பேசிய நண்பர் கூடச் சொன்னார், முப்பது ஆண்டு காலத்திற்கு முன்னால் ஒரு சீர்த்திருத்தக் கருத்தைக் கொண்டு நடத்தினதால் பல சிக்கல்கள் ஏற்பட்டு கோர்ட்டுக்குப் போய்ச் செல்லுபடியாகாது வந்துவிடுகின்றன என்று. ஆனால், பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் மத நம்பிக்கை, தெய்வ பக்தியோடு செய்துகொண்ட திருமணத்திலே எந்தக் கேசும் கோர்ட்டிலே செல்லுபடி ஆகாது என்று வரவில்லை. அதனால் மக்களுக்கு என்ன நஷ்டம் வந்துவிடும்? சமுதாயம் என்ன சீர்க்கேட்டுப் போய்விடும்? என்ன இந்தத் தேசத்திற்கு நஷ்டம் வந்துவிடும்? ஆகையால், இந்த மசோதாவைக் கொண்டுவரவேண்டிய அவசியம் இல்லை. இதற்குத் தேவையும் இல்லை. இப்பொழுது இருக்கும் முறைப்படி மக்களுக்குத் தெரியாத பாஷை இருக்கிறதென்றால், தமிழிலே செய்து கொள்ளலாம்.

இன்னும் ஒரு தவறு நடக்கிறது. சுய மரியாதை என்றால் நம்முடைய இயல்பிலே எத்தனையோ தவறுகள் நடக்கின்றன. தவறு நடக்கும் காலத்திலே எல்லாம், 'நானும் திருமணம் செய்து கொண்டு விட்டேன்' என்று இரண்டு பேர் வந்து சொல்லும்போது, அவனுக்கு ஏற்கனவே மனைவி இருந்தாலும், அதுவே பின்னால்

[Sri M. R. Kandaswami Mudaliyar.] [19th August 1960

சிக்கல் ஏற்படுத்தி, குடும்பததில் தொல்லை கொடுக்கும்; ஒழுக்கத்திற்கும் சீர்கேடான முறையில் அமையும்; குடும்பத்தின் அமைதியையும் கெடுக்கும். இம்மாதிரி நிலைமை சுயமரியாதைத் திருமணத்திலே ஏற்படும் காரணத்தால், இத்தகைய திருமணம் அவசியம் இல்லை. அவர்கள் எந்தச் சீர்திருத்தம் நாட்டிலே பரவ வேண்டுமென்று நினைக்கிறார்களோ அந்தச் சீர்திருத்தம் எல்லாம் இன்றைக்கே நடைமுறையில் நடந்துகொண்டு வருகின்றன. அப்படி நடை முறையிலே நடக்கும் காலத்திலே, புதிதாக ஒரு திருத்தம் கொண்டு வந்து, இந்த சுயமரியாதைத் திருமண மசோதாவை நிறைவேற்ற வேண்டுமென்று கோருவது சரியல்ல, அது தேவையில்லை, அதை நிறைவேற்ற வேண்டிய அவசியமும் இல்லை என்று சொல்லி, இந்தத் தீர்மானத்தை எதிர்த்து என் உரையை முடிக்கிறேன்.

* **Sri M. S. SELVARAJAN:** கனம் சபாநாயகர் அவர்களே, சுயமரியாதைத் திருமணங்கள் பொருத்த வரை சட்டம் இயற்றி, அங்கீகாரம் செய்ய வேண்டுமென்று மசோதா கொண்டு வந்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட மசோதாவின் அவசியத்தைப் பார்க்கும் காலத்தில், இந்த நாட்டைப் பொருத்த வரையில், ஏற்கெனவே, "அன் ரிட்டன் லா" என்று சொல்லும் அளவுக்கு, சட்ட ரீதியாக எழுதாமல் இருந்தாலும், பழக்க வழக்கமாக, தொன்று தொட்டு, பாரம்பரியமாக திருமண அமைப்பு முறை இருந்து வருகிறது. அது போதாது அல்லது விரும்பத்தகாதது என்று யாரேனும் கருதினால், அவர்களுக்கு ரிஜிஸ்தர் முறை, "ரிட்டன் லா" அமைப்பு ஏற்பட்டு, சட்ட பூர்வமாக பதிவு செய்துக் கொள்ள அனுமதி கொடுக்கப்பட்டிருக்கிறது. இரண்டுக்கும் மத்தியில், மற்றொன்றை, பாரம்பரியமாக இருந்தாலும் அது போதுமானது அல்ல என்று, இந்த சுயமரியாதை சட்ட மூலமாக அந்த திருமணங்கள் சட்ட பூர்வமாக ஆக்கப்பட வேண்டும் என்பது, "சூப்பர்ப்ளுவஸ்", அதிக பட்சமானதாக இருக்கிறது; அது அவசிய மற்றது.

திருமணம் என்பது புனிதமான கருத்துக் கொண்டது. வெறுமனே யாரோ நினைத்துக்கொண்டு செய்து இருக்கும் விளையாட்டு வேலையல்ல. ஒருவரையொருவர் காலமெல்லாம் சேர்ந்து, நேசித்திருப்பது; அது அவர்கள் குடும்பத்தை மட்டும் பொருத்த விஷயம் அல்ல; திருமணம் என்பது பல ஆயிரம் காலமாக ஏற்படுத்தப்பட்ட பிணைப்பு முறை; தொன்று தொட்டு வந்த சம்பிரதாயம். பாரம்பரியமாகச் செய்து வந்திருக்கும் முறை. அது அந்த குடும்பத்தாருக்கு மட்டுமல்லாமல், சுற்றியுள்ள சமூகத்தையும் சமுதாயத்தையும் பாதிக்கும் விஷயம். மற்றெல்லா சட்ட திட்டங்களும் அதைச் சுற்றியமைந்திருக்கின்றன. நம் இஷ்டப்படிக்கு, நம் மனதில் தோன்றியபடியெல்லாம் திருமணத்திற்குச் சட்டங்கள் இயற்றிக் கொள்வதானால், நம் மனத்திற்கு தோன்றிய காரணத்திற்கெல்லாம் சட்டம் இயற்றிக் கொள்வதென்றால், தேசம், சமூக அமைப்பு

19th August 1960] [Sri M. S. Selvarajan]

சிதறிப் போகும். திருமணத்திற்கு ஒரு வரையறை தேவை. பழக்க வழக்கமான முறையென்றால் பாரம்பரியமான முறையென்றால், அது காலமெல்லாம் சிறந்து செறித்த அனுபவத்தின் விளைவு. அந்த பாரம்பரிய முறைக்கு மரியாதைத் காட்டினால்தான், நலமாகும். சுயமரியாதைத் திருமணங்களை சட்ட பூர்வமானது என்று ஒத்துக்கொள்ள முடியாது என்று கோர்ட்டு தீர்ப்புகள் இருக்கின்றன. அந்தத் தீர்ப்புகளெல்லாம் சரியில்லை, நடைமுறையில் இருப்பதெல்லாம் சரியில்லை, யாரோ இஷ்டப்படி செய்துக் கொள்வதை சட்ட பூர்வமாக ஆக்க வேண்டும் என்பதே இங்கே கொண்டு வந்துள்ள மசோதாவின் கருத்து என்று நான் புரிந்துக் கொள்ளுகிறேன். அந்த நிலையிருக்குமானால், இம்மாதிரிச் சட்டம் சமூகத்தில், சமுதாயத்தில் பல்வேறு பாதகங்களை விளைவிக்கும், சமுதாயத்தைச் சிதற அடிக்கும் என்று கருதுகிறேன்.

மசோதாவை ஆதரித்துப் பேசிய கனம் அங்கத்தினர் திரு. அன்பழகன் அவர்கள் சொன்னதுபோல், புரோகிதம் வேண்டியதில்லை, புரோகிதச் சடங்குகள், ஆசார அனுஷ்டானங்கள் அவசியமில்லை என்பதால், புரோகிதம் என்பதானது ஒரு சாராருக்கு, ஒரு குறிப்பிட்ட பகுதியினருக்கு என்று— என்றோ ஒரு நாள் அப்படியிருந்திருக்கலாம், ஆனால் அது இப்பொழுதில்லை—ஏற்பட்ட விதியன்று; புரோகிதம் என்பது குடும்பத்திலிருக்கும் பெரியவர்கள் ஆசி வழங்கும் அளவில், முறையாக அவர்களை முன் வைத்து திருமணக் காரியங்கள் நடப்பதைப் பார்க்கிறோம். புரோகிதம் என்றால், அது ஒரு ஜாதியினரைக் குறிக்க வேண்டிய அவசியமில்லை. புரோகிதம் என்றால் எல்லோரும் சேர்ந்து, ஒரே துறையில் நல்ல முறையிலே செய்ய வேண்டுமென்ற முறையே ஆகும். இன்றைய தினம் நடைமுறையிலே, ஆசாரங்கள், அனுஷ்டானங்கள் நல்ல முறையிலே இருக்காதோ என்று உணர்ந்துதான் ஜாக்கிரதையாக புத்திசாலித்தனமாக நம் முன்னோர்கள், வகுத்திருக்கும் நல்ல முறையைப் பார்க்கிறோம். திருமணமுறை கண்ட இடத்தில், கண்ட விதத்தில் ஒப்பந்தம் செய்துக் கொள்ளுவது அல்ல; அது சம்பந்தமான எல்லாக் காரியங்களையும், ஆர அமர யோசித்து, பிணைப்பை ஏற்படுத்துகிறார்கள். ஆகவேதான், முதலாவதாக பெரியோர்கள் நிச்சிதார்த்தம் என்று வைத்திருக்கிறார்கள்; இருவருக்கும் உள்ள பல்வேறு பொருத்தங்களையும், பழக்க வழக்கங்களையும் அனுசரித்து, ஆர, அமர ஆராய்ந்துப் பார்த்து, ஒரு முடிவைச் செய்கிறார்கள்; முடிவைச் செய்த பிறகும் கூட, சில காலம், அவகாசம் கொடுக்கிறார்கள்; இஷ்டமில்லையென்றால், அதைத் திருத்திக்கொள்ள சந்தர்ப்பம் கொடுக்கிறார்கள். அத்தகைய முறை ஒரு குறிப்பிட்ட மதத்திற்குத்தான் சொந்தம் என்பதில்லை. மசூதிகளில்கூட, சர்ச்சுகளில்கூட, "முறையீடு விடுதல்" "அறிக்கை வாசித்தல்" என்று இருக்கிறது. அந்த முறையில் சந்தர்ப்பம் கொடுக்கப்படுகிறது. ஜாக்கிரதையாக

"இண்டென்சிவ்" பரிசீலனை செய்யவும் சந்தர்ப்பம் கொடுக்கப் படுகிறது. அப்படிப் பரிசீலனைகள் செய்து முடித்த முடிவு நீடிக்கும், என்ற நம்பிக்கையில் அதைச் செய்கிருர்கள். அப்படிச் செய்த திருமணங்களில், 100-க்கு 99-ல் மணமக்கள் நன்ருகவே வாழ்கிருர்கள்; ஒன்று சரியாக இல்லையென்ருல், அது இயல்பு, இயற்கை என்றுதான் கொள்ளவேண்டும்.

ஆசார அனுஷ்டானங்கள் என்ருல், யாரோ ஒருவருக்கு காணிக்கை செலுத்துவதுதான் என்பதல்ல. மாப்பிள்ளைக்குக் காப்பு கட்டுகிருர்கள் என்ருல், அது அவசியமில்லை என்பதற்கில்லை; உற்ருர், மற்ருர், உறவினர்களிடையே, மாப்பிள்ளை யார் என்று தெரிந்து கொள்ளவே. கல்யாணத்திற்கு வருபவர்களில், அவரை விட இலட்சணமான—அவரைவிட ஆடம்பரமாக உடை—நகை யணிந்த கவர்ச்சியான ஆடவர்களும் இருக்கக்கூடும். வருகிற வர்கள் மாப்பிள்ளை யாரோ என்று தேடிப் பார்க்காமல், இன்னர் என்று எளிதாகத் தெரிந்துகொள்ளவே கங்கணம் கட்டுகிருர்கள்; "டு ஐடெண்டிபை தி ப்ரைட்க்ரூம்" அப்படிப்பட்ட நிலையில் புதிதாக வருபவர்கள்கூட குறி தப்பிப்போக சந்தர்ப்பமே இருக்காது. இம்மாதிரி எத்தனையோ காரியங்களை நம் பெரியோர்கள் வைத்திருக்கிருர்கள். பாலி சுற்றி, கை தொட்டு, பெரியோர்களுடைய ஆசி பெறுகிருர்கள். அதெல்லாம் "கான் ஸெண்ட்ரேஷனுக்காக", மனதை ஒருமுகப்படுத்தி, எண்ணங்களை சீர்ப்படுத்தி. நாம் எண்ணும் எண்ணங்களுக்கு விளைவு, வலிவு உண்டு என்பதை யாரும் மறுக்க முடியாது. ஆசிபெறும் வழக்கம் சாதாரண சடங்குகளில்கூட உண்டு.

இன்னென்றும் உண்டு; அனந்தரம் என்று இருக்கிறது. மாப்பிள்ளை வீட்டாரும், பெண் வீட்டாரும், உற்ருர், மற்ருர் உறவினர்கள் யார், யார், இன்னர், இன்னர் என்று சந்தித்து, புரிந்துகொள்ள அது ஒரு சந்தர்ப்பம். அதன் பின்னல், மாப்பிள்ளை வீட்டார், பெண்ணை அனந்தரம் என்ற சடங்கு முறையில் தங்கள் குடும்பத்தில் ஒருவராக பாவித்து ஏற்றுக் கொள்ளு கிருர்கள். அப்படி, அந்த பெண் மாப்பிள்ளை குடும் பத்தில் ஒருவராக இருக்கவில்லையானல், சிரமமும், சிக்கல் களும் ஏற்படும். அப்படிப்பட்ட முறைகளை வகுத்து, அதன்படி நடந்துதான் ஆகவேண்டும். அப்படியில்லை யெனில், தனிமனிதனைச் சுற்றியிருக்கும் சமுதாய அமைப்பும், தடைப்பட்டு சிதறும் என்றுதான் நினைக்கிறேன். இம்மாதிரித் திருமணங்கள் சட்ட ரீதியாக நடைமுறையிலே அங்கீகரிக்கப் பட்டிருக்கின்றன. "ரிட்டர்ன்" ஆக வேண்டுமென்ருல், எழுதி ரிஜிஸ்டர் செய்யக் கூடிய முறையில் அங்கீகரிக்கப்படவேண்டும். இரண்டுக்கும் குறுக்காக, மற்றெரு வழியை, முறையை நாமே வகுத்துக் கொள்வதானல், அது பாரம்பரியமாக இருக்கும் முறையில் பங்கம் விளைவிக்கும் நிலையை ஏற்படுத்தக் கூடும். அப்படி ஏற்படுத்தக்கூடாது. அத்தகைய சட்டத்திற்கு அவசியம் இல்லை.

சிறு, சிறு விஷயங்களை காரணத்துடன் திருமணங்களில் வைத்திருக்கிறார்கள். அரசு கட்டிக் கொள்வது என்றும் அம்மி மிதிப்பது என்பதுமாக சில சடங்குகளை வைத்திருக்கிறார்கள். அவற்றில் எவ்வளவோ கருத்துக்கள் இருக்கின்றன. பெரியவர்கள் இதில் ஏதோ பெரிய கருத்துக்கள் இருக்கின்றன என்று அறிந்து அந்த முறையைக் கையாண்டு வந்திருக்கிறார்கள். அரசையும் வேம்பையும் சடங்கு மூலமாகக் கட்டுகிறார்கள். அதிலும் எவ்வளவோ கருத்துக்கள் அடங்கி இருக்கிறது. இரண்டையும் சேர்த்து சுற்றுவதால் அதில் எவ்வளவோ சயன்சு இருக்கிறது. மரங்களும் மூச்சு விடுகின்றன, மூச்சு வாங்கின்றன. அந்த அளவில் அரசையும வேம்பையும் சேர்த்துக்கட்டினால் அது இரண்டும் சேர்ந்து விடக்கூடிய காற்றில் ஏதோ ஒரு சக்தி இருக்கிறது என்று கண்டு பிடித்திருக்கிறார்கள். அதாவது கர்பச்சினைவை உண்டாக்கக்கூடிய அணுக்களைக் கொல்லக்கூடிய ஒரு சக்தி அந்தக் காற்றிற்கு இருப்பதாகக் கண்டுபிடித்திருக்கிறார்கள். அதனால்தான் திருமண காலங்களில் அடையாளமாக அந்த இரண்டையும் சேர்த்துக் கட்டுகிறார்கள். நெருப்பு புனிதத்தின் இருப்பிடம் தீயவைகளை அழிக்கும் சக்தி அதற்கு இருக்கிறது. அதற்கு என்றே ஹோமம் வளர்த்தல் போன்ற சில சடங்குகளை வைத்திருக்கிறார்கள். இப்படிப் பட்ட பல சடங்குகள் எவ்வளவோ காலமாக இருந்து வந்திருக்கின்றன. அவைகள் எல்லாம் வேண்டாம் என்று சொல்வது சரியல்ல. பெரியவர்கள் ஏதோ காரணத்திற்காகத்தான் அப்படியெல்லாம் வைத்திருக்கிறார்கள். அதை நாம் பின்பற்ற வேண்டியவர்களாகத்தான் இருக்கிறோம். இது வரையிலும் அவைகளை முற்றிலும் ஆராய்ந்து குறைக்க வேண்டும் என்றும் யாரும் சொன்னதாகத் தெரியவில்லை. பழமையானது என்பதற்காக எதையும் புறக்கணிக்கக் கூடாது. பழைய அனுஷ்டானங்கள் விஞ்ஞான ரீதியில் அமைந்தவைகளே. பெரியவர்கள் இதைக் கண்டுபிடித்து ஏதோ முடிவுக்கு வந்திருக்கிறார்கள். அதை நாம் நிச்சயமாக நம்பவேண்டும். இவைகளையெல்லாம் நன்றாக கவனித்து ஆராய்ந்து பார்த்தால் அவர்கள் இப்படிப்பட்ட மசோதா அவசியம் என்று கருதமாட்டார்கள். இப்படிப்பட்ட சுய போக்கில் அவர்கள் போகமாட்டார்கள் என்று நான் கருதுகிறேன். இதை சட்ட பூர்வமாக்கினால் சமுதாயத்திற்கு பெரிய இழுக்கு ஏற்படும். அப்படி ஏற்பட விடக்கூடாது. அதற்கு அவர்கள் முன் வரமாட்டார்கள் என்று நம்புகிறேன். இப்படிப்பட்ட சட்டத்திற்கு அவசியம் இல்லை என்ற என்னுடைய கருத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

**Sri V. SANKARAN** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவில் பல முக்கியமான குறைபாடுகள் இருக்கின்றன. தற்சமயம் இது போன்ற மசோதாவுக்கு இடமே இல்லை என்ற காரணத்தினால் இந்த மசோதாவை நான் ஆட்சேபிக்கிறேன்.

முதலில் இந்த மசோதாவினுடைய முக்கியமான கருத்தை, நோக்கத்தை எடுத்துக்கொண்டு பார்த்தால் ஏதோ ஹிந்துக்கள் தான் சட்டம் இல்லாமல் திருமணங்களை நடத்திக்கொண்டு வருகிறார்கள் என்றும் அதைத் தடை செய்ய வேண்டுமென்ற நோக்கத்துடன் இதைக் கொண்டு வந்திருப்பதாகவும் தெரிய வருகிறது. எந்தச் சீர்திருத்தம் செய்ய வேண்டும் என்றாலும் உடனே ஹிந்துக்களுடைய முறைகளைப்பற்றிதான் சீர்திருத்தம் செய்யவேண்டும் என்ற ஒரு சிலர் முற்படுகிறார்கள். அவர்கள் எல்லோரும் மற்ற மதங்களுக்குச் செல்வதாகத் தெரியவில்லை. அதன் காரணம் என்ன என்பதும் புரியவில்லை. சீர்திருத்தம் செய்ய வேண்டியது ஹிந்துக்கள் மதம்தானா என்பதை அறிய விரும்புகிறேன். அல்லது இந்தியா பூராவிலுமே ஒரு வித மாறுதலைச் செய்ய வேண்டும் என்று கொண்டு வந்தால் அதை ஒருவாறு ஒத்துக்கொள்ளலாம். எதற்கெடுத்தாலும் ஹிந்துக்களுடைய மதத்தைச் சொல்லி அதில் சீர்திருத்தம் செய்ய வேண்டும் என்று சொல்வதில் என்ன அர்த்தம் இருக்கிறது என்பது தெரியவில்லை. ஹிந்துக்களுக்குத்தான் புராணங்களிலும் மதத்திலும் மூட நம்பிக்கை இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. பல தவறுகள் ஹிந்து மதத்தில்தான் இருக்கிறது என்றும் சொல்லப்படுகிறது. இதைப்பார்த்தால் எப்படி இருக்கிறது என்றால் "ஊருக்கு எளியவன் யார் என்றால் பிள்ளையார் கோவில் ஆண்டி" என்று சொல்வார்கள். அதற்கு இணங்க எதற்கெடுத்தாலும் ஹிந்து மதத்தை எடுத்துக்கொள்ளுகிறார்கள். இதில் தானா மூட நம்பிக்கை இருக்கிறது, தவறுகள் இருக்கின்றன, குறைபாடுகள் இருக்கின்றன, சீர்திருத்தம் செய்ய வேண்டியது அவசியமாக இருக்கிறது? அப்படி ஏதாவது சீர்திருத்தம் செய்ய வேண்டும் என்று நினைத்தால் அது அகில இந்திய ரீதியில் இருக்க வேண்டுமே தவிர ஹிந்துக்களுக்கு மட்டும் என்று இருக்கக் கூடாது.

அடுத்தபடியாக சுய மரியாதைத் திருமணங்களை சட்ட பூர்வமாக்க வேண்டும் என்று சொல்லப்படுகிறது. "சுய மரியாதை" என்ற வார்த்தையை உபயோகப்படுத்தி இருப்பதைப் பார்த்தால் அதையே ஆட்சேபிக்க வேண்டியதாக இருக்கிறது. அதைக் கவனித்தால் சுயமரியாதைத் திருமணங்கள் செய்து கொள்ளுகிறவர்கள்தான் சுயமரியாதை உள்ளவர்கள் என்றும் மற்றவர்கள் எல்லாம் சுயமரியாதை இல்லாதவர் என்றும் நினைக்கக் கூடிய அளவில் அந்த வார்த்தையை உபயோகித்திருப்பதைப் பார்த்து நினைக்க வேண்டியதாக இருக்கிறது. மற்ற முறையில் திருமணங்களைச் செய்து கொண்டிருந்தால் அவர்கள் எல்லோரும் சுயமரியாதை இல்லாதவர்களா என்று கேட்கிறேன். ஆகவே அப்படி உபயோகப்படுத்தப்பட்டிருக்கிற வார்த்தைகளை நான் ஆட்சேபிக்கிறேன். இந்த முறை அல்லாத திருமணங்கள் எல்லாம் சுயமரியாதை இல்லாத திருமணங்களா என்று அறிய வேண்டும். தலைப்பில் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிற அந்த வார்த்தையை நான் வன்மையாகக் கண்டிக்கிறேன்.

19th August 1960] [Sri V. Sankaran]

இரண்டாவதாக இந்தச் சட்டத்திற்கு அவசியம் என்ன என்பது புரியவில்லை. சாதாரணமாக நாம் நம்முடைய நடைமுறையில் பல காரியங்களைச் செய்யும்பொழுது அவைகளுக்கு சில சடங்குகளை வைத்திருக்கிறோம். அதைப்போலவேதான் திருமணங்களுக்கும் சில முறைகளை வைத்திருக்கிறோம். சாதாரணமாக, ஒரு பொதுக் கூட்டத்தை நடத்துவதாக இருந்தாலும் அதற்கு என்று ஒரு முறையை, சடங்கை வைத்திருக்கிறோம். துவக்க விழா என்றும், வரவேற்பு உரை என்றும், தலைவர் உரை என்றும், பிறகு மற்றவர்கள் பேசுவது என்றும், கடைசியில் முடிவுரை என்றும் ஒருவித முறையை வைத்திருக்கிறோம். அதைப்போலவேதான் எல்லா காரியங்களுக்கும் ஒரு வித முறையை நாம் அனுஷ்டித்து வருகிறோம். அதைப்போலவே திருமணங்களுக்கும் நாம் சில முறைகளை வைத்திருக்கிறோம். கலியாணம் என்றால் அது சாதாரணமான விஷயம் அல்ல. கணவன் மனைவியினுடைய வாழ்க்கை, அவர்களுடைய ஆயுள் பூராவும் நிர்ணயம் செய்யப்படுகிறது. அதை நல்ல முறையில் அமைப்பதற்காக சில சடங்குகளை வைத்திருக்கிறார்கள். கணவனும் மனைவியும் சேர்ந்து தங்களுடைய வாழ்நாள் பூராவும் நல்ல முறையில் வாழ வேண்டும் என்பதற்காக அப்படி வைத்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட கலியாணங்களை சாதாரணமாக ரத்து செய்து விட முடியாது. சாதாரணமாக கடையில் சாமானை வாங்குவதுபோல் இருக்கக்கூடாது என்று கருதி அதற்கு முக்கியத்துவம் கொடுத்திருக்கிறார்கள். அதற்காக பல காரியங்களைச் செய்ய வேண்டியதாக இருக்கிறது. எந்தக் காரியத்தைச் செய்வதாக இருந்தாலும் நாம் சில முறைகளைக் கையாண்டு வருகிறோம். சாதாரணமாக, உடைகளை அணிவதிலும் கூட சில கட்டுபாடுகளை வைத்திருக்கிறோம். விருந்துக்குச் சென்றால் எப்படி உடை அணிந்துகொள்ள வேண்டும் என்று இப்படிப்பட்ட பல கட்டுப்பாடுகளை நாம் வைத்திருக்கிறோம். அதற்குக் காரணம் என்ன என்று சொல்ல முடியாது. பெரியவர்கள் வைத்திருக்கிறார்கள், அதை நாம் கடைப்பிடிக்கிறோம். அதைப்போலவே திருமணங்களுக்கும் சில முறைகளை வைத்திருக்கிறார்கள். அது கூடாது என்று சொல்வது சரியல்ல. இன்றைக்கு திறப்பு விழா என்று நடத்துகிறார்கள். அப்பொழுது ரிப்பனை வெட்டுகிறார்கள், இது எதற்கு? ஏற்கெனவேதான் திறந்து வைக்கப்பட்டிருக்கிறதே. அதைப்போலவேதான் ஒவ்வொன்றுக்கும் ஒரு முறையை வைத்திருக்கிறார்கள். அதைப் போலவேதான் திருமணத்திற்கும் வைத்திருக்கிறார்கள். அவைகள் எல்லாம் அவசியம் என்றுதான் வைத்திருக்கிறார்கள், அது கூடாது என்று சொல்வதில் அர்த்தம் இல்லை. அந்த முறையிலும் இந்த மசோதாவுக்கு அவசியம் இல்லை என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, திருமணங்கள் எல்லாம் புரோகிதர்களை வைத்து நடத்தப்படுகின்றன. அவர்களையெல்லாம் ஒழித்துவிட வேண்டும் என்ற கருத்துப்படும்படி பேசினார்கள். புரோகிதர்கள்

[Sri V. Sankaran] [19th August 1960

என்று சொல்லும்போது எவ்வளவோ திருமணங்கள் புரோகிதர்கள் இல்லாமல் நடத்தப்படுகின்றன. அவைகள் எல்லாம் சட்டபூர்வமாக நடைபெறவில்லை என்று சொல்லவில்லை. இப்பொழுது சட்டபூர்வமாக நடைபெறவில்லை என்று சொல்லக்கூடிய திருமணங்கள் எல்லாம் புரோகிதர்கள் இருந்து நடத்தவில்லை என்ற காரணத்தைக் காட்டி அப்படி தீர்ப்பளிக்கப்படவில்லை. அதற்கு என்று சில சடங்குகள் இருக்கின்றன. அக்னி சாட்சியாக அம்மி மிதித்து கலியாணம் செய்து கொள்வது என்று இருக்கிறது. அக்னி எதற்காக என்றால் அக்னி எங்கும் இருக்கிறது என்ற காரணத்தால், திருமணம் செய்யப்படுகிறபொழுது அதைச் சாட்சியாக வைத்து அப்படிச் செய்யப்படுகிறது. காசுக்காக இந்த முறைகளை வைக்கவில்லை. காசு இல்லாவிட்டாலும் இந்த முறைகளை கையாள வேண்டும் என்று சொல்லப்படுகிறது. ஆகவே, ஒரு ஜாதிக்கு என்று இப்படிப்பட்ட சட்டம் கொண்டு வரவேண்டிய அவசியமில்லை. இப்பொழுது திருநெல்வேலியில் தேவாரம் திருவாசகம் சொல்லி சில குருக்கள் திருமணங்களைச் செய்து வைக்கிறார்கள். காசு செலவு இல்லாமல் அந்த முறையிலாவது திருமணங்களைச் செய்து கொள்ளலாம். அதற்கு எந்த விதமான ஆட்சேபணையும் இல்லை. ஏதாவது தமிழ் முறையில்தான் இருக்கவேண்டும். ஏதோ சாட்சிகளை வைத்துக் கொண்டு திருமணங்களை நடத்தவேண்டும். அது இல்லாமல் இருக்கக்கூடாது என்றுதான் சொல்லப்படுகிறது. புரோகிதர்கள் நடத்தி வைக்கிறார்கள் என்ற காரணத்தைக் காட்டி அப்படிப்பட்ட திருமணங்கள் வேண்டாம் என்று சொல்வதில் பிரயோசனம் இல்லை. புரோகிதர்கள் இல்லாமலே திருமணங்களை முறைப்படி நடத்துவதற்கு இடம் இருக்கிறது. அதற்கு இந்தச் சட்டம் அவசியம் இல்லை. ஏற்கெனவே அதற்கு வேண்டிய இடம் இருக்கிறது. ஆகவே சட்ட பூர்வமாக இப்பொழுது அவசியம் இல்லை.

மத நம்பிக்கை இல்லை என்பதால் இதைக் கொண்டு வந்திருக்கலாம். இதற்கு முன்னும் மதத்தில் நம்பிக்கை இல்லாதவர்களும் தெய்வ நம்பிக்கை இல்லாதவர்களும் இருந்திருக்கிறார்கள். பழங்காலத்தில் சாக்கிய வகுப்பு என்று இருந்தது. அவர்களுக்கு தெய்வ நம்பிக்கை கிடையாது, தெய்வமே கிடையாது என்றுதான் அவர்களும் சொல்லிக்கொண்டிருந்தார்கள். இப்பொழுது சொல்வது ஒன்றும் புதிது அல்ல. இது புது விஷயம் அல்ல, முன் காலத்திலிருந்தே இருந்திருக்கிறது. மதத்தில் நம்பிக்கை இல்லாதவர்கள் ஏற்கனவே இருந்திருக்கிறார்கள். அப்பொழுது முதற்கொண்டே இம்மாதிரியான திருமணங்கள் நடைபெற்று வந்திருக்கின்றன. ஸ்பெஷல் மாரியேஜஸ் ஆக்டின்கீழ் நடைபெற்று வந்திருக்கின்றன. அப்படிப்பட்ட சட்டங்கள் இல்லாமல் இல்லை. அவைகள் எல்லாம் முறைபற்ற கலியாணங்கள் என்று சொல்லவில்லை. வேறு எந்த விதத்திலும் பண்ணிக்கொள்வதற்கு இடம் இருக்கிறது. அதற்கு என்று ஒரு ப்ரோஸீஜர் இருக்கிறது.

19th August 1960] [Sri V. Sankaran]

கலியாணத்தை ரிஜிஸ்தர் பண்ணிக்கொண்டால் போதும் என்று இருக்கிறது. அதுபடி செய்து கொண்டால் போதும். புது முறை அவசியம் இல்லை. ஏற்கெனவே இதற்கு வழி இருக்கிறது. ஆகவே இந்த மசோதாவே தேவை இல்லை என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன். அப்படி வைத்துக்கொண்டாலும் ஏதோ ஏற்கெனவே நடந்து போனது, தெரிந்தோ, தெரியாமலோ நடத்தியாகிவிட்டது. அவற்றைச் செல்லுபடியாகும்படியாகச் செய்யலாம் என்றால் அதையாவது ஓரளவு ஒத்துக்கொள்ளலாம். ஆனால் இனிமேலும் நடக்கக்கூடிய திருமணங்களைச் செல்லுபடியாக்கவேண்டும் என்று சொல்வதன் மூலம் தவறான காரியத்தை மேலும் நடக்கத் தூண்டுவதாக ஆகும். முறைப்படி நடக்கிறவர்கள் கண்ணைக் குத்துவது போல இப்படிச் செய்யக் கூடாது. ஏற்கனவே ஸ்பெஷல் மாரியேஜஸ் ஆக்ட்-படி அப்படி நடக்கக் கூடிய திருமணங்களை ஒழுங்குபடுத்திக்கொள்வதற்கு வழி இருக்கும்போது இப்போது புதிதாக இப்படி மாற்றிப் போட வேண்டுமென்ற அவசியம் இல்லை என்று கூறுகிறேன். 11-00 a.m.

அடுத்தபடியாக, இந்தச் சட்டத்தில் சுயமரியாதைத் திருமணங்களை தாசில்தார் முன் ரிஜிஸ்டர் செய்து கொள்வதற்கு வழி இருக்கிறது. ஆனால் இதில் ஒரு குறைபாடு இருக்கிறது. நான் இன்னாரைக் கல்யாணம் செய்துகொண்டேன் என்று இரண்டு சாட்சிகளை அழைத்துப்போய் ஒருவர் சொல்கிறார் என்றால்— "நான் அந்தப் பெண்ணை மணந்து கொள்ளவில்லை" என்று ஆண் ஆட்சேபித்தாலோ, "நான் அவரைத் திருமணம் செய்துகொள்ள வில்லை" என்று பெண் ஆட்சேபித்தாலோ அந்த ஆட்சேபணையை விசாரித்து தீர்ப்பு அளிப்பதற்கு இந்தச் சட்டத்தில் வழிவகை காணோம். 'அக்ரீவ்டு பார்டி.' 'அப்பீல்' பண்ணிக்கொள்வதற்கும் வழி இல்லை. ஆனால் 'ரிவிஷன் பவர்' என்று அதிகாரிகளுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்தப் பவரைக் கூட 'அக்ரீவ்டு பார்டி' அப்பீல் செய்து கொள்வதன்பேரில் விசாரித்துப் பிரயோகிக்க வழிவகை இல்லை. இவையெல்லாம் இந்த மசோதாவில் உள்ள முக்கியமான குறைபாடுகள். ஆகவே இவ்வளவு குறைபாடுகளோடு அவசியமற்ற இந்த மசோதாவை ஏற்றுக்கொள்வது சரியல்ல என்று கூறிக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

SRI T. KARIA GOUNDER: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த சுயமரியாதைத் திருமண மசோதாவை எதிர்த்து நான் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்தச் சுயமரியாதைத் திருமணம் என்பது எப்போது யாரால், எப்படி கொண்டுவரப் பட்டது என்கிற சரித்திரத்திற்குள் புகலாம் என்று எண்ணுகிறேன். காரணம் என்னவென்றால் புரோகித ஒழிப்பு வேண்டுமென்று பெரியார் அவர்கள் கொண்டுவந்த காலத்திலே—அப்படிச் செய்யப்படுகிற திருமணத்திற்கு சுயமரியாதை திருமணம் என்று பெயர் வந்தது. ஆனால் இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கிற மெம்பர்—அதை ஆதரிக்கின்ற மெம்பர்கள்—பெரியார்

அவர்களை மற்ற எல்லாத் துறைகளிலும் கைவிட்டுவிட்டாலும் இந்த ஒரு துறையிலாவது கைவிடாமல் இருக்கிறார்களே என்று நான் பாராட்டுகிறேன். காரணம் என்னவென்றால் நான் சுய மரியாதைக் கல்யாணம் பண்ணிக்கொண்டவன். எனக்கு இரண்டு பிள்ளைகள். என் பிள்ளைகளுக்கும் சுயமரியாதைக் கல்யாணம் செய்யவும் போகிறேன். எனக்கு, என் பிள்ளைகளுக்கு சுய மரியாதை இல்லையென்றால் ஆண்மை இல்லையென்று அர்த்தம். எல்லோருக்கும் சுயமரியாதை இருக்கிறது. பெரியார் அவர்கள் ஏதோ ஆரம்பித்தார்கள், ஒரு சாரார் மீது ஏற்பட்ட அதிருப்தி காரணமாக, ஆரம்பத்திலே அதை மக்கள் அவ்வளவாக சரிவர ஆதரிக்கவில்லை. ஆகவே அப்போது எந்த இடத்தில் கூப்பிட்டாலும் பெரியார் அவர்கள் சும்மா சென்று திருமணம் செய்து வைத்து வருவார்கள். ஆனால் இப்போது சுயமரியாதைக் கல்யாணம் என்றால் 101 ரூபாய் முன்னால் அவருக்கு மணியார்டர் செய்யப்படவேண்டும். மற்றபடி பெட்ரோல் செலவு, இதர செலவுகள் எல்லாம் இருக்கின்றன. இப்போது சுயமரியாதைக் கல்யாணம் என்பது புரோகிதக் கல்யாணத்தைவிட அதிகமாகச் செலவு ஆகக்கூடியதாக இருக்கிறது. மதிப்பிற்குரிய அங்கத்தினர் அவர்கள் நாங்கள் 1½ ரூபாய் கொடுக்கிறோம் என்று சொன்னார். கோவைப் பகுதியில் அது ரொம்பக் குறைச்சல் என்று நினைக்கிறேன். இன்றைக்கே சீர்திருத்த முறைப்படி பல திருமணங்கள் நடக்கின்றன. அவை செல்லுபடியாகாது, சொத்து உரிமை ஏற்படாது என்பது ஒன்றும் இல்லை. தமிழ் நாட்டில் நடக்கக்கூடிய திருமணங்கள் எல்லாம் அநேகமாக சீர்திருத்தத் திருமணங்களாகவே நடக்கின்றனவேயொழிய அதில் எந்த விதமான முறைப் பிசகும் ஏற்பட்டதாகக் காணோம். எங்கள் ஊரில் எங்கள் குடும்பத்தில் கல்யாணம் என்றால் எங்கள் சாதிக்கார புரோகிதரேதான் வருகிறார். எங்களோடே இருக்கிறார். எங்கள் காரியங்களைச் செய்கிறார். அவர் வேறு சாதிக்காரர் இல்லை. வேறு சாதிக்காரர்கள்கூட இப்போது வருவதில்லை. அவர்களுக்கும் சுயமரியாதை வந்துவிட்டது. ரொம்ப இழிவான சொல் சொல்கிறார்கள், பழிக்கிறார்கள் என்று இப்போது அவர்கள் ஊர்களிலேயே இல்லை. இருந்தாலும் திருமணத்திற்கு அழைத்தாலும் வருவதில்லை. புரோகிதம் செய்கிற ஆட்களே கிடையாது. ஆகவேதான் இன்றைய தினம் இந்த மாதிரியான ஒரு சட்டத்திற்கு அவசியமே இல்லை என்று சொல்ல விரும்புகிறேன். சீர்திருத்த முறைப்படி பல திருமணங்கள் நடக்கின்றன. அவை விசேஷ திருமணச் சட்டப்படி அங்கீகரிக்கப்படுகின்றன. ஏதோ ஹைக்கோர்ட்டில் ஒரு கேஸ் விஷயமாக ஜட்ஜ் என்னமோ செல்லுபடியாகாது என்று தீர்ப்பு அளித்துவிட்டார்கள். அவ்வளவுதான். சோஷலிஸ சமுதாய அமைப்பில் இன்று நாம் செயல்படுகிற முறையில் இத்தகைய சட்டத்திற்கே அவசியம் கிடையாது. இன்றைக்கே கதர் திருமணம் என்றும், புரட்சித் திருமணம் என்றும் பல விதமாக நடப்பதைப்பற்றிக் குறிப்பிட்டார்கள். ஆகவே இன்னும் புதிதாகக் குழப்பம் உண்டாக்காமல் இருப்பதற்கு, இந்தச்

19th August 1960] [Sri T. Karia Gounder]

சட்டம் அவசியமே இல்லை என்று தெரிவித்துக் கொள்கிறேன். கனம் அங்கத்தினர் திரு. கோவிந்தசாமி அவர்கள்கூட எதிர்க் கட்சிக்காரர்கள் கொண்டுவந்தார்கள் என்பதற்காக எதிர்க்கக் கூடாது என்றார்கள்? நாங்கள் என்ன? இந்த நாட்டில் எண்பது கோடி மக்கள் இருக்கிறார்கள் என்றால் 80 கோடி செலவழிக் கிறோம். நாங்கள் எதைக்கொண்டுவந்தாலும் குற்றம் சொல்லு கிறார்கள். எத்தனையோ நல்ல காரியம் செய்கிறார்கள், இதை ஏன் ஏற்றுக்கொள்ளக்கூடாது என்று எதிர்க்கட்சியில் சொல்லு கிறார்கள். அவர்கள் அதை ஒப்புக்கொண்டதுபற்றி நான் சந்தோஷப்படுகிறேன். இப்பொழுது கொண்டுவந்திருக்கும் சட்டம் அவசியம் இல்லாத சட்டம். ஏற்கெனவே தமிழ் முறையில் திருமணம் நடத்திக்கொண்டு வருகிறோம். எல்லோ ருக்கும் சுயமரியாதை இருக்கின்றதென்பதை நினைப்பூட்டுகிறேன். இந்தச் சட்டம் அவசியமில்லாத ஒரு சட்டம். சொத்து உரிமை சம்பந்தமாக குழப்பம் ஏற்பட்டால் அந்தக் காலத்தில் பின்னால் வரும் சந்ததியார் பார்த்துக்கொள்ளட்டும், பின்னால் வரும் சட்டசபை அங்கத்தினர்களுக்கு விட்டு விடுவோம். இந்தச் சமயத்தில் இது அவசியமில்லை என்று தெரிவித்துக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

**SRI M. MAYANDI NADAR:** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த சுயமரியாதை திருமணம் பற்றி எனக்கு முன்னால் பலபேர் பேசினார்கள். குறிப்பாக, இன்று நம் நாட்டில் நடந்து வரக்கூடிய திருமணம் சம்பிரதாய அமைப்பு பிரகாரம் மிகவும் புனிதமான தன்மையில் நாம் சடங்காக நடத்தி வருகிறோம். இப்போது இதைச் சட்டமாக அமைக்கவேண்டுமென்று சொல் வதைப் பார்க்கும்போது ஏனைய நாடுகளில் இருப்பதைப்போல் அல்லாமல், கற்பும் திருமணமும் இங்கு ஒரு புனிதம் என்று கருதும்போது, இந்தச் சட்டம் கொண்டுவந்ததைப் பார்க்கும் போது, இது மிகவும் வருந்தத்தக்கதாக இருக்கிறது. குறிப்பாக எனக்கு முன்னால் பேசியவர்கள் இந்த சுயமரியாதைத் திருமணம் கொஞ்சகாலமாக 20, 30 ஆண்டுகாலமாக நடந்துகொண்டு வருவ தாக சொன்னார்கள். ஆனால் கிராமப்பகுதிகளில் சென்று பார்த் தால் திருமணங்களெல்லாம் சாதாரணமாக நாட்டாண்மைக்காரர் களால் நடத்தப்பட்டு வருகின்றன. இது கிராமப்பகுதியில் உள்ளவர்களுக்கு நன்றாகத் தெரியும். இப்படிப்பட்ட திருமணங்கள் நேருவதனால் அவர்களுடைய சொத்துரிமைக்கு ஏதும் தடை ஏற்பட்டுவிடவில்லை. அவைகளெல்லாம் மிகவும் புனிதத்தன்மையில் அமைக்கப்பட்டிருக்கிறது. அதை நாம் பின்பற்றித்தான் வரு கிறோம். சட்டம் செய்யக்கூடிய முறையில் எனக்கு முன்னால் பேசியவர்கள் குறிப்பாக ஒரு சமூகத்தை வெறுக்கக்கூடிய முறை யில் புராதன பழக்கவழக்கங்களை ஒழிக்கவேண்டுமென்று இதைக் கொண்டுவந்திருக்கிறார்கள். இன்று நம் நாட்டில் இருக்கும் நிலைமையைப் பார்த்தால் ஒவ்வொரு வகுப்பினருக்கும் ஒரு சடங்கு என்ற முறையில் இந்தப் புனிதத் தன்மையை ஏற்படுத்தியிருக் கிறார்கள். சடங்குகள் எல்லாம் நல்ல முறையிலே அமைக்கப் பட்டிருக்கின்றன.

இந்தக் காலத்தில் கல்லூரியில் படிக்கின்ற மாணவ மாணவிகள் காதல் புரிகிறார்கள். அதற்குப்பிறகு தாய் தகப்பனுக்குத் தெரிந்து திருமணம் நடைபெறுகிறது. ஆனால், அந்தக் காலத்தில் சாதாரணமாக ஒரு பையனுக்கு தாய் தகப்பன் பார்த்துதான் பெண்ணை முடிவு கட்டுவார்கள். அதை ஒப்புக்கொண்டு திருமணம் நடைபெறும். ஆகையால் ஒரு பெண்ணை முடிப்பதற்கு முன்னால் பெண் வீட்டார் ஆனாலும் சரி, பிள்ளை வீட்டாரானாலும் சரி, தாய் மாமன் உறுதி கூறவேண்டும். உறுதி என்றால் வில்லங்க சர்டிபிகேட் வாங்குவதுபோல் ஆகிறது. ஒருவிதமான எதிர்ப்பும் இல்லை என்ற நிலையில் இது சொந்தத்திற்குள்ளேயே ஒரு அமைப்பாக வைத்திருக்கிறார்கள். கல்யாணம் செய்துகொள்ளும் ஒரு பெண்ணானாலும் சரி, பிள்ளையானாலும் சரி, யாரும் மணத்திற்கு முன்னால் நேர்முகமாக ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்ள முடியாத நிலைமை இருந்த காரணத்தால், திருமணத்தின்போது வாளியில் மோதிரத்தைப் போட்டு அவர்களை எடுக்கச்சொல்லி அவர்களை ஒன்று சேர்க்கக்கூடிய நிலைமையை ஏற்படுத்த அதை ஒரு சடங்காக ஏற்படுத்தியிருக்கிறார்கள். நம் நாட்டில் இவ்விதமான புனிதத் தன்மையான நல்லமுறைகளை பயன்படுத்தவேண்டுமென்று அதை பழக்கவழக்கத்தில் கொண்டுவந்தார்கள். இதில் ஏதும் பிணக்கு வரவில்லை. சட்டம் கொண்டுவருவது நம் நாட்டிற்கு உகந்ததா என்று பார்த்தால் இது அவசியம் இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். நம் நாட்டில் பெண்கள் ஒரு ஆணை ஏறெடுத்துப் பார்ப்பதே தப்பு, மனதால் நினைத்தால்கூட தப்பு என்ற பண்பாடு இருந்தது. மற்ற நாடுகளைப்பார்த்து அங்குள்ள நாகரீகத்தை மேற்கொள்வது சரி அல்ல. அங்கே அப்படியிருக்கலாம். அது நம் நாட்டிற்கு உகந்தது அல்ல. ஆகையால் இந்த சட்டம் அவசியமில்லை என்றும் இந்த மசோதாவை மறுக்கிறேன் என்றும் சொல்லிக் கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri A. V. P. ASAITHAMBI :** கனம் சட்டமன்றத் தலைவர் அவர்களே, இந்த சுயமரியாதைத் திருமணங்கள் எல்லாம் செல்லுபடியாகவேண்டும் என்கிற நோக்கத்தோடு இந்த மசோதாவை எங்களுடைய கட்சிக்காரர்கள் கொண்டுவந்ததை நான் ஆதரித்து இரண்டொரு வார்த்தைகள் கூறவிரும்புகிறேன் சுயமரியாதைத் திருமணத்திற்கு மூலகர்த்தா பெரியார் ஈ.வே. ராமசாமி அவர்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. இந்த சுயமரியாதைத் திருமணத்தை அவர்கள் நாட்டிலே புகுத்தியதன் மூலமாக இந்த நாட்டுமக்களுடைய மரியாதையை ஓரளவுக்குக் காப்பாற்றினார் என்பதையும் மறுக்கமுடியாது. ஆனால் எனக்கு முன்பு பேசிய கனம் அங்கத்தினர் திரு. கரிய கவுண்டர் அவர்கள் "பெரியார் அவர்களை எல்லாவகையிலும் கைவிட்டுவிட்டு இந்த ஒரு வகையிலாவது ஆதரிக்கிறார்களே" என்று அவர் குறிப்பிட்டார்கள். நான் அவர்களுக்கு சொல்லுகிறேன், உங்கள் மூலமாக, பெரியார் அவர்களை மற்ற விஷயங்களிலெல்லாம் பயன்படுத்திக் கொண்டு இந்த ஒரு விஷயத்தில் மாத்திரம் கைவிடுவது என்பது நல்ல காரியம் அல்ல. (சிரிப்பு.) சுயமரியாதைத் திருமணம் என்பது என்ன நோக்கத்திற்கு வந்தது என்பதை நாம் ஆராய்ந்து

19th August 1960] [Sri A. V. P. Asaithambi]

பார்த்தால் இந்த அரசாங்கம் சோஷியலிஸ்ட் சமுதாயத்தை உருவாக்குவதற்கு அடிப்படையாக இந்தத் திருமணம் மிகவும் பயனுள்ளதாக இருக்கும். 10, 20 ஆண்டுகளுக்கு முன்பு ஏற்பட்டது என்றால், இந்த நாட்டினுடைய நிலைமை எந்த அளவுக்கு இருந்தது என்பதைப்பற்றி நாம் எண்ணிப்பார்க்கவேண்டும். புரோகிதத் திருமணத்தை ஆதரிப்பவரும், புரோகிதர்கள் மீதுள்ள வெறுப்பினாலும், அவர்களை அடியோடு உதவாது என்று சொல்லக் கூடிய துவேஷ மனப்பான்மையும் இதிலே இருப்பதாகச் சொல்லி தப்பித்துக் கொள்ளுகிறார்கள். உண்மையிலே எந்தத் தனிப்பட்ட வகுப்பார் மீதும் யாருக்கும் வெறுப்பு கிடையாது. ஆனால் எனக்கு முன்பு பேசிய கனம் அங்கத்தினர் திரு. மாயாண்டி நாடார் அவர்கள் சொன்னார்கள், இதில் ஒரு குறிப்பிட்ட வகுப்பார்மீது துவேஷம் இருப்பதாக. அவர்கள் குறிப்பிட்டது யாரை என்றால் பார்ப்பன சமுதாயத்தைத்தான். குறிப்பாக பார்ப்பன சமுதாயத்தின்மீது பெரியார் அவர்களுக்கோ, அவர்களுடைய கொள்கையைப் பின்பற்றி நடந்துவரும் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கோ இன்றைக்கும் துவேஷம் கிடையாது, அன்றைக்கும் கிடையாது, என்றைக்கும் இருக்காது. 20 ஆண்டுகளுக்கு முன்பு நமது சமுதாயம் எப்படி இருந்தது என்பதை கனம் அங்கத்தினர் சற்று சிந்தித்துப் பார்க்கவேண்டும். 25 ஆண்டுகளுக்கு முன்பு எனக்கு முன்பு பேசிய திரு. மாயாண்டி நாடார் அவர்கள் பார்ப்பனர் என்று சொல்லக்கூடிய குறிப்பிட்ட சமுதாயம் வாழக் கூடிய தெருவுக்குள் நுழையக்கூட உரிமை கிடையாது. நம் நாட்டு முதல் அமைச்சர் கனம் திரு. காமராஜ் அவர்களும் நுழைய முடியாது. கனம் அமைச்சர் திரு. கக்கன் அவர்களும் நுழைய முடியாது. கனம் அமைச்சர் திரு. வெங்கடராமன் அவர்களைத் தவிர வேறு யாரும் ஒரு குறிப்பிட்ட சமுதாயம் வாழுகின்ற தெருவில் நுழைய முடியாது என்ற நிலைமை அப்போது இருந்தது. அப்படிப்பட்ட பகுதியில் வாழும் மனிதரைக் கூட்டி வந்து நமது வீட்டுத் திருமணத்தில் அவருக்கு மரியாதை கொடுத்து அவர்களுக்கு வேண்டிய சலுகைகள் எல்லாம் செய்து கொடுத்து நாம் திருமணம் செய்கிறோம் என்று சொன்னால் நமக்கு மரியாதை இருக்கிறது என்று படித்த யாராவது ஒப்புக்கொள்ள முடியுமா? மதியார் தலைவாசல் மிதியாதே என்பது நமது மூதாதையர் வழங்கிய மொழி. என்னுடன் கூடப் பிறந்தவர்களாக இருக்கலாம், பெரியப்பா, சித்தப்பா பிள்ளைகளாக இருக்கலாம் அவர்கள் வீட்டில் நடைபெறுகிற வைபவங்களில் நமக்கு சிறிதளவு மரியாதைக் குறைவு ஏற்பட்டாலும்கூட பின்னர் அவர்கள் வீட்டிற்குச் செல்வதோ அல்லது அங்கு நடக்கிற நல்லது அல்லது கெட்ட காரியங்களுக்குப் போவதையோ நாம் நிறுத்தி விடுகிறோம். அந்த நிலையில், நம்மை நாயைவிட மோசமாக நடத்துகிற—நான் ஒரு சமுதாயத்தைப்பற்றி துவேஷமாகப் பிரசாரம் செய்யவில்லை—ஒரு சமுதாயத்தினரைக் கூட்டி வந்து நமது வீட்டில் அவருக்கு வேண்டிய மதிப்பு கொடுப்பது, மரியாதை இல்லை, செய்வது என்பது நமக்கு மரியாதை இல்லை, மான உணர்ச்சியில்லை என்பதைத்தான் காட்டுமே தவிர வேறு அல்ல. ஆகவே, இத்தகைய முறை நமது மரியாதையைப் பாதிக்கக்கூடிய அளவிற்கு இருப்பதால்

பெரியார் அவர்கள், இவ்வளவு மானம் கெட்டு தமிழ் நாடு இருக்கிறதே, இந்த மாதிரி இருக்கக்கூடாது என்பதற்காக வேண்டித்தான் தீவிரமான முறையில், புரட்சிகரமான முறையில் புரோகிதரே இல்லாதபடி யாராவது ஒரு பெரிய மனிதரை வைத்து அவர் எந்த ஜாதிக்காரராக இருந்தாலும் சரி, அவர்களுக்கு வேண்டியவராகயிருந்தாலும் சரி, அல்லது அரசியலில் ஈடுபாடு கொண்டவராகயிருந்தாலும் சரி, பெரிய மனிதர் என்று இருக்கக்கூடிய ஒருவரை அழைத்து வந்து மாப்பிள்ளையை நான் இந்தப் பெண்ணை என் வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக் கொள்கிறேன் என்று சொல்லச் சொல்லி, அந்தப் பெண்ணை அழைத்து, நான் இவரை என் வாழ்க்கைத் துணைவராக ஏற்றுக் கொள்கிறேன் என்று சொல்லச் சொல்லி, அந்தத் திருமணத்தை இரண்டு நிமிடங்களில் முடித்துவிட்டு, திருமணம் ஆகிவிட்டது என்ற ஏற்பாட்டைச் செய்தார்கள். ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபத்து நான்காம் வருடத்திலிருந்து இது தீவிரமாக நடந்து வந்தது. அப்பொழுது இத்தகைய திருமணங்களுக்குக் கடுமையான எதிர்ப்பு இருந்தது. கடுமையான எதிர்ப்பு என்று சொன்னால் இந்தமாதிரி திருமணம் செய்து கொண்டவர்களை ஜாதியிலிருந்தே விலக்கி வைப்பது, அவர்களை நல்ல காரியங்களில் சேர்க்காமல் இருத்தல் இப்படிப்பட்ட எதிர்ப்பு அந்த சமயத்தில் இருந்தது. இவைகளையெல்லாம் எதிர்த்து சமாளித்துப் போராடி கடைசியாக இன்றையதினம் இந்தமாதிரி திருமணங்கள் சர்வ சாதாரணமாக எல்லாக் கட்சியினரும் இந்தக் காலத்தில் நடத்த ஆரம்பித்து விட்டதை நாம் பார்க்கிறோம். ஒரு ஜாதிக்குள்தான் இந்தத் திருமணம் நடக்கிறது என்பதல்ல .இதில் கலப்பு மணம் ஏராளமாக நடக்கிறது. ஜாதியை விட்டு ஜாதியில் திருமணம் செய்பவர்கள் தலைவர்களை வைத்துக் கொண்டு திருமணம் நடத்தி விட்டு பத்திரிகைகளிலும் மற்றும் அறிவித்து இந்தத் திருமணத்தை வழக்கமாக செய்ய ஆரம்பித்து விட்டார்கள். இதை, புரோகிதர் வைத்துச் செய்ய முடியாது. ஜாதிக் கட்டுப்பாடு மிகுந்த அந்த நேரத்தில் ஒரு ஜாதியிலிருந்து இன்னொரு ஜாதிப் பெண்ணை அல்லது மாப்பிள்ளையை சம்பந்தம் செய்து கொள்கிறார்கள் என்று சொன்னால் அந்தத் திருமணத்தை சாஸ்திர பூர்வமாக நடத்தி வைப்பதற்கு புரோகிதரை அழைப்பது என்று சொன்னால் ஊர் கட்டுப்பாடு காரணமாக அந்தப் புரோகிதர் வருவதில்லை. அந்தப் புரோகிதர் ஊர் கட்டுப்பாட்டிற்குப் பயந்து இந்தமாதிரி திருமணங்கள் நடைபெறக்கூடாது, இவை சாஸ்திரத்திற்கு விரோதம் என்று சொல்லி அவர் அந்த திருமணத்திற்கு வரவில்லை என்ற நிலை இருந்தால், நாட்டிலே ஜாதி நிரந்தரமாக நிலைத்திருக்க ஏற்பாடாகிவிடும். ஆனால் இங்கிருக்கிற எல்லா அங்கத்தினர்களும் ஆட்சியாளர்கள் உள்பட நாம் நிச்சயமாக நம்புகிறோம், இன்று இருக்கிற ஜாதி என்பது ஒழிக்கப் படவேண்டும் என்பதில் நமக்குள் அபிப்பிராய பேதம் கிடையாது. ஜாதி ஒழிக்கப்படவேண்டுமென்று சொன்னால் கலப்பு மணம் நாட்டில் நடைபெற்றாகவேண்டும். கலப்பு மணம் நடைபெறுவது என்று சொன்னால் அதற்குச் சட்டப் பிரகாரம் எல்லா உதவிகளும் இருக்க வேண்டும். இன்றுள்ள அரசாங்கத்தைப் பொறுத்

19th August 1960] [Sri A. V. P. Asaithambi]

தளவில் கலப்பு மணம் சட்ட விரோதமில்லை என்றாலும்கூட, கலப்பு மணம் செய்வதற்கு ஒரு தூண்டுதல் இல்லை. நாங்கள் உபகாரம் செய்யலாம், பண உதவி செய்யலாம் என்றால் மட்டும் போதாது. இந்த அரசாங்கம் அதில் தீவிர நோக்கோடு இருக்கிறது என்று சொன்னால், நல்ல சட்டம் ஒன்றைத் தயாரித்து இனி யாராயிருந்தாலும் சரி, அவரவர்கள் ஜாதிக்குள் பெண் கொடுக்கவோ எடுக்கவோ கூடாது என்றளவிற்கு ஒரு சட்டம் வந்தால் அது பிற்கால இந்தியாவிற்கு எவ்வளவோ நல்லது. இந்த அளவிற்கு இந்தியா பூராவிற்கும் ஒரு சட்டம் இருக்குமென்று சொன்னால் நாட்டுப் பிரிவினை, மொழிப் பிரிவினை, துவேஷப் பிரிவினை இவையெல்லாம் நிச்சயம் ஒழிந்து போகும். ஆனால் அப்படிப்பட்ட, அதற்குரிய சட்டம் இந்த அரசாங்கம் செய்வதாகக் காணோம். இப்பொழுதுள்ள சட்டப்படி ரெஜிஸ்ட்ரார் ஆபீஸில் போய் செய்ய வேண்டும். ஒரு பெண்ணும் ஒரு ஆணும் மணம் செய்து கொள்ள ரெஜிஸ்ட்ரார் ஆபீசிற்குப் போக வேண்டுமென்று சொன்னால் நோட்டீஸ் எல்லாம் வேண்டும், ஊருக்குத் தெரியும். அப்படித் தெரிந்தால் அந்தத் திருமணம் நடைபெறாது. அப்படி நடைபெறாது என்று சொன்னால் இந்த நாட்டைப் பொறுத்தவரை கலப்பு மணம் தீவிரமாகப் பரவுவதற்கு வழிவகை கிடையாது. ஆனால் சுயமரியாதைத் திருமணம் மூலம் கலப்பு மணம் செய்து வைக்க முடியும். திருமணம் நடத்தி வைத்து அவர்களிடம் கையெழுத்து வாங்கி விட்டோம் என்று சொன்னால் அது சட்டப்படி செல்லும் என்று சொன்னால் அவர்களைப் பின்னர் யாராலும் பிரிக்க முடியாது. அப்படிச் செய்தால், கூடியவிரைவில் எதிர்காலத்தில், சமுதாயத்தில் எல்லோரும் ஒன்று, நமக்குள் பேதம் கிடையாது என்ற நிலை வரும். பாரதியார் சொன்னதுபோல் பார்ப்பான் என்றும், பறையர் என்றும் வித்தியாசம் இல்லாத நிலை ஏற்படும்போதுதான் உண்மையான சமத்துவம் ஏற்பட முடியுமே தவிர அதற்கிடையில் என்னதான் சட்டப்படி இல்லை என்று சொன்னாலும் ஜாதி இருந்துகொண்டுதான் இருக்கும். அதுதான் இன்று இருக்கிறது. எனவே சுயமரியாதைத் திருமணம் மூலமாக எவ்விதக் கஷ்டமும் இல்லாதபடி, சுலபமாக ஒரே ஜாதிக்குள் நடப்பதாக இருந்தாலும் சரி, அல்லது வெவ்வேறு ஜாதியிலிருந்து நடப்பதாக இருந்தாலும் சரி, அதற்கு சக்தி இருக்கிறது. இதனால் சமுதாயத்தில் "மொராலிட்டி" கெட்டுப்போகும் என்று சொன்னால் இதனால் கெடாது. கெடுவதற்கு வேறு எவ்வளவோ வழியிருக்கிறது. இதனால் அது வரும் என்று சொல்வது தவறு. இப்படிப்பட்ட திருமண ஏற்பாட்டின் மூலம் இந்த நாட்டைப் பொறுத்தவரையில் மரியாதை காப்பாற்றப்படுவது என்பது மட்டுமல்ல, இது நாட்டிலே மக்களிடையே சமத்துவம் ஏற்பட வழிவகை செய்யம். ஆகவேதான் சுயமரியாதைத் திருமணத்தை நாங்கள் ஆதரித்து மசோதா கொண்டுவந்து அதை ஆதரித்துப் பேசுகிறோமே தவிர சுயமரியாதைத் திருமணத்தால் எங்களுக்கு என்ன லாபம்? கனம் அங்கத்தினர் திரு. கரிய கௌண்டர் அவர்கள் சொன்னார்கள், பெரியாரை வைத்து திருமணம் செய்வதற்கு 101 ரூபாயாகிறது என்று. யார் பெரியாரைக் கூப்பிடச் சொன்னார்கள்? கரிய கௌண்டர் அவர்கள் வீட்டில், அல்லது அவர்களின் சொந்தக்

காரர்கள் வீட்டில் நடக்கும் திருமணத்திற்கு இவரே உட்கார்ந்து திருமணம் நடத்தலாம். பெரியாரை வைத்து நடத்தினுல்தான் செல்லும் என்று சட்டம் செய்யச் சொல்லவில்லை. நாங்கள் சொல்வது, யாராவது ஒரு பெரிய மனிதரை வைத்து, சாஸ்திரம் வேண்டியதில்லை, சம்பிரதாயம் வேண்டியதில்லை, அக்னி வேண்டிய தில்லை, அம்மி வேண்டியதில்லை, இவைகள் எல்லாம் சாஸ்திரம் என்று சொன்னுல் அவை எதற்காக? தேவையே கிடையாது. இவைகள் இல்லாதபடி ஊர்ப் பெரிய மனிதரை வைத்து அவர் காங்கிரஸ்காரராகயிருந்தாலும் சரி, கம்யூனிஸ்ட் கட்சிக்காரராக யிருந்தாலும் சரி, அவர்களை வைத்து திருமணம் நடத்த அனு மதிக்க வேண்டும்.

11-30 a.m. THE HON. SRI C. SUBRAMANIAM : இந்த மசோதாவில் கட்டாயம் ரிஜிஸ்தர் செய்ய வேண்டுமென்று இருக்கிறது. அதை நீங்கள் எதிர்க்கிறீர்களா ?

SRI A. V. P. ASAITHAMBI : ரிஜிஸ்தர் செய்தால்தான் திருமணம் செல்லுபடியாகும் என்பதை நான் எதிர்க்கவில்லை. செய்கிறவர்கள் செய்யட்டும். ஆனுல் இந்த சுயமரியாதை திருமணம் செல்லாது என்று இருக்கிறது. இன்னென்று வேண்டு மானுல் செய்யட்டும். ரெஜிஸ்தர் திருமணம்தான் செல்லுபடி யாகும், புரோகிதர் வைத்துச் செய்யும் திருமணம் செல்லாது என்று சட்டம் கொண்டு வாருங்கள். ரெஜிஸ்தர் செய்தால்தான் செல்லும் என்று வையுங்கள். அதில்லாது கோவிலில் வைத்து நடந்தால் செல்லும், புரோகிதர் வைத்து செய்தால் செல்லும் என்றெல்லாம் இருக்கிறதே. புரோகிதர் என்று தனிப்பட்ட ஜாதி கிடையாது. இன்னின்ன மந்திரங்கள் சொல்ல வேண்டுமென்று இருக்கிறது, அந்த மந்திரங்களை தமிழில் சொன்னுல் அதைக் கேட்பவர் களுக்கு அவரை ஓங்கி அறைய வேண்டிய நிலைதான் வரும்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : ஆன் எ பாயிண்ட் ஆப் ஆர்டர். புரோகிதர்களை வைத்துச் செய்ய வேண்டு மென்பது, பிராமணர்களைத்தான் வைத்துச் செய்ய வேண்டுமென்ற முறையில் எந்தச் சட்டத்திலும் இல்லாது இருப்பதோடு கூட யாரை வைத்துச் செய்யவேண்டுமென்று எதிலும் வரையறுக்கப் படவில்லை. பிராமணர்கள் வீதியில் நுழையவிடுவதில்லை, ஆகவே தான் பெரியார் இந்த சீர்திருத்தத்தைக் கொண்டு வந்தார்கள் என்று சொன்னுர்கள். ஆகவே பிராமணர்களை நாங்கள் எதிர்க்க வில்லை, மாயாண்டி நாடார் அவர்கள் சொல்வது தவறு என்று சொல்லிவிட்டு, பிராமணர்களை எதிர்த்து இப்படிப்பட்ட சீர் திருத்தத்தை பெரியார் அவர்கள் கொண்டு வந்தார்கள் என்று சொன்னுர்கள். அவர் சொல்வது முன்னுக்குப்பின் முரணுக இருக்கிறது. பிராமணர்களை எதிர்ப்பதுதான் எங்கள் குறிக்கோள் எனக் கொண்டு இந்தச் சீர்திருத்தம் செய்தோம் என்று அவரே ஒப்புக் கொள்வதால் அவர் சொல்வது முன்னுக்குப்பின் முரணுக இருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொண்டு அவர் சொல்வதை எதிர்க்கிறேன்.

19th August 1960]

**MR. SPEAKER** : There is no point of order.

MR. A. V. P. ASAITHAMBI : எனவே சுயமரியாதைத் திருமணம் செல்லத்தக்கதல்ல என்கின்ற நிலைமையை வைத்துக்கொண்டு இருந்தால், நாட்டில் இனிமேல் சுய மரியாதைத் திருமணங்கள் நடந்தால் அவைகள் எல்லாம் பாதிக்கப்படும் என்று தெரிந்தால் நாட்டில் கலப்பு திருமணங்கள் பெருகாது. இருந்தபோதிலும் கூட நாட்டில் சுயமரியாதைத் திருமணங்கள் நடந்து கொண்டிருக்கின்றன. நாட்டில் கலப்புத் திருமணங்கள் நடைபெறவேண்டும் என்று நாம் உண்மையாகவே எண்ணுவோமேயானல், நிச்சயமாக இம்மாதிரிப் பட்ட மசோதா நிறைவேற்றியாக வேண்டும். அந்த அளவில் தான் இந்த மசோதாவை திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த அங்கத்தினர் அவர்கள் கொண்டுவந்திருக்கிறார்களே தவிர வேறு ஒன்றுமில்லை. இன்றைக்குச் சட்டப்படி சுயமரியாதைத் திருமணம் செல்லத்தக்கதல்ல என்று தெரிந்தும் சுயமரியாதைத் திருமணங்கள் நடந்து கொண்டிருக்கின்றன. காரணம் இன்று சட்டத்தை யாரும் மதிப்பதில்லை. அம்மாதிரியான ஒரு நிலைமை நாட்டுக்கு வரக் கூடாது. அவ்வாறு வருவது நாட்டுக்கும் நல்லதல்ல, அரசாங்கத் திற்கும் நல்லதல்ல. மதிக்கப்படக் கூடிய வகையில் தான் அரசாங்கச் சட்டங்கள் இருக்கவேண்டும். எனவே தான், இன்றைக்கு இம்மாதிரியான ஒரு சட்டம் கொண்டு வர வேண்டும் என்று சொல்லுகின்ற நேரத்தில் இதன் மூலம் இரண்டொருவருக்கு வேண்டுமென்றால் சொத்தில் தகராறு ஏற்படலாம், ஏதோ வாரிசு உரிமையில் தகராறு ஒன்றிரண்டு இடங்களில் ஏற்படலாம். ஆகவே இம்மாதிரியான தகராறுகளைத் தீர்ப்பதற்கு இப் போதிருக்கின்ற முறை பயன்படுமே தவிர வேறு ஒன்றுக்கும் பயன்படாது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். ஆகவே புரோகித முறையில் நடைபெறும் திருமணங்கள் மட்டும் தான் செல்லுபடியாகும் என்று இருப்பதைவிட ரெஜிஸ்தர் செய்த திருமணங்கள் எல்லாம் செல்லுபடியாகும் என்றாவது நீங்கள் சட்டம் கொண்டு வாருங்கள். ஆகவே அந்த முறையில்தான் திராவிட முன்னேற்றக் கழகத்தில் இருக்கின்ற, எங்கள் கட்சி அங்கத்தினர் அன்றைமிலே அவர்கள் இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறார்கள். இதை எதிர்க்கட்சிக்காரர்கள் கொண்டு வந்திருக்கிறார்கள், ஆகையினால் இதை ஏற்றுக்கொள்ள முடியாது என்று சொல்லக்கூடாது. எதிர்க்கட்சிக்காரர்கள் கொண்டு வந்ததினால் இதை எற்றுக்கொள்ளவிட்டாலும், அவர் களுக்கு ஆதரவு தந்து கொண்டிருக்கும் பெரியாருக்கு வேண்டி யாவது அவர்கள் இதை ஏற்றுக்கொள்ளவேண்டும். தேர்தல் நெருங்கிக் கொண்டிருக்கிறது, திரு. காமராஜருடைய ஆட்சியை ஆதரித்து புள்ளிவிவரங்கள் எல்லாம் தினசரி அவருடைய பத்திரிகையில் வந்து கொண்டிருக்கின்றன. அதோடு இதையும் சேர்த்து புள்ளிவிவரங்களைச் சொல்லலாம். ஆகவே, அவருக்கு மரியாதை கொடுக்கும் வகையிலாவது இந்த மசோதாவை நிறை வேற்ற உதவி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்வது உகந்ததா இல்லையா என்பது வேறு விஷயம். நாங்கள் இதை நிறைவேற்றிவைப்போமானால் திராவிட முன்னேற்றக் கட்சிக்காரர்கள் கொண்டு வந்ததை நிறைவேற்றி வைத்து விட்டார்கள் என்று பெரியார் எங்களுக்கு எதிரிடையாகத்தான் போவார்கள் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI T. P. ELUMALAI : கனம் சபாநாயகர் அவர்களே, சுய மரியாதைத் திருமணங்கள் எல்லாம் செல்லத்தக்கவையாக ஆக்க வேண்டும் என்று கோருகின்ற இந்த மசோதாவை எதிர்த்து சில வார்த்தைகள் பேச ஆசைப்படுகிறேன். நம்முடைய திரு. ஆசைத்தம்பி அவர்கள் அன்போடு பெரியாருக்கு வேண்டியாவது இதை நிறைவேற்றி வைக்கவேண்டும் என்று சொன்னார்கள். பெரியார் அவர்கள் சுயமரியாதைத் திருமண முறை இருக்கவேண்டுமென்று அதிகமாகப் போராடினார். இருந்தாலும் அவர் சட்டசபையை விரும்பவில்லை. ஆனால் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் சட்டசபையை விரும்பி இங்கே வந்திருக்கிறார்கள். இதை வைத்துக் கொண்டு நாங்கள் சட்டசபைக்கு வந்ததினால்தான் இந்த சுய மரியாதைத் திருமண சட்டத்தை நிறைவேற்றியிருக்கிறோம், ஆகவே பெரியார் சட்டசபையை விரும்பக்கூடாது என்று சொல்வது தவறு என்று வெளியில் போய் பிரசாரம் செய்து பெரியார் மீது பழி சுமத்துவதற்குத்தான் இந்த மசோதா திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு உதவும்.

ஆகவே, நான் மிகவும் பணிவன்போடு கேட்டுக்கொள்கிறேன், இதன் மூலம் யாருக்காவது கூடுதலாக நன்மை கிடைக்குமா என்பதை நாம் யோசித்துப்பார்க்கவேண்டும். நான் சுயமரியாதைத் திருமணங்கள் சிலவற்றில் கலந்து கொண்டிருக்கிறேன். இப்போது கிராமங்களில் இருக்கின்ற நிலைமையை எடுத்துக் கொண்டு பார்த்தால் அங்கு கலகம்தான் அதிகரிக்குமே தவிர வேறு எந்தவிதமான நன்மையும் ஏற்படுவதற்கு இல்லை. எந்த கிராமமாக இருந்தாலும் சரி, சீர்திருத்த திருமணம் என்று ஆரம்பித்த உடனேயே குடும்பத்தில் பெரிய கலகம் ஏற்பட்டு விடுகிறது. என்னுடைய அனுபவத்தில் சொல்லப்போனால், என் சித்தப்பாவினுடைய மகனின் திருமணத்திற்குக்கூட என்னால் போக முடியவில்லை. ஆகவே, இம்மாதிரி பல குடும்பங்களிலும் கலகம் தான் அதிகரிக்கிறதே தவிர வேறு ஒன்றும் இல்லை என்பதை மிக பணிவன்போடு தெரிவித்துக்கொள்கிறேன்.

இப்போது கொண்டு வரப்பட்டிருக்கும் மசோதா சுய மரியாதைத் திருமணத்தை செல்லுபடியாக்கக்கூடிய சட்டம் என்று சொல்லுவதற்கில்லை, இவர்களுடைய சுயநலத்திற்காக கொண்டுவரப்பட்டிருக்கும் சட்டமே தவிர வேறு ஒன்றுமில்லை. வெளியில் போய் திராவிட முன்னேற்றக் கழகத்தார் நாங்கள்தான் இம்மாதிரியான ஒரு சட்டத்தைக் கொண்டுவந்திருக்கிறோம் என்று பிரசாரம் செய்வதற்குத் தான் இது பயன்படுமே தவிர, கிராமங்களில் இருக்கின்ற ஏழைகளுக்கு, அல்லது அவர்கள் செய்கின்ற செலவைக் குறைப்பதற்குப் பயன்படாது என்பதை பணிவோடு

தெரிவித்துக்கொள்கிறேன். நான் கூட தமிழ் பண்டிட் ஒருவரைக் கொண்டு என் சகோதரனுக்கு திருமணம் நடத்த வேண்டும் என்று முயற்சி செய்தேன். திருமணம் செய்து வைப்பதற்கு வந்த இடத்தில் அவருக்கு இரண்டு எட்டு முழ வேட்டி கொடுக்க வேண்டும் என்று சொன்னார்கள். அன்றைக்கு நமது மதிப்பிற்குரிய நிதி அமைச்சர் அவர்களும் அங்கே வந்திருந்தார்கள். புரோகிதரை அன்றைக்கு நாங்கள் கூப்பிடவில்லை. தமிழிலே மந்திரத்தை இந்த தமிழ் பண்டிட் சொல்லி நடத்தி வைப்பார் என்ற எண்ணத்தில் அவரை கூப்பிடுவதற்கு ஏற்பாடு செய்திருந்தேன். வந்த இடத்தில் இவ்வாறு வேட்டிவேண்டும் என்று கேட்டுக்கொண்டிருந்தார். புரோகிதரை கூப்பிட்டிருந்தாலும்கூட இவ்வளவு கேட்டிருக்க மாட்டார் (ஸ்ரீ ஏ. வி. பி. ஆசைத்தம்பி: நமது நிதி அமைச்சர் அவர்களை கொண்டே மந்திரம் சொல்லி நடத்தியிருக்கலாமே!) அவர்களுக்கு மந்திரம் தெரியாது. கார் அனுப்பி வேட்டி வாங்கிக் கொடுத்ததற்குப் பிறகுதான் அந்த பண்டிட் மணப்பந்தலுக்கு வந்தார். இப்படி பல சம்பவங்கள் நடைபெறுகின்றன.

அதோடு முக்கியமாக ஒரு விஷயத்தை நான் பணிவோடு எடுத்துக் கூற விரும்புகிறேன். இம்மாதிரி சுயமரியாதை திருமணம் என்று நடக்கக்கூடிய இடங்களில் 10 அல்லது 12 வயதுள்ள பையன்கள் வந்து திருமணத்தைப்பற்றி பேசுகிறார்கள். அதோடு கட்சிகளின் பிரசாரத்தையும் நடத்துகிறார்கள். இவ்விதம் 12 வயதுள்ள பையன் திருமணத்திற்கு வந்து ஆசிர்வாதம் செய்யக் கூடிய இந்த அலங்கோலமான காட்சியைத்தான் நாம் பார்க்கிறோம். வேண்டுமானால் இதற்கு என்று வாங்கும் பணத்தை வாங்கி அதனை இல்லங்களுக்கோ அல்லது அது போன்ற ஸ்தாபனங்களுக்கோ கொடுத்து உதவலாம். அதல்லாமல் இம்மாதிரி சுயமரியாதைத் திருமணம் என்று சொல்லிக்கொண்டு தங்கள் கட்சிப் பிரசாரத்தைத்தான் செய்யமுடியும். இதற்காக திருமணத்தைப் பயன் படுத்திக்கொள்வது சரியல்ல. எப்போதுமே ஏதாவது மருந்து கொடுத்து பரீட்சை செய்து பார்க்கவேண்டுமென்றால் அதற்காக ஊரார் பிள்ளையை எடுத்துக்கொள்ளக் கூடாது. தன் பிள்ளையை எடுத்து வைத்துக்கொண்டுதான் இந்த வைத்தியத்தைப் பார்க்க வேண்டும். பிறர் குழந்தையை எடுத்து, நடுத்தெருவில் வைத்துக் கொண்டு மருந்தை ஊற்றினால் அதில் எவ்வளவு நியாயம் இருக்குமோ அந்த அளவுக்குத்தான் சுயமரியாதைத் திருமணம் என்று சொல்லிக்கொண்டு அதில் தங்களுடைய கட்சிப் பிரசாரத்தை செய்வதும் இருக்கும். ஆகவே தங்களுடைய கட்சி தத்துவத்தை பரப்புவதற்காக சுயமரியாதை திருமணத்தை எடுத்துக்கொள்ளக் கூடாது. ஆகவே இந்த மசோதா மக்களுக்கு எந்த வகையிலும் பயன்படாது. வேண்டுமென்றால் திராவிட முன்னேற்ற கட்சிக் காரர்களுக்குத்தான் பயன்படும். இங்கு இதை நிறைவேற்றினால் வெளியே போய் "பாருங்கள், நாங்கள் மகத்தான ஒரு சட்டத்தை செய்திருக்கிறோம்" என்று மக்களிடத்தில் போய் பிரசாரம் செய்து

அதன் மூலம் நான்கு அங்கத்தினர்களை கூடுதலாக சேர்க்கலாமே தவிர யாருக்கும் இதனால் எந்தவிதமான நன்மையும் ஏற்படப் போவதில்லை.

இப்போதிருக்கின்ற நிலையில் அரிஜனங்களுடைய திருமண வைபவங்களில் புரோகிதர்கள் வந்து கலந்து கொள்கிறார்கள். எங்களுடைய காலனியில் ஒரு கல்யாணத்திற்குப் போக வேண்டும் என்று ஒரு அய்யர் அவர்களிடம் சொன்னேன். அவரும் அதை அன்போடு ஏற்றுக்கொண்டு எல்லாக் காரியங்களையும் அன்போடு செய்து கொடுத்தார். அந்த அளவுக்கு காலம் மாறிக் கொண்டேயிருக்கிறது. அதையெல்லாம்தான் நாம் கவனிக்க வேண்டும். அதைவிட்டு விட்டு அய்யர் மேலும், புரோகிதர் மேலும் குற்றச்சாட்டுகளைச் சொல்லிக் கொண்டிருப்பதில் எந்த விதமான பிரயோஜனமும் இல்லை. வெளியில் இவ்விதம் சொல்லி விட்டு இங்கு இம்மாதிரியான ஒரு சட்டம் வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருந்தால் என்ன பிரயோஜனம்? ஒவ்வொரு பிராமண சகோதரரும் ஒவ்வொரு அரிஜன சிஷ்யனை வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அதையெல்லாம் எதிர்க்கக்கூடிய முறையில் இருக்கக்கூடாது. பெரியார் புள்ளிவிவரங்களை சொல்லும்போது ஒழுங்காக கொண்டு வரப்பட்டிருக்கிறது என்று சொல்லக்கூடிய வகையில் அமைந்திருக்கவேண்டும். அதல்லாமல் இந்தப் பக்கம் இருக்கிறவர்கள் இதை எதிர்க்கிறார்கள். என்றெல்லாம் சொல்லிக் கொண்டிருக்காமல் ஜனங்களுக்கு இதன் மூலம் ஏதாவது நன்மை கிடைக்கிறதா என்பதைப் பார்த்து அதற்குத் தகுந்தவாறு தீர் மானங்களை கொண்டுவரவேண்டும். அப்பேர்ப்பட்ட மசோதாக் களை கொண்டுவரவேண்டும் என்று கேட்டுக்கொண்டு சுயநலம் காரணமாக கொண்டு வரப்பட்டிருக்கும் இந்த மசோதவை எதிர்த்து என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: சபாநாயகர் அவர்களே, ரொம்பவும் விரிவான விவாதம் பல தரப்பிலிருந்தும் நடைபெற் றது. ஆனால் எல்லோரும் திருமணம் அவசியம் என்பதைப் பற்றி ஒப்புக்கொண்டு பேசியிருக்கிறார்கள்—அது ரொம்பவும் வரவேற்கத் தக்கது. இந்தத் திருமணமே வேண்டியதில்லை, அவரவர்கள் இஷ்டம்போல் வாழ்க்கை நடத்திக்கொள்ளலாம் என்றல்லாது, திருமணம் என்பது அவசியம்—சமுதாயத்திற்கு இது அவசியம்— என்று புரட்சிக் கட்சியைச் சேர்ந்தவராக இருந்தாலும், சுய மரியாதைக் கட்சியைச் சேர்ந்தவராக இருந்தாலும், எந்தக் கட்சியைச் சேர்ந்தவராக இருந்தாலும், இது அவசியம் என்பதை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இந்த அடிப்படையில் தான் நடை பெற்றுவருகிறது, எந்த சமுதாயத்தை எடுத்துக்கொண்டாலும். இந்தத் திருமணம் ரத்தாகலாம் என்ற விஷயத்தில் வேண்டு மானால், இந்த விதத்தில் ரத்தாகலாம் என்பது சமுதாயத்திற்குச் சமுதாயம் வெவ்வேறு விதமாக, காலத்திற்குத் தகுந்தவாறு— சூழ்நிலைக்குத் தகுந்தவாறு—அமைந்திருக்கின்றது. திருமணம் அவசியம், அந்த அடிப்படையில் இல்லற வாழ்க்கை நடைபெற

19th August 1960] [Sri C. Subramaniam]

வேண்டும் என்பதில் நம்மிடையே கருத்து வேறுபாடு ஒன்றும் கிடையாது. மனித சமுதாயத்திலேயே இது பற்றி கருத்து வேறுபாடு இல்லை. ஒரு சிலர் திருமண முறையை மறுப்பவர்களாக இருக்கலாம். திருமணம் எந்த முறையில் இருக்க வேண்டும், எப்படி இருந்தால் செல்லுபடியாக இருக்கலாம் என்று யோசனை செய்து பார்க்கவேண்டியிருக்கிறது.

திருமணம் வேண்டுமென்று நினைக்கும்போது—அந்த அடிப்படையில் இல்லற வாழ்க்கை நடைபெறவேண்டுமென்று நினைக்கும் போது, பல முறைகளில் திருமணம் என்று சொல்லிக்கொண்டு போனால், அதன் மூலமாக திருமணத்தினால் ஏற்படக் கூடிய உரிமைகள், திருமணத்தினால் ஏற்படக் கூடிய கடமைகள் தெரியக் கூடிய முறையில் நடக்கவேண்டுமென்பதை எல்லோரும் ஒப்புக் கொள்வார்கள். தொன்றுதொட்டு ஏற்பட்டிருக்கக்கூடிய முறையானது—திருமண முறைகள் வகுக்கப்பட்டிருப்பதானது—உண்மையிலேயே திருமணம் ஏற்பட்டிருக்கிறதென்பதை நிச்சயிக்கக் கூடிய முறையில் பல முறைகளை வகுத்திருக்கிறார்களே யொழிய வேறல்ல. காலத்திற்குத் தகுந்தவாறு திருமண முறைகள் வகுக்கப்பட்டிருக்கின்றன. அதற்கு மேல் இன்னொன்றையும் சமுதாயத்தில் வலியுறுத்தவேண்டும் என்று பல முறைகள் அமைத்திருக்கின்றன. பல அங்கத்தினர்கள் எடுத்துச் சொன்னது போல, ஏதோ ஒரு பெண்ணைப் பார்த்து ஒரு வாலிபன் காதலித்தான், உடனே திருமணம் செய்து கொண்டான் என்றில்லாமல், இல்லற வாழ்க்கையை பொறுப்புடன் ஏற்றுக்கொள்ளவேண்டும், இது ஒரு ஒப்பந்தமாக இருக்கவேண்டும், பொறுப்புணர்ச்சியுடன் திருமணம் செய்துகொள்ளவேண்டும் என்ற ஏற்பாடு வகுக்கப் பட்டிருக்கிறது.

அப்படி திருமணம் நடக்கின்ற நேரத்தில் கணவனுக்கும் மனைவிக்கும் சில உரிமைகளும் ஏற்படுகின்றன, சில கடமைகளும் ஏற்படுகின்றன என்பதை நினைவுபடுத்தி, அதை உணர்ந்து கல்யாணம் செய்துகொள்ளவேண்டுமென்று வலியுறுத்துகின்ற முறையில் அந்தந்த சமயத்தில், அந்தந்த காலத்திற்கேற்ற சூழ் நிலையில், ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அதே சமயத்தில் தொடர்ந்து கணவன்-மனைவி ஒன்றுபட்டு வாழக்கூடிய மனோ நிலையை வளர்க்க—அவர்கள் மனதில் வலியுறுத்த—சில முறைகளை சில சமயங்களில் அவரவர்களுக்குத் தோன்றிய பிரகாரம் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஆணும் பெண்ணும் திருமணம் செய்து கொள்ளும்போது, அவர்கள், என்ன செய்துகொள்ளப் போகிறோம், இதன் மூலமாக ஏற்படப் போகின்ற விளைவுகள் என்ன, அதன் மூலமாகக் கிடைக்கின்ற உரிமைகள் என்ன, அதனால் ஏற்படக்கூடிய கடமைகள் என்ன என்று உணருவது ஒருபுறமிருக்க, தொடர்ந்து ஒன்றுபட்டு வாழவேண்டும் என்ற எண்ணத்தை ஏற்படுத்தவேண்டும் என்ற நிலைமை ஒரு புறமிருக்க, சமுதாயத்திலுள்ள மற்றவர்களும் இவர்கள் மணமானவர்கள் என்று உணர ஒரு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இரண்டையும்

அடிப்படையாகக் கொண்டுதான் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. எந்த முறையாக இருந்தாலும், அதைப் பரிசீலனை செய்து பார்த்தால், அந்தந்த காலத்திற்கு வற்ற பிரகாரம் எப்படி அமைப்பது என்பதற்குப் பல பழக்க வழக்கங்கள் ஏற்பட்டிருக்கின்றன. சில பழக்க வழக்கங்கள் ஒரு காலத்திற்கு ஒத்ததாக இருந்து, பின்னுல் அதே பழக்க வழக்கம் அந்தக் காலத்திற்கு ஒத்ததாக இல்லாது போய், பழக்க வழக்கங்கள் மாறியிருக்கின்றன என்பதைப் பார்க்கிறேம். நம்முடைய காலத்திலேயே எத்தனையோ பழக்க வழக்கங்கள் மாறியிருக்கின்றன என்பதைப் பார்க்கிறேம். ஆக, ஏதோ ஒரு பழக்க வழக்கம் அன்றைக்கு ஏற்பட்டது, அந்த முறையேதான் வேண்டும், இன்றும் அந்த முறையிலேயே நடத்தவேண்டுமென்று யாரும் சொல்ல முடியாது. ஒரு இடத்திலே இருக்கின்ற முறை மற்றொரு இடத்திலே இல்லாமலிருப்பதைப் பார்க்கிறேம். ஒவ்வொரு ஊரிலும் ஒவ்வொரு முறை இருப்பதைக்கூட நாம் இன்றைய தினம் பார்க்கிறேம். ஆனுல் அங்கு இருக்கக் கூடிய மக்கள் இவர்கள் மணம் முடித்துக் கொண்டார்கள், இவர்கள் இருவரும் கணவன்-மனைவி என்று நினைப்பதோடு மாத்திரமல்லாமல் சமுதாயமும் அம்மாதிரி நினைக்கக்கூடிய முறையில் வகுத்திருக்கிறர்கள் என்பதைப் பார்க்கவேண்டும். இதற்கு ஏதாவது சட்டம் செய்வதாக இருந்தாலும் இந்த அடிப்படையில்தான் சட்டம் செய்ய வேண்டுமேயொழிய, இதன் காரணமாக நினைத்தவர்களெல்லாம் கணவன்-மனைவி என்று சொல்லிக்கொள்ளக் கூடிய நிலை ஏற்படக் கூடாது. சுயமரியாதைத் திருமணம் என்றுல் என்ன என்று எடுத்துச் சொல்லும்போது **'Swayamariyathai marriage' means a function, held before or after the commencement of this Act, at which a Hindu man and a Hindu woman** . "—இதில் வேறு பாகுபாடு— "**go through a form of marrige**"—என்று ஒரு திருமண முறையில் மண முடித்துக்கொண்டிருக்கவேண்டும் என்று இவர்களும் ஒப்புக்கொண்டிருக்கிறர்கள். முன்பு இருந்த முறை பிற்போக்கான முறை, சுயமரியாதை முறை என்று சொல்லப்படுகிற இந்த முறைதான் முற்போக்கான முறை என்று சொல்லுவது, காலத்திற்குத் தகுந்தபடி முற்போக்கு, பிற்போக்கு என்று சொல்லுவது நமக்கு சௌகரியமாக இருக்கிறது, நோக்கம் நிறைவேறுகிறதா என்பதைப் பொறுத்திருக்கிறது. இந்த அடிப்படையில் பார்க்கும்போது சமுதாயத்திலே பல பேர்கள் அப்போது இருந்த பழக்க வழக்கங்கள், மூடப்பழக்க வழக்கங்கள், அந்தப் பழக்க வழக்கங்கள் இந்தக் காலத்திற்கு வேண்டிய அவசியம் கிடையாது, இந்தப் பழக்க வழக்கங்களைத் தகர்த்தெறிந்து, புதிய பழக்க வழக்கங்கள் மூலமாகத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று ஆரம்பிப்பதில் தவறில்லை என்பது எனது கருத்து.

அந்த முறையில் மணம் செய்து கொண்டவர்கள் லட்சக் கணக்கான பேர்கள் என்று சொன்னூர்கள். ஆனுல் இந்த லட்சக் கணக்கான பேர்கள் விஷயத்தில் பிரச்சினை ஏதும் கிடையாது.

19th August 1960] [Sri C. Subramaniam]

ஒன்றிரண்டு பேர்களுக்குத்தான் பிரச்சினை வந்தது. சொத்து இருந்து, யார் யாருக்கு வாரிசு என்று அவர்களுக்குள் தகராறு ஏற்பட்டு கோர்ட்டுக்குப் போனார்கள். அங்கு கல்யாணம் செல்லாது என்று சொன்னார்கள். லட்சக்கணக்கான பேர்களுக்கு இந்த முறையில் கல்யாணம் ஆகியிருந்தால் அவைகளைச் சமுதாயம் ஒத்துக்கொள்ளாமலில்லை—அவர்களை கணவன்-மனைவியாக ஏற்றுக் கொள்ளாமலில்லை. அவர்களுக்குப் பிறந்த குழந்தைகள் விஷயத்தில் சட்ட ரீதியாக ஒன்றுமில்லை. சமுதாயத்தில் சாதாரணமாக ஒப்புக்கொள்ளப்பட்டு நடந்து வருகின்றது. தகராறு வந்ததெல்லாம் சொத்து அதிகமாக இருந்ததால், யாருக்குச் சேர வேண்டும் என்ற முறையில் ஒன்றிரண்டு கேஸ்கள் வேண்டுமானால் ஹைக்கோர்ட் வரையில் போயிருக்கலாமேயொழிய, பெரும்பாலும் —10,000-த்திற்கு 9,999-ல்—எந்தவித கஷ்டமும் இல்லாமல் அவர்கள் வாழ்க்கை நடத்துகிறார்கள். யாரும் அவர்கள் கணவன்-மனைவி இல்லை என்று சொல்லக்கூடிய நிலைமை இருக்கவில்லை. சட்டம் செய்யவேண்டுமென்று சொன்னால் இதற்கு என்ன அவசியம், இதன் மூலமாக வேறு பல கெடுதல்கள் வந்து விடக் கூடாதே என்று பார்க்கவேண்டியிருக்கிறது. அப்படிப் பார்க்கும்போது இவர்கள் கொடுத்திருக்கக் கூடிய மசோதா என்ன என்று பார்த்தால், இந்த சுயமரியாதை முறை மூலமாக எந்த முறையில் கல்யாணம் செய்துகொண்டாலும், எந்த முறையில் கல்யாணம் நடந்திருக்கிறது என்று சொன்னாலும், சரியான கல்யாணம் என்று ஒப்புக்கொள்ளவேண்டும், அவை சட்ட ரீதியாகச் செல்லுபடியாகக்கூடிய கல்யாணம் என்று சொல்லியிருக்கிறார்கள். இப்போது யோசித்துப் பார்க்க வேண்டும். சில இடங்களில் இது மாதிரி எல்லோரையும் வைத்து எல்லோரும் ஒப்புக் கொள்ளக் கூடிய முறையில் அவர்கள் கல்யாணம் செய்துகொண்டிருக்கலாம். இவர்களுக்குள் நட்பு ஏற்பட்டதன் காரணமாக வாழ்க்கை நடத்திக்கொண்டிருக்கலாம். பழக்கத்தின் முறையில் ஒரு கல்யாணம் செய்துகொண்டிருக்கிறார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். இந்தச் சட்டப்படி இதற்கு முன்பு இருந்த மனைவியுடன்கூடி வாழ்ந்திருந்தார்களோ, அவர்கள் சட்ட ரீதியான மனைவி என்று விண்ணப்பம் போட்டு ரிஜிஸ்டர் பண்ணிக் கொள்வார்களானால் இரண்டாவது கல்யாணம் பண்ணிக் கொண்டவளின் கதி என்ன என்று இதில் பார்த்தால் தெரியவில்லை. இந்த மாதிரி ஒரு சட்டத்தை முன்பே ஒரு முறை விவாதத்திற்குக் கொண்டு வந்தோம். இதைப் பற்றி ஆலோசித்துப் பார்த்ததில் அதிகமான அளவுக்குத் தகராறுகள் இந்தச் சட்டத்தின் மூலமாக ஏற்படுவதாக இருந்தது. தகராறுகளைத் தீர்ப்பதற்காகச் சட்டம் அவசியமாக இருக்கிறதே தவிர அதிகப்படுத்துவதற்கு அல்ல. (ஸ்ரீ எம். கல்யாணசுந்தரம்:— சொத்துரிமை பற்றிய தகராறுகள் . . . . .) முன்பு கொண்டு வந்த சட்டமாக இருந்தாலும் சரி, இப்போது கொண்டு வரப்பட்டிருக்கிற சட்டமாக இருந்தாலும் சரி—அவசியமில்லை என்று வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன். இதிலே சங்கடங்கள் ஏற்படுமானால், உண்மையில் சங்கடங்கள்

[Sri C. Subramaniam] [19th August 1960

ஏற்பட வழியிருக்கிறது என்று சொன்னல் இதற்கான சில விதிகள் பார்லிமெண்டில் நிறைவேற்றப்பட்ட "ஸ்பெஷல் மேரெஜ் ஆக்ட். 1954"-ல் இருக்கின்றன. ஸ்பெஷல் மேரேஜ் ஆக்ட் 15-வது பிரிவில் கீழ்க்கண்டவாறு சொல்லப்பட்டிருக்கிறது:—

*Section* 15.—Any marriage celebrated, whether before or after the commencement of this Act, other than a marriage solemnized under the Special Marriage Act, 1872, or under this Act, may be registered under this Chapter by a Marriage Officer in the territories to which this Act extends if the following conditions are fulfilled, namely :—

(*a*) a ceremony of marriage has been performed between the parties and they have been living together as husband and wife ever since;

இன்ன "செரிமனி" என்று இருக்கவேண்டியதில்லை, ஏதோ ஒரு சடங்கு நடந்து கணவன் மனைவி என்று வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தால் போதும் இதில் சொல்லியிருப்பதுபோல்.

(*b*) neither party has at the time of registration more than one spouse living;

அது இன்னும் முக்கியமானது. அந்த விலக்கு கனம் அங்கத்தினர் அண்ணுமலை அவர்கள் கொண்டு வந்திருக்கும் மசோதாவில் இல்லை.

(*c*) neither party is an idiot or a lunatic at the time of registration;

(*d*) the parties have completed the age of twenty-one years at the time of registration;

(*e*) the parties are not within the degrees of prohibited relationship;

இவையெல்லாம் இருக்கின்றன. இந்த முறையிலே யார் வேண்டுமானலும் அவர்கள் செய்து கொண்ட கல்யாணத்தை ரிஜிஸ்டர் செய்து கொள்ளலாம். அவர்கள் செய்து கொண்ட கல்யாணம் சட்டப்படி செல்லாது என்று சந்தேகம் இருக்குமானல் அந்தச் சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்ளப் போதுமான சட்டம் நிறைவேற்றப் பட்டிருக்கிறது. இதுமாதிரி ஒரு சட்டத்தை, இப்போது நமது தொழிலமைச்சராக இருக்கும் வெங்கட்ராமன் அவர்கள்தான், பார்லிமெண்டில் கொண்டு வந்தார்கள். அந்தச் சட்டம் எதற்காக வேண்டுமென்ற பிரச்னை அப்போது எழுந்தது. இங்கே இப்போது கூறப்பட்ட சில தகராறுகள் வரக்கூடிய நிலைமை இருக்கிறது என்பதை எடுத்துக் காட்டி, இந்த நிபந்தனைகள் எல்லாம் இருக்கவேண்டுமென்ற முறையிலே சட்டத்தைச் செய்து வைத்திருக்கிறார்கள். (ஸ்ரீ ஏ. கோவிந்தசாமி:—கனம் வெங்கட்ராமன் அவர்கள் சொன்ன கருத்தைத் சொல்லுங்கள்). "சுய மரியாதைக் கல்யாணத்தைப் பல பேர்கள் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். சில சமயங்களில் தகராறுகள் ஏற்பட்டு விடுகின்றன. இந்த நிபந்தனைகளுடன், கல்யாணமாகி எவ்வளவு நாட்களானலும் ரிஜிஸ்டர் செய்து கொள்ள வழி இருக்க வேண்டும்" என்ற கருத்தை அப்போதே தெளிவுபடுத்தி

யிருக்கிறார்கள். இதற்கு என்ன அவசியம் என்று கேட்டபோது, "திராவிடக் கழகம் இது மாதிரி ஒரு இயக்கத்தை நடத்தி பல மணங்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன" என்பதைப் பற்றி எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். ஆகவே, வேண்டிய சட்டம் இருக்கிறது. புதிதாக ஒரு சட்டம் வேண்டிய அவசியமில்லை. கல்யாணம் செய்து கொண்ட பிறகு ரிஜிஸ்டர் செய்து கொள்ள அந்தச் சட்டத்தில் இடம் செய்யப்பட்டிருப்பதால், இப்போது இந்தச் சட்டத்தைக் கொண்டு வருவதன் மூலமாக புதிதாக ஒரு சௌகரியத்தைச் செய்து கொடுப்பதற்குப் பதிலாகக் குழப்பங்கள்தான் ஏற்படும் என்ற காரணத்தினால் இதை ஒப்புக் கொள்ள முடியாமல் இருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள் கிறேன்.

கனம் அங்கத்தினர் திரு. ஆசைத்தம்பி அவர்கள் பேசும்போது "ஜாதி அடிப்படையில் கல்யாணம் செய்து கொள்ளக்கூடாது; ஜாதி விட்டு ஜாதி கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்ற முறையில் சட்டம் ஏற்படுத்த வேண்டும்" என்று குறிப்பிட்டார்கள் இது மாதிரி நிர்ப்பந்தப்படுத்தி எவ்வளவு தூரம் செய்ய முடியுமென்று பார்த்தால் பலன் ஒன்றும் இராது. திருமணத்தில் நிர்ப்பந்தம் கூடாது. எனக்குத் தெரிந்த வரையில் ஜாதித் தடைகள் மறைந்து, ஒழிந்து கொண்டிருக்கின்றன என்பதைத் தான் பார்க்கிறேன். நமக்குப் பின்னர் வரக்கூடிய தலைமுறையில் நன்றாகப் படித்து அவர்களுக்கு ஏற்படக்கூடிய அறிவாராய்ச்சியின் காரணமாகவும், சமுதாயத்தில் ஏற்படக்கூடிய சூழ்நிலையின் காரணமாகவும் ஜாதி வித்தியாசங்கள் தானாகவே ஒழிந்து போகும் என்பதில் எனக்குச் சந்தேகம் கிடையாது. சமுதாயத்தில் திருமணம் போன்ற விஷயங்களில் சட்டத்தின் மூலமாக ஒரு காரியத்தைச் சாதிக்க முடியுமென்று எனக்குத் தோன்றவில்லை. "சுய மரியாதைக் கல்யாணமானது சட்ட ரீதியாக இல்லாத காரணத்தினால் அவ்வாறு திருமணம் செய்து கொள்ளுபவர்கள் சமுதாயத்தில் இருந்து தள்ளிவைக்கப்படுகிறார்கள்" என்று பலர் குறிப்பிட்டனர். பழக்கத்திற்கு மீறி திருமணம் புரிந்து கொண்டால் இந்தத் தடைகள் எல்லாம் ஏற்படுகின்றன என்பது என்னுடைய அனுபவம். கல்யாணம் செய்து கொண்டு ரிஜிஸ்டர் செய்து கொண்டால்கூட, பழக்கத்திற்கு விரோதமாகத் திருமணம் செய்து கொண்டால் "உன் வீட்டுக்கு வர மாட்டேன்; தண்ணீர் குடிக்க மாட்டேன்" என்றெல்லாம் கூறுவார்கள். நானே அனுபவித்து இருக்கிறேன். சட்ட ரீதியாகப் பண்ணிக் கொண்டால் இவ்வாறு நிகழாது என்று சொன்னால் அதை நான் ஒப்புக் கொள்ள முடியாது. இவ்வாறு திருமணம் செய்து கொள் வது சரிதான் என்று, என்று ஒப்புக் கொள்ளுகிறார்களோ அன்றைக்குத்தான் இதில் எந்த விதமான பிரச்னைக்கும் வழியில்லாமல் இருக்கும். பின்னால் வரக்கூடிய இளைஞர்கள், ஆண்களும் பெண்களும் ஜாதித் தடை காரணமாக வாழ்க்கை கெட்டுப்போகாமல் அவர்கள் உண்மையான நல்வாழ்வு நடத்தும் நிலைமை ஏற்படும் என்பதில் சந்தேகமே கிடையாது.

இன்றொன்றையும் வலியுறுத்த விரும்புகிறேன். அவரவர்களே செய்து கொள்கின்ற சுய மரியாதைக் கல்யாணந்தான் வெற்றி பெறும் என்று சிலர் நினைக்கிறார்கள். இன்றைக்கு நாம் வாழ்க்கையில் பார்க்கும்போது, பல பேர் வைதிக முறையில் பெண்ணைப் பார்க்காமலேயே கல்யாணம் செய்து கொண்டவர்கள்கூட நல்ல இல்லற வாழ்க்கையை நடத்தி வருகிறார்கள் என்பதை நாம் பார்க்கலாம். அந்த முறையிலே மணம் செய்து கொண்டவர்களுடைய ஒரு சிலர் வாழ்வில் குறைபாடு இருப்பதையும் பார்க்கிறோம். இது மாதிரிப் புரட்சிக் கல்யாணம், சுய மரியாதைக்
12 noon. கல்யாணம் என்று செய்து கொண்டவர்களிலும் நல்ல வாழ்க்கை நடத்துபவர்களும் இருக்கிறார்கள்; நல்ல இல்லற வாழ்க்கை அமையாதவர்களும் இருக்கிறார்கள். பெற்றோர்கள் தேர்ந்தெடுக்கும் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டாலும், நாமே தேர்ந்தெடுத்துக் கல்யாணம் செய்து கொண்டாலும் அதெல்லாம் காலத்தால் ஏற்படுகின்ற அறிவு வளர்ச்சியைப் பொறுத்த காரியம். இந்த முறையில் கல்யாணம் செய்து கொள்வதுதான் நல்ல திருமண முறை; இதன் மூலமாகத்தான் நல்ல இன்ப வாழ்வு ஏற்படப் போகிறது என்று சொன்னால் அதை ஏற்றுக் கொள்ள முடியாது. இப்போதிருக்கும் சூழ்நிலையில் திருமணம் செய்து கொள்வதற்கு ஜாதி ஒரு தடையாக இருக்கக் கூடாது என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன்.

ஜாதி விட்டு ஜாதியில் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று சொல்லும்போது அதன் காரணமாக நம்முடைய தேசம் முன்னேற முடியும் என்று சொன்னார்கள். அவர்கள் எந்தக் கருத்தில் சொன்னார்கள் என்று தெரியாது. மக்கள் தரம் உயரும் என்பதில் சந்தேகம் கிடையாது. ஜாதிக்குள்ளேயே கல்யாணம் செய்து கொள்ளும்போது "இன் ப்ரிடிங்" உண்டாகிறது. நெருங்கிய உறவினர்களுக்குள்ளேயே கல்யாணம் நடந்தால் அவர்களுக்குப் பிறக்கக் கூடிய குழந்தைகள் பல குறைகளுடன் பிறக்கின்றன என்பது இன்று விஞ்ஞான முறையில் கண்டு பிடிக்கப்பட்ட கருத்து. ஆகையால், ஜாதியை விட்டு ஜாதியில் கல்யாணம் பண்ணிக்கொள்ளும்போது, உறவு இல்லாத காரணத்தால், அந்தக் குழந்தைகள் அந்தக் குறை இல்லாமல் பிறக்கும் என்பது என்னுடைய கருத்து. ஆகையால், விஞ்ஞான முறையில் பார்க்கும்போதும், இம்மாதிரி தூர இருப்பவர்களைக் கல்யாணம் செய்து கொள்ளும்போது, குழந்தைகளுடைய அறிவுத் தரம், திறமைத் தரமும் கூட, உயரும் என்று இன்றைக்கு ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது; நிரூபிக்கப்பட்டிருக்கிறது. மக்களுடைய தரம் உயரவேண்டுமென்று பார்க்கும்போது, இது வரவேற்கத்தக்க விஷயம்.—அதற்காகக் கட்டாயப்படுத்தவேண்டும் என்று நான் சொல்ல முன்வரவில்லை.—இந்த வகையில் மக்கள் ஒப்புக்கொள்ளக் கூடிய முறையாகச் செய்ய முடியும் என்பதை நான் வலியுறுத்த விரும்புகிறேன். ஆகவே, இந்த மசோதா அவசியமில்லை.

19th August 1960] [Sri C. Subramaniam]

'சுய மரியாதைத் திருமணம்' என்று பெயர் வைத்திருப்ப தால், மற்ற திருமணங்களெல்லாம் சுய மரியாதை இல்லாமல் போய்விட்டது என்ற முறையில் சில கனம் அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். ஏதோ பெயர் வைக்கவேண்டும் என்பதற் காக அப்படி வைக்கப்பட்டிருக்கிறது. சுயமரியாதை என்று பெயர் இருந்தால்தான், அது சுயமரியாதைத் திருமணம், பெயர் இல்லாவிட்டால், அது சுயமரியாதைத் திருமணம் ஆகாது என்று சொல்ல முடியாது; சுயமரியாதை உள்ளவர்கள் அம்மாதிரி சொல்லமாட்டார்கள். குறிப்பிடுவதற்காகப் பெயரே தவிர, சுய மரியாதை அது ஒன்றில் தான் இருக்கிறது என்ற அடிப்படையில் அல்ல அந்தப் பெயரை உபயோகித்திருப்பது என்று நான் எடுத்துக்கொள்கிறேன். ஆகையால், இந்த மசோதா அவசிய மில்லாதது என்று திரு. அண்ணாமலை அவர்களுக்கு நான் சொல் வேன். திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னதுபோல, இந்த மசோதாவை இப்படியே வைத்துக்கொண்டாலும் திருத்தம் செய்தாலும், இந்த மசோதாவை மாற்றியமைத்தால்தான் முடியும். ஆகையால், இந்த மசோதா அவசியமில்லை. இந்த மசோதா எந்த நோக்கத்தோடு கொண்டுவரப்பட்டிருக்கிறதோ அந்த நோக்கத்தை நிறைவேற்றக்கூடிய சட்டம் இப்போதே அமுலில் இருக்கிறது.

கனம் அங்கத்தினர் திரு. சின்னதுரை அவர்கள் சொன்னர்கள், எல்லாத் திருமணங்களையும் ரிஜிஸ்தர் பண்ணினல் நல்லது என்று. அதை நான் வரவேற்கிறேன். கூடிய சீக்கிரத் தில் அந்த நிலைமை ஏற்படும் என்று நினைக்கிறேன். ஏனென்றல், எப்படி இப்பொழுது ஜனன மரணக் கணக்கு வைக்கிருேமோ அதுபோல, மணம் செய்துகொள்வது பற்றியும் இம்மாதிரி ரிஜிஸ்தர் செய்துகொள்வதற்கு அவசியம் ஏற்படலாம் என்று எனக்குத் தோன்றுகிறது.

**SRI M. KALYANASUNDARAM**: வருமானத்தை உத்தேசித் தாவது . . . . . . . .

**THE HON. SRI C. SUBRAMANIAM**: கம்யூனிஸ்டுக் கட்சி 'மெடீரியல்ஸ்டிக் அப்ரோச்' என்ற வகையில் எவ்வளவு பணம் இருக்கிறது, எவ்வளவு பொருள் இருக்கிறது என்று பார்ப்பார்கள். நான் அதற்காகச் சொல்லவில்லை. சமுதாயச் சூழ்நிலையில் அதைப்போன்ற ரிஜிஸ்தர் ஏற்படுத்துவது நல்லது என்ற கருத்தைத் தெரிவித்துக்கொண்டு, தேவைப்படுமானல், பின்னல் வருகிறவர்கள் கட்டாயம் நிறைவேற்றி வைப்பார்கள் என்ற நம்பிக்கையோடு, மசோதாவை வலியுறுத்தாமல் இதை வாபஸ் வாங்கிக்கொள்ள வேண்டுமென்று கனம் அங்கத்தினர் திரு. அண்ணாமலை அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

**SRI S. M. ANNAMALAI**: சட்ட மன்றத் தலைவர் அவர்களே, முதன் முதலில் இந்த மசோதாவைச் சட்ட மன்றத் தின் முன்னல் கொண்டுவரும்போது, இவ்வளவு பிரமாதமாகப்

பேசப்படும் என்று நான் கூட நினைக்கவில்லை. ஏறத்தாழ 14 சட்ட மன்ற உறுப்பினர்களும் அமைச்சர் அவர்களும் இந்த மசோதாவைக் குறித்து மிக விரிவாகப் பேசியிருக்கிறார்கள். அதைப் பார்க்கின்றபோது, இந்த மாநிலத்திற்கு இத்தகைய சட்டம் மிக மிக அவசியம் என்றுதான் என்னைப் பொறுத்தவரையில் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

எனக்கு முன்னால் பேசிய சட்ட மன்ற உறுப்பினர்கள், பொதுவுடைமைக் கட்சியைச் சார்ந்த திரு. கல்யாணசுந்தரம் அவர்கள், சுயமரியாதைத் திருமணம் என்று குறிப்பிட்டிருப்பதனால் ஒரு கட்சியின் நோக்கத்தோடு கொண்டுவரப்பட்டதோ, என்று சொன்னார்கள். ஒரு கட்சியின் நோக்கத்தோடு இந்த மசோதா இந்த இடத்தில் கொண்டுவரப்படவில்லை. வேண்டுமானால், ‘சுயமரியாதைத் திருமணம்’ என்று வருகிற இடங்களில் ‘ரிபர்மேஷன் மேரேஜ்’ என்று மாற்றிக்கொள்ளலாம். இந்த மசோதாவில், ‘ஹிந்து மான் அண்டு உமன்’ என்று வருகிற இடங்களில் ‘எனி மான் அண்டு உமன்’ என்று மாற்றிக் கொள்ளலாம். ஒரு குறிப்பிட்ட மதத்தைத்தான் கட்டுப்படுத்த வேண்டுமென்று இது கொண்டுவரப்படவில்லை. ஒரு நல்ல நோக்கத்துடன் இப்படிப்பட்ட மசோதா சட்ட மன்றத்தில் நிறைவேற்றப்படவேண்டுமென்று கொண்டுவந்தேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM**: நோக்கம் நல்லதுதான். ஆனால், சட்டம் மோசமாக இருக்கிறது.

**SRI S. M. ANNAMALAI**: சட்டம் மோசமாக இருந்தாலுங் கூட அமைச்சர் அவர்கள், ‘நாங்கள் நல்ல சட்டம் கொண்டு வருகிறோம்’ என்று ‘அஷ்யூரன்ஸ்’ கொடுத்துவிட்டால், அப்பொழுது வேண்டுமானால் இந்த மசோதாவை நான் வாபஸ் வாங்கிக் கொள்ளுகிறேன். ‘இந்த மசோதாவின் சில பகுதிகள் பொருத்தமாக இல்லை, சரியாக இல்லை; ஆகையால், சர்க்கார் தரப்பிலேயே கொண்டு வருகிறோம்’ என்று அஷ்யூரன்ஸ் கொடுத்துவிட்டால் இம்மசோதாவை நான் வாபஸ் வாங்கிக்கொள்கிறேன்.

சட்டமன்ற உறுப்பினர் திரு. சின்னதுரை சொன்னார்கள், ‘அண்ணாமலை பேசும்போது சிக்கனம் ஏற்படுகிறது என்று சொன்னார்கள்; ஆனால், திருமணத்திற்குத் தலைமைவகிக்க நூறு ரூபாய் கேட்கப்படுகிறது’ என்று. என்னைப் பொறுத்தவரையில் சொல்வேன், நான் பத்தே முக்காலணா செலவில் திருமணம் செய்து கொண்டேன். எந்தப் பெரிய தலைவரும் வந்து என் திருமணத்தைச் செய்து வைக்கவேண்டுமென்று யாரும் விரும்பவில்லை. என்னுடைய மனதிற்குப் பிடித்ததை . . . .

**THE HON. SRI C. SUBRAMANIAM**: திரு. அண்ணாமலை அவர்கள் செலவழித்ததை மட்டும் சொல்கிறாரேயொழிய, மற்ற பேர்கள் செலவழித்ததைச் சொல்லவில்லை. அவர் செலவு செய்ததை மட்டும் சொல்கிறார் போலும்.

19th August 1960]

SRI S. M. ANNAMALAI : மற்றவர்கள் யாரும் செலவழிக்க வில்லை. என்னுடைய திருமணத்திற்கு என் கையிலிருந்து செலவழிந்தது பத்தேமுக்காலணுதான். அதுகூட, திட்ட வட்டமாகச் சொல்வேன். இரவு 7 மணிக்குமேல் பொதுவாக பத்து பேரை உட்கார வைத்து, 'நான் இந்தப் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளப்போகிறேன்' என்று சொல்லி, பெண்ணினுடைய சம்மதத்தையும் கேட்டு, திருமணம் செய்து கொண்டேனேயொழிய, அதிகப் பணம் செலவழித்து நான் திருமணம் செய்துகொள்ளவில்லை.

சட்ட மன்ற உறுப்பினர் திரு. மாயாண்டி நாடார் அவர்கள் பேசும்போது, 'கிராமப் புறங்களில் நாட்டாண்மைக்காரர்களை வைத்துக்கொண்டு திருமணம் செய்துகொள்கிறார்கள்' என்று நன்றாகச் சொன்னார்கள். அது உண்மைதான். பல சமூகங்களிலே நாட்டாண்மைக்காரர்கள், பெரியவர்கள் இவர்களை வைத்துக் கொண்டு கிராமப் புறங்களிலே திருமணம் செய்துகொள்ளு கிறார்கள். அப்படிச் செய்யும்போது, திராவிட முன்னேற்றக் கழகத் தலைவரோ, திராவிடக் கழகத் தோழரோ அல்லது மற்ற கட்சியைச் சார்ந்தவர்களோ அப்படித் திருமணங்கள் செய்து வைப்பது கிடையாது. ஆணும் பெண்ணும் சரி என்று ஒப்புக் கொண்டால் உடனே பத்து பெரியவர்கள் முன்னால் இப்படிப்பட்ட திருமணம் நடைபெறுகிறது. அப்படிப்பட்ட திருமணம்கூட செல்லுபடியாவது இல்லை என்கின்ற காரணத்தினால் அப்படிப் பட்ட திருமணங்கள் செல்லுபடியாகவேண்டும் என்று நான் சொல்லுகிறேன்.

சிக்கன முறையில் நடைபெறுகிறது என்று சொல்வதற்கு காரணம் இருக்கிறது. ஏதோ ஒரு சிலர், தலைவரைப் பார்த்து, 'நீங்கள் வந்து திருமணம் செய்து வைத்தால்தான் எங்களுடைய திருமணம் சிறப்பாக இருக்கும்' என்று அவர்கள் மேலும் மேலும் அணுகுவதன் காரணமாகத்தான் இவர்கள், 'உங்களுடைய திருமணத்திற்கு வரவேண்டுமென்றால் நூறு ரூபாய் தாருங்கள்' என்று கேட்கிறார்கள். எந்தக் கட்சியைச் சார்ந்தவரும், '100 ரூபாய் கொடுத்துத்தான் திருமணம் செய்துகொள்ள வேண்டும்' என்று யாரும் சொல்லமாட்டார்கள். வேண்டுமானால் கிராமத்திலுள்ள பத்து பெரியவர்களை வைத்துக்கொண்டு, அந்தத் திருமணத்தைச் செய்துகொள்ளலாம் என்ற அந்த அடிப்படைக் கருத்தை ஒட்டித்தான் கிராமப் புறங்களில் பல சமூகத்தில் திருமணங்கள் நடைபெற்றுக்கொண்டு வருகின்றன. எந்தக் கட்சியின் சார்பிலும் நடைபெறுவது அல்ல. ஆகையால்தான், அப்படிச் சிக்கனமான முறையில் நடக்கும் பல திருமணங்களை இந்த மசோதாவின் மூலமாக நாம் காப்பாற்றவேண்டும், அவை களுக்கு பாதுகாப்பு அளிக்கவேண்டும், சட்டப்படி அவை செல்லுபடியாகவேண்டும் என்றுதான் மசோதாவைக் கொடுத் திருக்கிறேன்.

யாரோ ஒரு வகுப்பார் மீது எங்களுக்குக் கோபம் என்று ஒரு சில கனம அங்கத்தினர்கள் சொன்னார்கள். அந்த வகுப்பார் மீது எங்களுக்குக் கோபம் இல்லை. கிராமப் புறங்களில் சென்றால், புரோகிதம் செய்பவர்கள் யாரைக் கூப்பிட்டாலுங்கூட, 'எங்களுக்கு வேறு வேலை இருக்கிறது' என்று சொல்கிறார்கள். அவர்களுடைய பிள்ளைகள் அனைவரும் ஹைகோர்ட் ஜட்ஜ் போன்ற பல உத்தியோகங்களுக்குப் போய்விட்டார்கள். புரோகிதம் செய்வதற்கு அப்படிப்பட்ட குறிப்பிட்ட இனத்தவர் கிராமங்களில்கூட கிடையாது. ஆகையால், எந்த ஒரு இனத்தவர்

(Deputy Speaker in the Chair.)

மீது உள்ள துவேஷத்தினாலும் இந்த மசோதாவைக் கொண்டு வந்திருப்பதாகச் சொல்வது அவ்வளவு பொருத்தமல்ல என்று நான் சொல்கிறேன். எனக்கோ அல்லது பிற கட்சிக்காரர்களுக்கோ எந்தக் குறிப்பிட்ட வகுப்பார் மீதும் அப்படிப்பட்ட துவேஷம் கிடையாது.

தான்கூடச் சீர்திருத்தத் திருமணம் செய்துகொண்டதாக சட்ட மன்ற உறுப்பினர் திரு. கே. ஆர். விசுவநாதன் அவர்கள் சொல்லி, இந்த மசோதாவை நல்ல முறையிலே ஆதரித்தார்கள். ஆனால், யாரோ ஒருவர் அவர் பக்கத்திலே வந்து உட்கார்ந்து கொண்டு, 'நீங்கள் மாற்றமான கருத்தை தெரிவியுங்கள்' என்று சொல்லியதன்பேரில், உடனே ஆபத்து வந்துவிட்டது என்றும் கடைசியில் அவர்களுடைய மனம் பக்குவம் அடையவில்லை; பக்குவம் அடைய வேண்டும்' என்று சொல்லி முடித்துவிட்டார்.

SRI K. R. VISWANATHAN : On a point of order, Sir The Hon. Member insinuates that I was prompted by some other hon. Member while I was speaking on the Bill some time ago.

DEPUTY SPEAKER : There is no point of order. If the hon. Members wants to say anything, he can explain it.

SRI S. M. ANNAMALAI : ஆகையால், அந்த சுயமரியாதைத் திருமணத்தை அவர்கள் ஆதரித்தார்கள். அதற்கு அடுத்து சட்ட மன்ற உறுப்பினர் திரு. சங்கரன் அவர்கள் பேசும்போது, 'நடந்துபோன திருமணங்களுக்கு வேண்டுமானால் இந்த மசோதா செல்லுபடியாகட்டும், இனிமேல் நடக்கும் திருமணங்களுக்கு இந்த மசோதா தேவையில்லை' என்று கருத்துப்படப் பேசினார்கள். இப்படிப் பார்க்கும்போது இந்த மசோதா மிக மிக அவசியம் என்று நான் இந்தச் சட்ட மன்றத்தின் முன்னால் சொல்ல ஆசைப்படுகிறேன்.

சட்ட மன்ற உறுப்பினர் திரு. கரிய கவுண்டர் அவர்கள் பேசும்போது, தானும் சுயமரியாதைத் திருமணம் செய்து கொண்டதாகவும், அவர்கள் பிள்ளைகளுக்கும் அம்மாதிரியே திருமணம் செய்துகொண்டு வருவதாகவும் சொன்னார்கள். அந்தத் திருமணங்களில் ஏதாவது பிணக்கு ஏற்பட்டு, நீதி மன்றங்களுக்குச் சென்றால், உண்மையிலேயே செல்லுபடி ஆகுமா என்பதை அவர்கள் சற்றுச் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

19th August 1960] [Sri S. M. Annamalai]

'ஏதோ அவர்களுக்கு மன மாறுதல் ஏற்படவேண்டும், அதை வேண்டுமானல் செய்யலாம்' என்று சட்ட மன்ற உறுப்பினர் திரு. விசுவநாதன் அவர்கள் சொன்னார்கள். சாதாரணமாக சட்டத்தின் மூலமாக ஒன்றையும் யாரும் தடுக்க முற்படமாட்டார்கள். நம் நாட்டில் யாரும் திருடக்கூடாது என்று சொல்கிறோம். ஆனல், மேலும் மேலும் திருட்டு நடைபெறுகிறது. ஆனல் திருட்டைத் தடுக்கச் சட்டங்களை இயற்றுகிறோம். ஆகவே, மன மாறுதல் ஏற்பட சட்டங்கள் தேவை. இன்றேல், பாமர மக்கள் பாதிக்கப் படுவார்கள். ஆகவேதான் இப்படிப்பட்ட சட்டத்தை நிறை வேற்ற வேண்டுமென்று இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக் கிறேன்.

அமைச்சரவர்கள் சொன்னார்கள், ஸ்பெஷல் மேரிஜ் ஆக்ட் இருக்கிறது என்று. அதிலேகூட ஒரு சந்தேகம்; ஸ்பெஷல் மேரிஜ் ஆக்ட்படி நாம் இப்பொழுது பதிவுத் திருமணம் செய்துக் கொள்ளவேண்டுமென்று சொன்னல், இன்றைக்குப் பிறகு பிறக்கும் குழந்தைகளை "லீகல் ஸன்ஸ்" என்று சொல்லலாம் என்று; சொல்கிறார்கள். சட்டப்படி அந்தத் திருமணத்தால் பிறந்த குழந்தைகளில், ரிஜிஸ்ட்ரேஷனுக்கு முன்னல் பிறந்த குழந்தைகளுக்கு சொத்து உரிமை உண்டா இல்லையா என்ற சந்தேகம் இருக்கிறது. உதாரணமாக சமீபத்தில், சில மாதங் களுக்கு முன்னல் அரியலூரில் நடந்த ஒரு வழக்கில் இப்படி ரிஜிஸ்டர் செய்யப்பட்ட திருமணம் செல்லுபடியாகது, "இன்-வாலிட்", "இட் இஸ் ஒன்லி அன் அக்ரிமெண்ட்" அது ஒப்பந்தந் தான், திருமணமாகாது என்று ஜட்ஜ்மெண்டில் சொல்லப்பட்டி ருக்கிறது அது இந்த ஸ்பெஷல் மேரிஜ் ஆக்ட் படி செல்லுபடி யாகாது என்று ஆகிவிட்டது. ஆகையால்தான் இப்படிப்பட்ட இந்த மசோதாவை நிறைவேற்ற வேண்டும் என்று சொல்லு கிறேன்.

மேலும், வருங்காலத்தில் பதிவுத் திருமணங்கள் செய்வதானல், மக்கள், கிராமங்களில், பதிவு செய்துக் கொள்வதற்கென்று 15, 20 மைல்கள் போக வேண்டிநேரலாம்; ரிஜிஸ்தர் அலுவலகங்கள் கிட்டக் கிட்ட நிறுவுவது சாத்தியமாகாது. அந்த மக்களுக்கும் அப்படிப் போக அவகாசம் இருக்காது. ஆகவே, வருங்காலத்தில் ஊராட்சி மன்ற மூலமாகவே, அங்குள்ள ரிஜிஸ்டர்களிலேயே பதிவு செய்துகொள்ளலாம் என்ற முறை இருக்க வேண்டும். ஆகவே இந்த மசோதாவை மறுபரிசீலனை செய்து, சர்க்கார் ஒத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். (கனம் ஸ்ரீ. ஸி. சுப்பிரமண்யம்: இது சரியாக இல்லையே) சர்க்கார் "நாங்களே சரியான மசோதா ஒன்றைக் கொண்டு வருகிறோம்" என்று வாக்குறுதி கொடுத்தால், நான் என் மசோதாவை வாபஸ் வாங்கிக் கொள்ளுகிறேன். அப்படியில்லையென்றல், இந்த மசோதாவை சட்ட மன்றத்தில் வைக்கிறேன் என்று சொல்லி, என் பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I have nothing more to add.

DEPUTY SPEAKER : The question is—

"The Madras 'Swayamariyathai' Marriages Validation Bill, 1959 (L.A. Bill No. 30 of 1959) be taken into consideration."

The motion was put and declared lost.

(Mr. Speaker in the Chair.)

A poll was demanded and the House divided thus :—

*Ayes.*

1 Sri A. Govindasamy.
2 Sri K. Anbazhagan.
3 Dr. Srimathi Sathiyavanimuthu.
4 Sri A. V. P. Asaithambi.
5 Sri S. M. Annamalai.
6 Sri T. Irusappan.

*Noes.*

1 Sri B. Bhaktavatsalu Naidu.
2 Sri K. S. Ardhanareeswara Gounder.
3 Sri G. Annamalai Muthuraja.
4 Sri W. P. A. R. Chandrasekharan.
5 Sri V. S. Arunachalam.
6 Sri R. Chidambara Bharathi.
7 Sri T. T. Daniel.
8 Sri A. Chinnasami.
9 The Hon. Sri C. Subramaniam.
10 The Hon. Sri M. A. Manickavelu.
11 The Hon. Sri P. Kakkan.
12 Sri P. G. Karuthiruman.
13 Sri D. Dasarathan.
14 Sri A. S. Duraiswami Reddiar.
15 Sri T. P. Elumalai.
16 Sri G. Gomathi Sankara Dikshitar.
17 Sri K. S. G. Haja Sheriff.
18 Sri R. Kandasami.
19 Sri M. Kandasami Padayachi.
20 Sri M. R. Kandaswami Mudaliyar.
21 Sri T. Karia Gounder.
22 Sri V. K. Krishnamurthy.
23 Sri P. Kuppusami.
24 The Hon. Srimathi Lourdhammal Simon.
25 Srimathi T. N. Anandanayaki.
26 Srimathi Hemalatha Devi.
27 Srimathi Kamalambuja Ammal.
28 Srimathi D. Ragupathi Devi.
29 Sri J. Matha Gowder.
30 Sri P. M. Munusami Gounder.
31 Sri T. M. Nallaswami.
32 Sri K. P. Palaniswami.

33 Sri K. Ponnian.
34 Sri S. Ramakrishna Thevar.
35 Sri M. Ramachandra Reddiyar.
36 Sri Rathnavel Gounder.
37 Sri T. Sampath.
38 Sri V. Sankaran.
39 Sri P. R. Sreenivasa Padayachi.
40 Sri M. S. Selvarajan.
41 Sri N. S. Sundararajan.
42 Sri T. S. Swaminatha Odayar.
43 Sri G. Vagheesam Pillai.
44 Sri A. Vedarathnam.
45 Sri V. Vedayyan.
46 Sri A. P. C. Veerabahu.
47 Sri S. Ranganatha Mudaliar.
48 Sri K. R. Viswanathan.
49 Sri P. Vedamanickam.

*Neutral.*

1 Sri P. S. Chinnadurai.
2 Sri V. K. Ramaswamy Mudaliar.
3 Sri M. Kalyanasundaram.
4 Sri K. Ramachandran.
5 Sri N. Marudachalam.
6 Sri P. S. Ellappan.
7 Sri V. Subbiah.

Ayes : 6, Noes : 49; Neutral : 7.

The motion was lost.

(2) THE MADRAS INDUSTRIAL ESTABLISHMENTS (REGULATION OF TERMINATION OF EMPLOYMENT) BILL, 1960.

SRI M. KALYANASUNDARAM : Sir, I beg leave to introduce the Madras Industrial Establishments (Regulation of Termination of Employment) Bill, 1960.

The motion was duly seconded.

MR. SPEAKER : The question is :

" That leave be granted for the introduction of the Madras Industrial Establishment (Regulation of Termination of Employment) Bill, 1960."

The motion was put and carried and leave was granted.

SRI M. KALYANASUNDARAM : Sir, I introduce the Bill.

MR. SPEAKER : The Bill is introduced.

(3) THE MADRAS AGRICULTURISTS RELIEF (AMENDMENT) BILL, 1960.

SRI K. R. VISWANATHAN : Sir, I beg leave to introduce the Madras Agriculturists Relief (Amendment) Bill, 1960.

The motion was duly seconded.

MR. SPEAKER : The question is :

"That leave be granted for the introduction of the Madras Agriculturists Relief (Amendment) Bill, 1960."

The motion was put and carried and leave was granted.

SRI K. R. VISWANATHAN : Sir, I introduce the Bill.

MR. SPEAKER : The Bill is introduced.

B. *Resolutions.*

(1) NATIONALISATION OF BUS TRANSPORT IN THE STATE.

SRI S. M. ANNAMALAI : Sir, I move the following resolution standing in my name :

"That this House recommends to the Government to nationalise the entire bus transport in the State."

SRI A. V. P. ASAITHAMBI : I second it, Sir.

MR. SPEAKER : Motion moved :

"That this House recommends to the Government to nationalise the entire bus transport in the State."

**SRI S. M. ANNAMALAI** *ஸார், இதற்கு முன்னமேயே இந்தத் தீர்மானத்தைப்பற்றி நான் பேசியிருக்கிறேன்.*

(Deputy Speaker in the Chair.)

உதவி சபாநாயகர் அவர்களே, பஸ் தொழிலை தேசிய மயமாக்க வேண்டுமென்று இதற்கு முன் இந்தச் சட்டசபையில் தீர்மானம் கொண்டு வந்து ஏறக்குறைய எல்லோராலும் பேசப்பட்டு நின்று போய்விட்டது. ஆகையால் தான் இந்தத் தீர்மானத்தை நான் மீண்டும் கொண்டு வந்து அதற்கு ஒரு முடிவு காண வேண்டும் என்பதற்காகவும், சர்க்காருடைய கொள்கை இது சம்பந்தமாக என்ன என்பதை தெரிந்துகொள்வதற்காகவும் மறுபடியும் கொண்டு வந்திருக்கிறேன். நமது சர்க்கார் எல்லாவற்றையும் சோஷலிச சமுதாயமாக்க வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருக்கக் கூடியவர்கள். இது சம்பந்தமாக அவர்களுடைய கொள்கை என்ன என்பதை அறிந்து கொள்வதற்காக இதைக் கொண்டு வந்திருக்கிறேன். சோஷலிசம் என்று சொல்லுகிறார்களே அவர்களுடைய கொள்கை இது சம்பந்தமாக என்ன, அவர்களுடைய உண்மையான கொள்கைதான் என்ன என்று பார்ப்பதற்கு வேண்டித்தான் இதைக் கொண்டு வந்திருக்கிறேன். இது ஒரு நல்ல தீர்மானம். இதைப் பற்றி இதற்குமுன் பலர் பேசி இருக்கிறார்கள். இது சம்பந்தமாக பேசும்போது கூட நமது சர்க்கார் 'விப்' கூட வெகு அழகாகப் பேசியிருக்கிறார். சூர்ப்பனகை மூக்கு அறுபட்டது போன்று இந்தத் தீர்மானத்தைக்கொண்டு வந்து மூக்கு அறுபடப் போகிறார்கள் என்று அவர் பேசியிருக்கிறார். யாருடைய மூக்கை யார் அறுக்கப் போகிறார்கள் என்பதை பின்னால் பார்த்துக் கொள்ளலாம். பொது மக்கள் யாருடைய மூக்கை அறுக்கப் போகிறார்கள் என்பது சர்க்காருடைய கொள்கையைப் பொறுத்து இருக்கிறது. அவர்களுடைய கொள்கையில் மக்கள் அதிகப் படியான பற்று வைத்திருக்கிறார்களா என்பதைப் பார்க்க வேண்டியதாக இருக்கிறது. சர்க்கார் எந்தக் கொள்கையை

19th August 1960] [Sri S. M. Annamalai]

கடைப்பிடிக்க வேண்டும் என்று சொல்லிக்கொண்டு வருகிறார்களோ அந்தக் கொள்கையை சரியாகக் கடைப்பிடிக்கிறார்களா என்றும் பார்க்க வேண்டும். அதை மக்கள் கவனித்துக்கொண்டு தான் வருகிறார்கள்.

இப்பொழுதுள்ள நிலைமையில் பஸ் தொழிலை தேசீய மயமாக்குவது ரொம்பவும் அவசியமாக இருக்கிறது. பஸ் தொழிலினுடைய சரித்திரத்தை பத்து, இருபது வருஷத்திற்கு முன்பும் இருந்ததையும் இப்பொழுது இருப்பதையும் பார்க்க வேண்டும். பத்து வருஷங்களுக்கு முன் சாதாரணமாக இரண்டோர் பஸ் வைத்திருந்த முதலாளிகள் இன்றைக்கு ஐம்பது அல்லது அறுபது பஸ்களை வைத்து நடத்துகிறார்கள் என்றால் அவர்களுடைய வருமானம் எந்த அளவில் இருக்கிறது என்பதைக் கண்டு கொள்ளலாம். இந்த பஸ் தொழில் மூலமாக பல கோடிக்கணக்கான ரூபாயை அவர்கள் சம்பாதித்து வருகிறார்கள். ஏறக்குறைய பத்துக்கோடி ரூபாய் அந்தத் தொழிலில் வருமானம் வருவதற்கு இடம் இருக்கிறது என்று நான் ஏற்கெனவே சொல்லி இருக்கிறேன். சென்னையில் இப்பொழுது சர்க்கார் எடுத்து நடத்தி வருகிற பஸ் தொழிலை எடுத்துக்கொண்டால் எவ்வளவு செலவு செய்தபோதிலும் கூட எவ்வளவோ லாபம் கிடைப்பதாகச் சொல்லப்படுகிறது. அதைப்போலவே மாகாணத்திலுள்ள பஸ் தொழிலை சர்க்காரே எடுத்து நடத்தினால் இந்த பத்து கோடி ரூபாய்க்கு மிகுதியாகவே வருமானம் கிடைப்பதற்கு இடம் இருக்கிறது. அந்த லாபத்தைக் கொண்டு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நல்ல முறையில் நிறைவேற்றிக்கொள்ளலாம். அதை வைத்துக்கொண்டு நல்ல திட்டங்களைத் தீட்டி வைக்கலாம். பஸ் தொழிலை சர்க்காரே எடுத்து நடத்தினால் உண்மையிலேயே நல்ல லாபம் கிடைக்கும், அந்த லாபத்தைக் கொண்டு மக்களுக்கு நல்ல பல திட்டங்களை நிறைவேற்றி வைக்கலாம். இப்பொழுது அந்தத் தொழில் நல்ல முறையில் முன்னேறிக்கொண்டு வருகிறது. பஸ் தொழிலில் ஈடுபட்டிருக்கிறவர்கள் எல்லோரும் இப்பொழுது காங்கிரஸ்காரர்களாகி விட்டார்கள். பழைய முதலாளிகளெல்லாம் போய் இப்பொழுது புதிய முறையில் புதிய முதலாளிகளை உற்பத்தி செய்துகொண்டு வருகிறார்கள். இப்படி புதிய முதலாளிகளை உண்மையிலேயே உற்பத்தி செய்யக்கூடாது. அதனால் அந்தப் பஸ் தொழிலை சர்க்காரே எடுத்து நடத்த வேண்டியதாக இருக்கிறது. உண்மையிலேயே சர்க்கார் அதை எடுத்து நடத்தினால் அவர்களுக்கு நல்ல லாபம் கிடைக்கும், பல நன்மைகள் ஏற்படும். மக்களுக்கு நல்ல சலுகைகளைச் செய்து கொடுக்கலாம். எப்பொழுது எல்லா பஸ்களையும் சர்க்கார் எடுத்துக்கொள்ளப்போகிறார்கள் என்று இந்த சட்ட மன்றத்தில் ஒரு கேள்வி கேட்ட போது எல்லா பஸ்களையும் சர்க்கார் எடுத்துக்கொள்ளப்போவதில்லை, இப்பொழுது அதிக தூரம் போகிற பஸ்களை வைத்து நடத்தப்போகிறோம் என்று சொல்லி நடத்துகிறார்கள். அப்படி நடத்துவதில் கூட அவர்களுக்கு நல்ல லாபம் கிடைத்து வருவதாகத் தெரிய வருகிறது. அதாவது பெங்களூர் வரைக்கும் பஸ் விடுகிறார்கள். அதன் மூலம் நல்ல லாபம் கிடைப்பதாகவும் சொல்லப்படுகிறது. அதனால் எல்லா பஸ்களையும் சர்க்காரே ஏன் எடுத்து நடத்தக்கூடாது? உடனடி

[Sri S. M. Annamalai.] [19th August 1960

யாக ஏன் அந்தத் தொழிலை தேசீய மயமாக்கக் கூடாது? அவைகளை எல்லாம் தேசீய மயமாக்க வேண்டும் என்ற ஒரு நல்ல நோக்கத்துடன் தான் நான் இந்த தீர்மானத்தை இந்தச் சட்ட மன்றத்தின் முன்னால் வைத்திருக்கிறேன். எல்லாச் சட்ட மன்ற உறுப்பினர்களும் தங்களுடைய கருத்துக்களை தெரிவித்த பிறகு அதற்கு நல்ல பதிலை நான் சொல்லுகிறேன், என்பதனைச் சொல்லிக் கொண்டு என் பேச்சை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

12-30 p.m. SRI J. MATHA GOWDER: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, பஸ்களை எல்லாம் தேசியமயமாக்கவேண்டுமென்ற தீர்மானத்தை—முன்பு கொண்டு வந்து இன்னும் 6 மாத காலம் கூட ஆகவில்லை—மீண்டும் கொண்டு வந்திருக்கிறார்கள். இதற்குக் காரணம் என்னவென்று தெரியவில்லை. கொண்டுவந்தவர்களுடைய நோக்கமும் புரியவில்லை. முன்பே சர்க்கார் இதுபற்றி தங்கள் கருத்தைத் தெரிவித்திருக்கிறார்கள். பஸ்களை எல்லாம் தேசிய மாக்கக்கூடாது என்பது அல்ல பிரச்னை. தற்போது இருக்கக்கூடிய சூழ்நிலை அதற்குப் பொருத்தமானது அல்ல என்றுதான் முன்பும் வற்புறுத்தப்பட்டு வந்திருக்கிறது. ஆறு மாத காலத்திற்குள் நிலைமை பெரிய அளவில் மாறியிருப்பதாகச் சொல்ல முடியாது. நாம் ஜமீன் ஒழிப்பு மசோதாவைக் கொண்டுவந்தோம். இன்னும் ஜமீன்தார்களுக்கு நஷ்டஈடு முழுக்கவும் கொடுக்கப்பட்டபாடில்லை. வருஷா வருஷம் அதற்காக நிறையத் தொகை ஒதுக்கிவைத்துக் கொண்டிருக்கிறோம். நமக்கு இருக்கிற நிதி நிலைமையில் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் என்று ஏராளமாக பணம் செலவு செய்து கொண்டு வேறு இருக்கிறோம். மேலும் சம்பளக் கமிஷன் ரிப்போர்ட் வேறு சமர்ப்பிக்கப்பட்டு, அதை அங்கிகரித் திருக்கிறோம். அதனால் எவ்வளவு தூரம் அதிகச் செலவு ஏற்படும் என்பதை அடுத்துவரும் கூட்டங்களில்தான் நாம் விவாதிக்கப் போகிறோம். இப்படி இருக்கக்கூடிய ஒரு சமயத்தில் பஸ்களை தேசியமாக்குவது என்றால் நஷ்டஈடு எவ்வாறு கொடுப்பது? வேண்டுமானால் இந்தத் தீர்மானத்தைக் கொடுத்த வர்களுடைய நோக்கம் தனிப்பட்டவர்களுடைய சொத்துக்களை எவ்வித நஷ்டஈடும் கொடுக்காமல் எடுத்துக்கொள்ளலாம் என்று இருக்கக்கூடும். சர்க்காரைப் பொறுத்தவரையில் அப்படி இருப்பது நியாயம் இல்லை. ஆகவே இதுபற்றி நியாயமாக நாம் ஒரு முடிவுக்கு வரவேண்டியதாக இருக்கும்போது இந்தப் பிரச்சனையை உடனடியாக எடுத்துக்கொள்வது சரியில்லை. இப்போதே சென்னையில் இருந்து பங்களூர், சென்னையில் இருந்து சேலம் என்று பஸ் போட்டிருக்கிறோம். அடுத்து பத்துப் பதினைந்து மைல்களுக்குள் இருக்கும் ரூட்டுகளையும் எடுத்து வருகிறோம். நமது நிதி நிலைமை சீராக இருந்து, எல்லாவற்றையும் எடுத்துக்கொள்ளக் கூடிய வருவாய் இருக்குமானால் எடுத்துக்கொள்ளக்கூடாது என்று நான் சொல்லவில்லை. ஆனால் இன்றுள்ள தருணம் இதற்குச் சரியல்ல என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே இந்தத் தீர்மானத்தை அதைக் கொண்டுவந்த அங்கத்தினரே வாபஸ் பெற்றுவிடுவது நல்லது என்கிற என் அபிப்பிராயத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

19th August 1960]

**SRI M. KALYANASUNDARAM :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தத் தீர்மானத்தை நான் ஆதரிக்கின்றேன். இந்தத் தீர்மானத்தின் மீது உடனே சர்க்கார் நடவடிக்கை எடுக்க வேண்டுமா இல்லையா என்பது ஒருபக்கம் இருக்கட்டும். படிப் படியாகச் செய்யவேண்டுமா, உடனே ஒரேயடியாகச் செய்ய வேண்டுமா என்பது கவனிக்கவேண்டிய விஷயம். ஆனால், இத் தகைய தீர்மானத்தைக் கொண்டுவந்திருப்பதன் நோக்கம் இந்தச் சபையில் உள்ளவர்களாவது அந்தக் கொள்கைக்கு ஏகமனதாக ஆதரவு கொடுக்கிறார்கள் என்பதை வற்புறுத்த வேண்டும் என்பது தான். ஸ்ரீ. ஜே. மாதா கவுடர் அவர்கள் விரும்பினாலும், விரும்பா விட்டாலும் சர்க்கார் ஒவ்வொரு மார்க்கமாக எடுத்துக்கொண்டு தான் வருகிறார்கள். சென்னை நகரத்தைப் பொறுத்த மட்டில் பஸ் தொழில் சர்க்காருடைய ஏகபோகமாக இருக்கிறது. இதைத் தொலைப்பதற்கு என்றே சில முதலாளிகள் வேலை செய்து வரு கிறார்கள். அரசியல் செல்வாக்கு உள்ளவர்கள்கூட முயற்சி செய்கிறார்கள். சர்க்கார் இதை எடுக்கக்கூடாது என்ற வலுவான கருத்தை நாட்டில் பரப்புவதற்கு முயற்சி செய்கிறார்கள். ஆகவே இன்றையதினம் இவ்வாறு எடுத்துக்கொள்வது தவறு இல்லை, சர்க்கார் எல்லாவற்றையுமே எடுத்துக்கொள்வது தான் நல்லது, இதுதான் நியாயமான கொள்கை என்பதை சர்க்கார் செயலுக்கு ஆதரவு கொடுக்கும் வகையிலாவது இந்தச் சபையில் உள்ளவர்கள் எல்லாம் வற்புறுத்தவேண்டியது அவசிய மாகும். ஆனால் இந்தப் பிரச்சனையின் மீது காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள் ஏன் எதிர்க்கிறார்கள் என்றுதான் புரியவில்லை.

சென்னை நகரத்தில் உள்ள பஸ்களை எல்லாம் சர்க்கார் எடுத்துக் கொண்டிருக்கிறது. சென்னையில் இருந்து திருச்சிக்கும், சென்னை யில் இருந்து சேலத்திற்கும், சென்னையில் இருந்து பங்களூருக்கும் சர்க்கார் பஸ்கள் ஓடிக்கொண்டிருக்கின்றன. திருச்சியில் இருந்து நாகர்கோயிலுக்குப் பஸ் ஓடிக்கொண்டிருக்கிறது. புதிய மார்க்கங்களும் ஆரம்பிக்கப் போகிறார்கள். திருச்சியில் இருந்து பங்களூருக்கு சர்க்கார் பஸ் விடவேண்டு மென்ற கோரிக்கைக்கு இணங்க ஆரம்பிக்கலாம் என்று நினைக்கிறேன். இப்படிச் சர்க்கார் மேலும் மேலும் பல புதிய பஸ் ரூட்டுகளைத் தேசியமாக்கி வரும்போது அவர்களுடைய கொள்கையை ஊர்ஜிதம் செய்யும் வகையில்— அதற்கேற்ற ஒரு சூழ்நிலையை ஏற்படுத்துவதற்கு இந்தத் தீர் மானத்தை ஏற்று வலியுறுத்துவதன்மூலம்தான் அனுகூலம் ஏற்படும் என்கிற வகையில் இதை ஆதரிக்கிறேன். அப்படி இல்லை யென்றால் சர்க்கார் இப்போது பஸ்களை எடுத்து நடத்திக்கொண்டு வருவது கூடத் தவறாகப் போய்விடக்கூடும். அவர்களுடைய நட வடிக்கையே தவறே என்றுபோய்விடக்கூடாது என்பதற்காகவே நான் இந்தத் தீர்மானத்தை ஆதரித்துப் பேசுகிறேன்.

அதோடு இதன்மூலம் சர்க்காருக்கு நிறைய வருமானம் வரும் என்கிற கண்ணோட்டத்துடனும் இதைப் பார்க்கவேண்டியிருக்கிறது. இது மிக அதிகமான வருமானம் அளிக்கக் கூடிய தொழில். குறைந்த மூலதனத்தையிட்டு அதிக லாபம் சம்பாதிக்கக்கூடிய தொழில், இதைத் தவிர வேறு ஏதாவது இருக்கிறதா என்றால்

இல்லை. சர்க்காருடைய அனுபவமும் அப்படித்தான் இருக்குமென்று நினைக்கிறேன். வேண்டுமானால் தனிப்பட்டவர்களுக்கு வரக்கூடிய லாபத்தை அதிக வரிபோட்டு வாங்கிவிடலாமே என்று அமைச்சர் அவர்கள் சொல்லலாம். ப்ளீட் ஓனர்களைப் பற்றி அநேகமாக எல்லோருக்கும் தெரிந்திருக்கும். அவர்களில் தர்மம் செய்யக்கூடியவர்கள் இருக்கலாம். ஆனால் பெரும்பாலான ப்ளீட் ஓனர்கள் கொடுக்கவேண்டிய கணக்கைக்கூடச் சரியாகக் கொடுப்பதில்லை. டபிள் ஷீட் வைத்துக் கணக்கு எடுக்கிறார்கள். தினசரி வசூல் ஆகக்கூடிய பணத்தைக்கூட சரியாகக் காட்டுவதில்லை. அதனால் வருமான வரியையும் ஏமாற்றுகிறார்கள். ராஜ்ய சர்க்காருக்குச் செலுத்தக்கூடிய வரியையும் ஏமாற்றுகிறார்கள்.

(கனம் ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம்: ஏமாற்ற முடியாது. நாம் 'சீட்' கபாஸிடியை வைத்து வரி போடுகிறோம்) இருக்கலாம். வரி கட்டும்போது அவர்கள் காட்டுகிற சீட் எண்ணிக்கை வேறு. அப்புறம் அதை எல்லாம் நெருக்கிப் போட்டு பிரயாணிகளுக்கு இடையூறு விளைவிக்கிறார்கள். இதைப்பற்றி நானே அதிகாரிகளிடத்தில் சொல்லியிருக்கிறேன். ஆனால் நடுவில் இப்போது என்ன செய்வது, மூன்றாண்டு காலம் முடியட்டும், பிறகு என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ள முடியுமோ அதை எடுத்துக் கொள்கிறோம் என்கிறார்கள். இடையில் நிறுத்துவது சரியில்லை என்கிறார்கள்.

ஸ்ரீ மாதா கவுடர் அவர்கள் நஷ்டஈடு எப்படிக் கொடுப்பது என்றார்கள். நஷ்டஈடு கொடுக்கவேண்டும் என்ற பிரச்னை இதில் எழவில்லை. நாம் அவர்களுடைய பஸ்களை எடுத்துக்கொள்ளப் போவதில்லை. பஸ் ரூட்டுகளைத்தான் படிப்படியாக எடுத்துக் கொள்ளப்போகிறோம். பர்மிட் 3 வருஷத்திற்குத்தான் கொடுக்கப் பட்டிருக்கிறது. மூன்று வருஷம் ஆன பிற்பாடு அவற்றைப் புதுப்பிப்பதற்குப் பதிலாக சர்க்காரே அந்த ரூட்டுகளை எடுத்துக் கொள்வது சாத்தியமாகும். தனிப்பட்டவர்கள் இந்தத் தொழிலை நடத்தக்கூடாதா? அவர்கள் என்ன செய்வது? என்று கேட்கலாம். அப்பேர்ப்பட்டவர்களுக்கு ஓரளவு ஏதாவது செய்ய வேண்டுமென்று சொன்னால் குறைவாக இருக்கக்கூடிய தூரத்தை மட்டும், 25 மைல்களுக்கு உட்பட்ட பஸ் மார்க்கங்களை தனிப்பட்டவர்களுக்கு கொடுப்பது என்று வைத்துக்கொண்டு அதிக தூரமுள்ள பஸ் மார்க்கங்களை சர்க்கார் எடுக்க வேண்டும். ஆகவே, இந்தத் தீர்மானத்தை யாரும் ஆட்சேபிக்கக்கூடாது. எல்லோரும் ஏகோபித்து, இதற்கான நடவடிக்கைகளை சர்க்கார் துரிதமாக எடுக்க வேண்டுமென்று கூறிக் கொண்டு, இந்த மசோதவை ஆதரிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : தலைவர் அவர்களே, இந்த போக்குவரத்து தரை ஊர்திகளை தேசியமயமாக்க வேண்டுமென்று ஒரு தீர்மானம் இதற்கு முன் ஒரு முறை கூட கொண்டு வரப்பட்டது. கனம் நிதி அமைச்சர் அவர்கள் இதற்கு விரிவாக பதில் கூறினார்கள் என்று நினைக்கிறேன். ஆகவே, மீண்டும் தேசியமயமாக்கவேண்டுமென்று வற்புறுத்துவது ஏதோ அவர்கள் இந்த பஸ் வைத்திருப்பவர்களின் மீது கொண்டிருக்கும் கோபம் தான் காரணமோ என்று கூட சந்தேகமாயிருக்கிறது. இருந்த

19th August 1960] [Srimathi T. N. Anandanayaki]

போதிலும் நமது அரசாங்க கொள்கை கூட இன்று இல்லா விட்டாலும் எனறைககாவது தேசியமயமாக்க வேண்டுமென்ற எண்ணந்தான். இந்த நோத்தில் இது அவசியமா, இன்றுள்ள நிலைமை என்ன என்று தீர ஆராய்ந்து பார்த்தால் இதைக் காட்டிலும் அவசரமான பிரச்னைகள் எல்லாம் நம் நாட்டில் இன்று இருக்கின்றன. அவற்றை துரிதமாக தீர்த்து விட்டு அதற்கப்புறம் இந்தப் பிரச்சனைக்கு வந்தால் போதுமானது என்றுதான் என்னைப் போன்ற பொது மக்களுடையவும், பிரதிநிதிகளுடையவும் அபிப்பிராயமாக இருக்க முடியும் என்று எதிர்பார்க்கிறேன். இன்று தேசியமயமாக்கவேண்டுமென்று கூறிக் கொண்டிருக்கிறோம். நகரத்தில் ஓரளவு தேசியமயமாக்கி விட்டோம். வெளியே, மாவட்டங்களில் இருக்கிற ரூட்களும், நகரத்திற்கு வெளியே போகிற ரூட்களும், இவைகளில் இன்று தனிப்பட்டவர்கள் ஓட்டிக் கொண்டிருக்கிறார்கள். நமது சமதர்ம சமுதாயத்தின் அடிப்படைக் கொள்கை என்னவென்றால் பணம் ஒருவரிடம் போய் தங்கி விடக் கூடாது. அந்தப் பணத்தை பலருக்கு பங்கு போடும் அளவிற்கு இருக்க வேண்டுமென்பதுதான் நம் அடிப்படைக் கொள்கை. ஒருவரிடமே பணம் குவிந்து விடுவது என்றால் அது 'காப்பிட்டலிஸ்டிக் சொஸைட்டி' யாகும். பணம் ஒருவரிடம் குவிந்து விடாது பார்த்துக் கொள்வது என்பதுதான் நம் கொள்கை. இந்த முறையில் இன்று பஸ் சர்வீஸை எடுத்துப் பார்த்தால், இன்று அரசாங்கம் பல ஜீ. ஓ. க்கள் போட்டிருக்கிறார்கள். பத்து பஸ்கள் வைத்திருப்பவர்கள் 11 வாங்க வேண்டுமென்றோ அல்லது 50 பஸ் வைத்திருப்பவர்கள் 51 வது பஸ் வாங்க வேண்டுமென்றோ உள்ள சூழ்நிலை இருக்கக்கூடாது என்பதால் இதில் எத்தனை பேர்கள் புக முடியுமோ புதிதாக, அவர்களை அப்படிப் புகுத்த வழி தேட வேண்டும். சமதர்ம அடிப்படையில் இந்தத் துறையில் பலர் சம்பாதிக்க வழி பிறக்கும் என்று இன்று சர்க்கார் பல ஜீ.ஓ.க்கள் போட்டிருக்கிறார்கள். ஜீ.ஓ. என் 2365, தேதி 9--9--1958 போட்டிருக்கிறார்கள். அதன்படி பதினைந்து மைல்களுக்குள் இருந்தால் புதியவர்கள் பஸ் ஓட்டலாம். பதினைந்து மைல்களுக்குள் எந்த ரூட் வந்தாலும் இதற்கு முன் பஸ் ஓட்டாதவர்களாக இருந்தாலும் கூட, அவர்களுக்கு இதைக் கொடுக்கலாம் என்று இருக்கிறது. பதினைந்துக்கு மேல் 75 மைல்களுக்குள் ரூட் இருந்தால் 1-லிருந்து 5 பஸ் வரை வைத்திருப்பவர்கள் யார் யார் இருக்கிறார்களோ அவர்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கலாமென்று இருக்கிறது. எதற்காக இவைகளை எல்லாம் வைத்திருக்கிறார்கள்? இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கும் எதிர்கட்சி அங்கத்தினர் அவர்கள் சொல்வது மாதிரி பஸ் காரர்களின் சலுகை நமக்கு தேவை, மேலும் மேலும் இருக்கிற பணக்காரர்களை மேலும் பணக்காரர்களாக ஆக்கிக் கொண்டு போகவேண்டுமென்ற தவறான எண்ணம் இருந்தால் இத்தகைய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்குமா? ஐந்துக்கு குறைவாக வைத்திருப்பவர்கள் 15 முதல் 75 மைல்கள் வரை வைத்துக் கொள்ளலாம் என்பது போன்ற அம்சங்களை கொண்டுவந்திருக்கிறோம் என்றால் அது அதைக் காட்டுகிறது? "எக்கனமிக்கலி

[Srimathi T. N. Anandanayaki] [19th August 1960

வயபிள் யூனிட்" என்று சொல்வார்கள், அதன்படி ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. எழுபத்தைந்து மைல்களுக்கு மேல் உள்ள ரூட்களில், ப்ளீட் ஓனர்ஸ் என்று சொல்கிறார்களே அவர்களுக்குத்தான் கொடுக்க வேண்டுமென்ற சூழ்நிலை இருக்கக் கூடாது என்று யார் வேண்டுமானாலும், 'ந்யூ என்ட்ரான்ட்ஸ்' ஆனாலும் சரி, 'மீடியம் ப்ரொப்ரைட்டர்ஸ்' ஆனாலும் சரி, அல்லது பெரிய 'ப்ளீட் ஓனர்ஸ்' ஆனாலும் சரி இவர்களில் யாருக்கு வேண்டுமானாலும், யார் மிகுந்த தகுதி படைத்திருக்கிறார்கள் என்று 'கண்ஸேர்ன்ட் அத்தாரிட்டி' க்கு தெரிகிறதோ அவர்களுக்கு கொடுக்கலாம் என்று ஜீ. ஓ. போடப் பட்டிருக்கிறது. இன்னும் மேலும் சம தர்ம அடிப்படையில் கொண்டு வரவேண்டுமென்றால், 15 மைல் ரூட்கள் புதிதாக வருகிறவர்களுக்கு கொடுக்கலாம் என்றால் ரூட்கள் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. அப்படிக் கிடைத்தாலும் 'டௌன் ரூட்ஸ்' என்று கிளர்ச்சியை செய்து விடுகிறார்கள். திருச்சி, சேலம், கோவை போன்ற இடங்களில் அப்படி சொல்லியிருக்கிறார்கள், நீதிமன்றத்தில். பல இடங்களில் அடிக்கடி நிற்க வேண்டியிருப்பதால் ரோட்டுகள் அவ்வளவு அதிக அகலம் இல்லாதிருப்பதாலும் ஆபத்துக்கள் ஏற்படலாம். ஆகவே அதிகம் புதிதான பஸ்களை விடக்கூடாது என்று ஒரு தீர்ப்பு வந்திருப்பதால் அதனால் புதிதாக வருகிறவர்களுக்கு கஷ்டம் ஏற்படுகிறது. பதினைந்து மைல் ரூட் என்று போட்டாலும் புதிதானவர்கள் இந்தத் துறையில் இறங்குவதற்கு பல கஷ்டங்கள் இருக்கின்றன. ஆக, இந்த சமயத்தில் இப்படிப் பட்ட தீர்மானம் அவசியம் இல்லை என்று சொன்னாலும், சில சீர்திருத்தங்கள் செய்து விட்டால் இப்படிப்பட்ட தீர்மானத்திற்கு என்றுமே தேவையில்லை என்ற நிலை ஏற்படும். பதினைந்து மைல் என்றிருப்பதை 25 மைல்கள் என்று உயர்த்தி விட்டால், அதிகம் பேர் வரமுடியும். அதேபோல் 75 என்று இருப்பதை 100 மைல் என்று ஆக்கி விட்டால் 3, 4 என்று பஸ்கள் நிலை ஏற்படும். ஆகவே, பணம் ஒருவரிடமே தேங்காமல் 90 பஸ் வைத்திருப்பவர் 100 பஸ் வாங்கலாமே என்று நினைக்கும் சூழ்நிலை ஏற்படாது. பின்னர், இப்பொழுது பணம் ஒருவரிடம் தேங்கிப் போய் விடுகிறதா என்று பார்க்கலாம். இரண்டு லாக் ஷீட் வைத்திருப்பவர்களை வேண்டுமானால் திருட்டுத்தனமாக பணம் சம்பாதிக்கலாமே தவிர நியாயமாக, சட்டப்படி பார்த்தால் அவர்கள் நிலை அப்படியல்ல.

DEPUTY SPEAKER : I see some hon. Members sitting in the gallery. They are requested to go to the House.

SRIMATHI T. N. ANANDANAYAKI : பஸ் வைத்திருப்பவர்கள் இன்று அதிகமாக சர்சார்ஜ் கட்ட வேண்டியிருக்கிறது, பெட்ரோல் விலை ஏறி விட்டது, டீஸல் ஆயில் விலை ஏறி விட்டது என்ற நிலை இருக்கிறது. டயர் கிடைப்பதே கிடையாது. அப்படிக் கிடைத்தாலும் கூட ப்ளாக் மார்கட்டில் ஒன்றுக்கு நான்கு மடங்கு விலை கொடுத்து வாங்க வேண்டியிருக்கிறது. ஆகவே, இந்தத் துறையில் அதிக லாபத்தைப் பெற்று விடுவோம் என்று யாராவது ஆசைப் பட்டால், ஏன் இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்தவருக்கு பஸ் வாங்கலாம் என்ற யோசனை இருந்தால் அதை அவர் கை விட்டு

விடுவது நல்லது. இன்றுள்ள சூழ்நிலை தேசியமயமாக்குவதற்கு ஏற்றதாகயில்லை. இப்பொழுது நகரத்தில் தேசியமயமாக்கியிருக்கிறோம். எவ்வளவோ கஷ்டங்கள் பட்டு என்ன என்ன திருத்தங்கள் செய்ய முடியுமோ அவைகளைச் செய்து கொண்டு வருகிறார்கள். தனிப்பட்டவர்கள் நடத்துவதை விட இதில் லாபம் குறைவாகத் தான் வருகிறது. ஏனெனில் தனிப்பட்டவர்களுக்குள்ள அக்கரை இதில் கிடையாது. ஒரு பஸ்ஸில் ரிப்பேர் ஆகி விட்டதென்றால் இரவோடு இரவாக அந்த முதலாளிகள் விழித்து ரிப்பேர் செய்து அடுத்த நாள் காலை அந்த பஸ்ஸை ரூட்டில் விட்டு விடுவார்கள். ஏன், காசு அல்லவா? ஆகவே, அவர் கண்ணும் கருத்துமாக இருப்பார்கள். ஆனால் இங்கு டிரான்ஸ்போர்ட் ஆபிஸிற்குள் பஸ் போனால் எப்பொழுது வரும் என்று சொல்ல முடியாது. தனிப்பட்ட முதலாளிகள் கண்ணும் கருத்துமாக இருப்பது போன்று, அரசாங்க ஊழியர்கள் கவனிப்பதில்லை. ஒரு பஸ் நின்று விட்டது என்றால் மேலேயிருக்கிற ஆபீஸர், என் நின்று விட்டது இன்னென்றை, பின்னால் வருகிற பஸ்ஸை சீக்கிரம் விடுங்கள் என்கிறார். அப்பொழுது இங்கிருக்கிற பஸ்ஸின் பார்ட்டை அதில் போட்டு, அதிலுள்ளதை இதில் போட்டு கடைசியாக ஒரு பஸ் பார்ட் பார்ட்டாக கழற்றப்பட்டு நிற்கும் நிலையைப் பார்க்கலாம். அக்கரை கிடையாது என்பதற்காக சொல்கிறேன். தொழிலாளர்களிடம் அக்கரையில்லை, ஆபிஸர்களிடம் அக்கரையில்லை என்று சொல்லமுடியாது. அந்த அளவிற்கு நம் நாடு பக்குவம் அடையவில்லை. நாடு என்றால் அது நமது சொத்து, தேசியமயமாக்கினால் அது நம் சொத்து, அதில் ஏதாவது தவறு ஏற்படின் அது நம்மைத் தான் பாதிக்கும் என்று நினைக்கும் அளவிற்கு நமது மக்களுக்கு பக்குவம் ஏற்படவில்லை. தொழிலாளர்கள் பெட்ரோலை எடுத்து தங்கள் துணிகளை வாஷ் செய்து கொண்டிருந்தார்கள். சர்க்கார் பணம்தானே, என்று தங்கள் துணிகளை பெட்ரோல் போட்டு வாஷ் செய்து இருக்கிறார்கள். ஆக, நாம் தேசியமயமாக்குவதற்கு பக்குவப்படவில்லை. தேசியமயமாக்கப் படவேண்டுமென்ற கொள்கையை யாரும் மறுக்கவில்லை, ஆனால் நம் மக்களை அந்த அளவிற்கு பக்குவப்படுத்தி விட்டோமா? அந்த நிலைக்கு அவர்கள் வந்து விட்டார்களா என்றால் இல்லை. தனிப்பட்டவர்களினால் நடத்தப் படும் ஸ்தாபனங்களில் பல தவறுகள் நடைபெறுவதற்கு இடமிருக்கின்றன என்று சொல்லலாம். இருந்தபோதினும் கூட தனிப்பட்டவர்கள் நடத்துகிற முறை மிகவும் நன்றாக இருக்கிறது. அரசாங்கத்தில் எந்த முறையில் இருக்கவேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டுகின்ற முறையில் திறமையோடு நடத்திக்கொண்டிருக்கிறார்கள். சரியான நேரத்தில் வண்டி விடுகிறார்கள், ரிப்பேர் வந்தால் உடனுக்குடன் கவனித்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த நிலைமையை எல்லாம் பார்க்கும்போது நம் மக்கள் இன்னும் சரியான படி தேசிய மயமாக்குவதைப்பற்றி புரிந்து கொள்ள பக்குவப்படவில்லை என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது. 'பெர்ஸனல் எலிமென்ட்ஸ்' என்று சொல்லுவார்களே அதே போன்று சிறிய காரியங்களுக்குக்கூட தொழிலாளர்களை எதிர் கட்சிக்காரர்கள் தூண்டிவிட்டுக்கொண்டிருக்கிறார்கள். தொழிலாளர்களுடைய மனப்பான்மையையும் இதனால் கெட்டுவிடுகிறது. பிள்ளையை கிள்ளிவிட்டுக்கொண்டு, தொட்டிலையும் ஆட்டிவிடுவது

[Srimathi T. N. Anandanayaki] [19th August 1960

போல் அங்கு தொழிலாளர்களிடம் எதையாவது சொல்லி, லாபம் அதிகமாக வருகிறது, அதில் நமக்கு பங்கு தரத்தானே வேண்டும் என்றெல்லாம் சொல்லிக்கொண்டு, இங்கு வந்து அரசாங்கம் திறமையில்லாமல் வேலை செய்து கொண்டிருக்கிறது என்று குற்றஞ்சாட்டுகிறார்கள். இந்த நிலைமை இருந்து கொண்டிருக்கும் போது எல்லாத் தொழில்களையும் தேசியமயமாக்கவேண்டும் என்று சொல்லுவதை எப்படி நாம் ஒப்புக்கொள்ள முடியும்? மேலும், இப்போது அரசாங்கம் சிறிய ரூட்டுகளை எல்லாம் எடுக்காமல், பெரிய ரூட்டுகளை சென்னை-திருச்சி, சென்னை-சேலம் முதலிய ரூட்டுகளை எல்லாம் அரசாங்கம் ஏற்றெடுத்து நடத்திக் கொண்டிருக்கிறது. இதில் முன்னேற்றம் ஏற்படுகிறது என்று தெரிந்தால் இன்னும் விஸ்தரிக்கலாம். அதல்லாமல் ஒருவர் மீது ஏதோ கோபத்தை வைத்துக்கொண்டு இம்மாதிரியான தீர்மானங்கள் கொண்டு வருவது அவசியமல்ல. நாட்டில் இப்போது இருக்கின்ற மற்ற பிரச்னைகளை எல்லாம் பார்க்கும்போது இதையெல்லாம் இப்போது கவனிப்பதா இல்லையா என்கின்ற சந்தேகம் ஏற்படுகிறது. ஆகவே இந்த நேரத்தில் இம்மாதிரியான தீர்மானத்தை ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியமில்லை என்று கூறி என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

SRI K. ANBAZHAGAN : சட்டப் பேரவைத் துணைத் தலைவர் அவர்களே, பஸ் போக்குவரத்தை தேசியமயமாக்க வேண்டும் என்ற அடிப்படையில் கொடுக்கப்பட்டிருக்கும் இந்தத் தீர்மானத்தை அரசாங்கம் கருத்தளவில் எதிர்ப்பதற்கு இடமேயில்லை என்று கருதுகிறேன். தேசிய மயமாக்குவதை இப்போது ஏற்றுக்கொள்ள முடியாது, படிப்படியாகத்தான் ஏற்றுக்கொள்ள முடியும், அதற்கென்று ஒரு காலவரம்பை ஏற்படுத்தி அதற்கு தகுந்தவாறுதான் தேசிய மயமாக்க முடியும் என்று தான் கூறிக் கொள்ள முடியுமே தவிர தேசியமயமாக்கவேண்டும் என்கிற கொள்கையை எங்களால் ஏற்றுக்கொள்ளவே முடியாது என்று அரசாங்கத்தால் சொல்ல முடியாது. ஆனால் ஆளும் கட்சியே தேசியமயமாக்கும் கொள்கையை எதிர்க்கின்ற அளவுக்கு, என்னென்ன கருத்துக்களை சொல்ல வேண்டுமோ, சுதந்திரக் கட்சிக்காரர்கள் அவற்றை எல்லாம் எவ்வளவு அழகாக சொல்லுவார்களோ அதைவிட அழகாக ஆளும் கட்சியிலுள்ள சில அங்கத்தினர்களே இன்று எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அதிலும் சர்க்காருடைய கொள்கையையே ஏற்றுக்கொள்ள ஆளும் கட்சியிலுள்ளவர்கள் மறுக்கிறார்கள் என்பதை தெளிவாக்குகிறார்களோ என்ற சந்தேகம் ஏற்படுகிறது . . . . .

SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் அங்கத்தினர் அவர்கள் நான் குறிப்பிட்ட கொள்கையை சரியாக புரிந்து கொள்ளாததுதான் தவறு.

SRI K. ANBAZHAGAN : தேசியமயமாக்கவேண்டும் என்கின்ற கொள்கையும் அதை எதிர்க்கும் காரணத்தையும் என்றால் புரிந்து கொள்ள முடியும். அது மட்டுமல்ல, இப்படிப் பேசுகிறவர்களின்

19th August 1960] [Sri K. Anbazhagan]

தன்மையையும் அறிந்து கொள்ளக்கூடிய வாய்ப்பையும் பெற்றிருப்பவன் நான். சில கொள்கைகளைச் சொல்லுகின்ற பொழுது அதனால் படுகின்ற கஷ்ட நஷ்டங்களைப் பற்றி எடுத்துச்சொன்னால் அதை என்னால் மறுக்க முடியாது. ஏற்கனவே தேசிய மயமாயிருக்கின்ற பஸ் போக்குவரத்தில் இருக்கின்ற குறைகளை எல்லாம் எடுத்துச் சொல்லி, தனியார் துறையில் போக்குவரத்து எவ்வளவு வெற்றிகரமாக நடக்கிறது என்பதை எடுத்துச்சொல்லி தனியார் துறைகளிலேயே அத்தனை தொழில்களும் இருந்தால்தான் வெற்றிகரமாக இருக்கும் என்று நம்பித்தான் பேசுகிறார்களோ என்ற சந்தேகம் எனக்கு நிச்சயமாக ஏற்படுகிறது அதிலே குறிப்பாகச் சொல்லப்போனால், தொழில்கள் தனியார் துறையில் இருந்தால், வழக்குகள் விரிவடைகின்றன. அதன் மூலம் வழக்குகளை எடுத்து வாதாடுகின்றவர்களுக்கு நன்மையும் பெருகுகிறது என்பதையும் இச்சந்தர்ப்பத்தில் எடுத்துக்கூற விரும்புகிறேன். மேலும், தேசியமயமாக்குவதை விரிவுபடுத்துவது நல்லதல்ல, தேவையல்ல, அதனால் பல கஷ்டநஷ்டங்கள் ஏற்படும் ஆகவே இதைக் காலதாமதப்படுத்தி எடுத்துக்கொள்ளலாம் என்று கூறினால் அதை ஓரளவு நம்மால் புரிந்து கொள்ள முடியும். அதோடு, தொழில்கள் தேசியமயமாக்கப்பட வேண்டும் என்று கேட்டுக்கொள்வதின் அடிப்படையின் காரணமே, அதன் மூலம் கிடைக்கிற வருமானம் அரசாங்கத்திற்கு துணை செய்யும், இவ்வாறு அரசாங்கத்திற்கு வருமானம் வரும்போது அதன் மூலம் பொதுமக்கள் நேரிடையாக பயன் பெறுகிறார்கள் என்பதுதான். அதல்லாமல் தனிப்பட்டவர்களுக்கு வருமானம் அதிகரித்தால் அதன் மூலம் அவர்களின் கீழ் இருக்கின்றவர்களுக்குத்தான் பலன் கிடைக்குமே தவிர நேரிடையாக பொதுமக்களுக்கு எந்தவிதமான பயனும் கிடைக்காது என்கிற காரணத்தால்தான் தொழில்கள் தேசியமயமாக வேண்டும் என்று என் போன்றவர்கள் எடுத்துச் சொல்கிறார்கள்.

தேசியமயமாக்குவதன் மூலம் அரசாங்கம் நன்மை அடையும், அதோடு அரசாங்கத்திற்கு 20 அல்லது 30 லட்சம் ரூபாய் அதிக வருமானம் கிடைக்கும் என்ற காரணத்தால் இதை நாங்கள் சொல்லுகிறோம் என்றால் இதில் எந்தவிதமான உள்நோக்கமும் இருக்கமுடியாது. ஆளும் கட்சியில் இருக்கின்ற அமைச்சர்கள் தேசியமயமாக்குகின்ற கொள்கையை வெளியில் எடுத்துச்சொல்லுகின்ற நேரத்தில், பஸ் முதலாளிகளிடத்திலுள்ள பஸ்களை எல்லாம் அரசாங்கம் எடுத்துவிட வேண்டும் என்று எதிர்கட்சிக்காரர்கள் சொல்லுகிறார்கள் என்று அமைச்சர்கள் பேசி வருகிறார்கள். ஆனால் இதிலுள்ள உண்மையை அமைச்சர்கள் தெரிந்து சொன்னார்களோ அல்லது தெரியாமல் சொன்னார்களோ நான் அறிய மாட்டேன். உண்மையாகவே அமைச்சர்கள் சொல்லுவது போலவே இருந்தால், இந்தக் கருத்தை எண்ணிப்பார்க்கின்ற பொதுமக்கள், ஆளும்கட்சி பஸ் முதலாளிகளை ஆதரிப்பதற்குத்தான் இருக்கிறார்கள் என்ற காரணத்தால், பஸ் முதலாளிகளுடைய ஆதரவு ஆளும் கட்சிக்கு தேவை என்கிற காரணத்தினால் தான் அரசாங்கம் பஸ் போக்குவரத்தை தேசியமயமாக்கமாட்டேன் என்று சொல்லுகிறது என்றுதான் பொதுமக்கள் கருதுவார்கள். அரசியல் அரிச்சுவடி தெரியாத

[Sri K. Anbazhagan] [19th August 1960

வர்கள் கூட அமைச்சர் அவர்களின் பேச்சை நம்பிக்கொண்டிருப்பவர்கள் பஸ் முதலாளி இருந்தால்தான் இவர்களுக்கு அதிகாரத்தில் இருக்க முடியும், அதனால்தான் தேசிய மயமாக்குவதை மறுக்கிறார்கள் என்று நிச்சயமாக எண்ணுவார்கள். ஆனால் உண்மையாக அரசாங்கம் ஆளும் கட்சியினுடைய நன்மையைக் கருதி இந்தக் கொள்கையை மேற்கொண்டதாலும் நாட்டு மக்களுக்கு பயன் அடையக்கூடிய முறையில் பஸ்போக்குவரத்தை தேசியமயமாக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். வேறு சில, ஆளும் கட்சியிலுள்ள அங்கத்தினர்கள், திராவிட முன்னேற்றக் கழகத்திலும் சில பஸ் முதலாளிகள் இருக்கிறார்கள், கம்யூனிஸ்ட் கட்சிக்கு ஆதரவு தரக்கூடியவர்களிலும் ஒருவர், இருவர் பஸ் முதலாளிகளாக இருக்கிறார்கள் என்று இங்கு சொல்லியிருக்கிறார்கள். நான் அவர்களிடத்தில் கேட்டுக்கொள்வது, அரசாங்கம் பஸ் போக்குவரத்தைத் தேசிய மயமாக்கவேண்டும் என்பதை ஏற்றுக்கொண்ட பின்னால், அதை நடைமுறைக்கு கொண்டு வரும்போது, முதல் மாதத்திலேயே எதிர்கட்சிகாரர்களில் முதலாளிகளாய் இருக்கின்றவர்களிடமுள்ள பஸ்களை எடுத்துக் கொள்ளுங்கள், அதன் பின்னால் இரண்டாவது மாதத்தில் ஆளும் கட்சியிலுள்ளவர்களில் பஸ் முதலாளிகளாய் இருக்கின்றவர்களிடமிருந்து பஸ்களை எடுத்துக்கொள்ளுங்கள். அதில் யாரும் தலையிடமாட்டோம், குறுக்கிடவும் மாட்டோம், எதிர்கட்சியிலுள்ள பஸ் முதலாளிகள் போய்விட்டார்களே என்று கவலைப்படவும் மாட்டோம். பஸ் போக்குவரத்தை அரசாங்கம் ஏற்றுக்கொண்டால், அரசாங்கம் திறமையாக ஏற்றெடுத்து நடத்த முடியுமா என்று தோன்றலாம், அதில் ஏற்படுகின்ற குறைகளை நிவர்த்தி செய்வதற்குரிய வாய்ப்பு இருக்கின்றது. இன்றைக்கு இருக்கின்ற ஆளும் கட்சியினருக்கு அந்தத் திறமையில்லாவிட்டாலும் நாளைக்கு வருகிறவர்களுக்கு அந்தத் திறமையிருக்கும் என்பதை நினைவில் கொண்டாவது இதை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

அது மட்டுமல்ல, பஸ் போக்குவரத்தை ஒரு தொழில் என்று மட்டும் கருதக் கூடாது. வேறு பல துறைகளை வேண்டுமானால் தனிப்பட்ட தொழில் என்று எடுத்துக்கொள்ளலாம். பொது மக்களுடைய தேவையின் அடிப்படையில் செய்யப்படுகிற ஒரு தொண்டு அல்லது சர்வீஸ் என்று தான் கொள்ள வேண்டும். தனிப்பட்ட நபர்கள் பொதுமக்களுக்கு தொண்டு செய்யக்கூடாது என்று சொல்ல மாட்டேன். மற்றவர்களுக்கும் அரசாங்கம் தொண்டு செய்யக்கூடாது என்று சொல்ல மாட்டேன். ஆனால் முதல் பங்கு பொதுமக்களுக்குத்தான், அதன் பின்னால்தான் முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்கும் போக வேண்டும். சவாரி செய்கின்ற பொதுமக்களுடைய வசதியை கவனிப்பதற்கு அரசாங்கம் கடமைப்பட்டிருக்கிறது. இதில் நடைபெறுகின்ற குறைகளை எடுத்துக்கூறுவதை எடுத்துக் கொண்டால், இன்றைக்கு மத்திய அரசாங்கம் ரயில்வே போக்கு வரத்தை நடத்துகிறார்கள், பல பேர்கள் குறைகூறுகிறார்கள், சரியான நேரத்தில் ரயில்கள் போவதில்லை என்று குறைபட்டுக்கொள்கிறார்கள். ஒரு ரயிலில் ஏற வந்தால் அதில் போவதற்கு முடியாமல் அடுத்தாற்போலுள்ள மூன்று ரயில்களில் போக முயற்சிக்கிறார்கள், இவ்விதமான கொடுமைகள் நாள்தோறும் நடந்து கொண்டிருந்தும் கூட,

19th August 1960] [Sri K. Anbazhagan]

அரசாங்கம் ரயில்வேயை நடத்துவது தவறு, என்று பொது மக்களின் பிரதிநிதிகள் யாரும், அல்லது தனிப்பட்ட நபர்கள் யாரும் சொல்ல மாட்டார்கள். அதே போல் தான் பஸ் போக்குவரத்தை அரசாங்கம்தான் நடத்த வேண்டும், அதை இன்னும் சிறந்த முறையில் நடத்துவதற்கு வழிவகைகளை காணவேண்டும். அதற்கான முறைகளைக் கண்டுபிடிக்க முயல வேண்டும். இதில் நான் ஒரு யோசனையை தெரிவித்துக்கொள்கிறேன். இப்போது 75 மைல்கள் 80 மைல்கள் இருக்கின்ற பஸ் ரூட்டுகளில் எல்லாம் தனிப்பட்ட முதலாளிகளின் பஸ்கள்தான் ஓடுகின்றன. அவற்றில் அரசாங்கம் செய்ய வேண்டியது என்னவென்றால், 50 மைல்களுக்கு மேல் இருக்கும் எல்லா ரூட்டுகளையும் அரசாங்கம் ஏற்றுக்கொள்ள வேண்டும். அதில் அரசாங்கம் புதிய பஸ்கள் போடலாம், இல்லையென்றால் அவர்களிடமிருந்தே வாங்கிக்கொள்ளலாம். அதற்கான நஷ்டஈட்டை வேண்டுமானால் நாளடைவில் தவணைகளாக கொடுக்கலாம். ஆகவே 50 மைல்களுக்கு மேலாக பஸ் போக்குவரத்துள்ள பாதைகளில் இருக்கின்ற அத்தனை பஸ்களையும் மேற்கொள்ளுவது முதல் அடிப்படை. அல்லது 25 பஸ்களுக்கு மேல் வைத்திருக்கின்றவர்களிடத்தில் 25 பஸ்கள் அளவுக்கு நிறுத்தி மிச்சம் இருக்கக் கூடிய பஸ்களை முதலடியில் எடுத்துக்கொள்ளவேண்டும். அதற்கு மேல் 10 பஸ்களுக்கு மேல் வைத்திருக்கின்றவர்களிடத்தில் 10 பஸகள் அளவுக்கு நறுத்தி மிச்சம் இருக்கக்கூடிய பஸ்களை எடுத்துக்கொள்ளவேண்டும். அவர்களிடம் இருக்கக்கூடிய பஸ்களை பிடுங்கிக் கொண்டு அவர்களை அன்னக்காவடிகளாக ஆக்கவேண்டுமென்று நான் சொல்லவில்லை. தேசியமயமாக்கும் முறையிலே 50 மைல் அளவுக்கு மேல் இருக்கக் கூடியவைகளையும், 20 பஸ்களுக்கு மேல் வைத்திருக்கக் கூடியவைகளையும், பிறகு 10 பஸ்களுக்கு மேல் வைத்திருக்கக் கூடியவைகளையும், சர்க்கார் எடுத்துக்கொண்டு படிப்படியாக முன்னேறினால் இன்றில்லாவிட்டாலும் இன்னும் 5 ஆண்டுகளுக்குள், 7 ஆண்டுகளுக்குள், பஸ்களைத் தேசிய மயமாக்குவதன் மூலம் நல்லதொரு வருமானத்தைப் பெற முடியும். அரசாங்கத்தினுடைய கொள்கை வரிகளை மட்டும் போட்டு வருமானத்தைப் பெருக்க முடியும் என்பது எதிர்காலத்தில் முடியாது. சமுதாயத்திற்கு வேண்டிய காரியங்களைச் செய்ய வேண்டுமானால், சமுதாயத்திற்கு அரசாங்கத்தின் மூலமாக நன்மை விளைய வேண்டுமானாலும், வரி மூலமாகத்தான் அரசாங்கத்தின் வருமானத்தைப் பெறுவோம் என்ற கருத்து இருக்குமானால் அது தவறு. வரி மூலமாகப் பெறுவதற்குப் பதிலாக இதன் மூலம் அடையலாம் என்பது ஒரு புறமிருக்க, பொது மக்களுடன் தொடர்பு கொள்ளும் முறையில் சர்க்கார் இருக்கவேண்டும் என்பது ஒரு நல்ல கருத்தாக இருப்பதால் இந்த பஸ் போக்குவரத்தை அரசாங்கம் மேற்கொள்ள வேண்டும்.

இதற்கு முன் இந்தச் சட்ட சபையில் இதைப் பற்றி ஒரு தீர்மானம் வந்தபோது அமைச்சர் அவர்கள் பதில் சொன்னார்கள் —பல விளக்கங்களும் தந்தார்கள். என்றாலும் அவர்கள் தந்த விளக்கங்கள் திருப்தியளிக்காததாக இருந்தன. தேசியமயமாக்கும் கொள்கையை இந்த சர்க்கார் ஏற்றுக்கொண்டு, இவர்கள் தள்ளிப் போடுகின்ற முறையானது, "பாலுக்கும் காவல், பூனைக்கும் தோழன்" என்று ஒரு பழமொழி எல்லோருக்கும் தெரியும் —

[Sri K. Anbazhagan] [19th August 1960

அந்த முறையில் எப்படி இருக்கிறது என்றால் பால் கிடைக்க வேண்டியவர்களுக்குக் கிடைக்காது, பூனையும் கடைசியில் தேறாது என்று அந்த நிலை ஏற்படுமானால் தொழில் நடத்துகின்றவர் களுககும் நியாயமான உற்சாகமான எண்ணங்கள் ஏற்பட முடியாது, பொது மக்களுக்கும் நம்பிக்கை பிறக்க முடியாது. தொழில் நடத்துகின்றவர்களுக்கு வாய்ப்பு அளிக்கவேண்டு மென்றால் மற்ற தொழில்கள் ஏற்படுத்த, மோட்டாருக்குத் தேவை யான உறுப்புகளை உற்பத்தி செய்யக் கூடிய தொழில்களை ஏற் படுத்த, வேறு வகையான தொழில்களை ஏற்படுத்த முயற்சி செய்து லாபம் சம்பாதிக்க முன்வரட்டும்—புதிய தொழிலில் ஈடுபடட்டும் —நான் வேண்டாமென்று சொல்லவில்லை. அதே நேரத்தில் மக்களுக்கு அடிப்படைத் தேவையாக இருக்கின்ற ஒரு தொழில் நாளாவட்டத்தில், காலக் கிரமத்தில் எடுத்துக்கொள்ளப்படும் என்று சொன்னாலும், எவ்வளவு காலத்தில் எடுத்துக்கொள்ளப்படும் என்பதை முன்னதாகத் தீர்மானித்தும், உடனடியாக எந்த அளவுக்கு தேசியமாக்க முடியுமோ அந்த அளவுக்கு தேசியமய மாக்குவதற்கு கொள்கையளவில் ஏற்றுக்கொண்டிருப்பதைத் தெரிவிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : உதவி சபாநாயகர் அவர்களே, இந்தத் தீர்மானம் இங்கே பிரேரேபிக்கப்பட்டு பல அங்கத்தினர்கள் தங்கள் கருத்துக்களை வெளியிட்டிருக்கிறார்கள். முதலில் இந்தத் தீர்மானத்திற்கு என்ன அவசியம் என்பதைப் பற்றி யோசித்துப் பார்க்கவேண்டும். ஒரு அரசாங்கத்தின் கொள்கை நிர்ணயிக்கப்படாமல் இருந்து, அல்லது ஒரு அரசாங் கத்தின் கொள்கை — ஏற்றுக்கொண்டிருக்கின்ற கொள்கை — சரியான கொள்கையாக இல்லாதிருந்தால், இல்லாத கொள்கையை நிர்ணயிக்கவும், தவறான கொள்கையை மாற்றுவதற்கும் இந்த மாதிரித் தீர்மானங்கள் கொண்டுவந்து சட்ட சபை சிபாரிசு செய் வதன் மூலமாக சர்க்காரை அந்தக் கொள்கையை ஏற்றுக் கொள்ளும்படி செய்ய இந்த மாதிரித் தீர்மானங்கள் வருவது அவசியம்.

இன்றைக்கு போக்குவரத்து சாதனங்களை தேசியமயமாக்க வேண்டுமென்று சர்க்கார் கொள்கையாக ஏற்றுக்கொண்டிருக் கிறது. அந்த அளவுக்கு இதைப் படிப்படியாகச் செய்யவேண்டு மென்பதில் கருத்து வேற்றுமை இருக்க முடியாது என்பதை எதிர் கட்சி அங்கத்தினர்களே தெளிவுபடுத்தினார்கள். கனம் அங்கத் தினர் ஸ்ரீ கல்யாணசுந்தரம் அவர்கள்கூட உடனடியாக 25 மைல் களுக்கு மேல் இருப்பதை எடுத்துக்கொண்டாலென்ன, அல்லது 50 மைல்களுக்கு மேல் இருக்கக்கூடிய பஸ்களை எடுத்துக் கொண்டாலென்ன என்றுதான் யோசனை கூறினார்கள். கனம் அங்கத்தினர் ஸ்ரீ அன்பழகன் அவர்களும் இங்கே சில யோசனைகள் கூறினார்கள். அவர்களும் உடனடியாக முடியாது, படிப்படி யாகத்தான் செய்யவேண்டுமென்று கூறினார்கள். அதுதான் சர்க்காருடைய கொள்கையும். தேசிய மயமாக்கவேண்டும்— அதைப் படிப்படியாக செய்யவேண்டும் என்பதுதான்

19th August 1960] [Sri C. Subramaniam]

சர்க்காருடைய கொள்கையாக இருக்கிறது. இப்போது பல பாதைகளை சர்க்கார் எடுத்து அங்கே பஸ்களை விட வேண்டுமென்று இன்றைக்கு நடவடிக்கையும் எடுத்துக்கொண் டிருக்கிறார்கள்.

இன்றைக்கு முக்கியமாக கவனிக்க வேண்டியது, சர்க்காருடைய வசதிகளை — நிதி வசதிகளை—எதற்கு முதலிடம் கொடுத்து பயன்படுத்த வேண்டுமென்பது. இதைத்தான் இன்றைய தினம் யோசிக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. கனம் அங்கத்தினர் ஸ்ரீ. அன்பழகன் சொன்னதற்கும் சர்க்காருடைய கொள்கைக்கும் கருத்து வேற்றுமை இருக்கிறது இங்கேதான். அவர்கள் நினைப்பது இது மாதிரி மோட்டார்களுக்கு வேண்டியவைகளைத் தயாரிப்பது அல்லது மோட்டார் கார்களையே தயாரிப்பது இதையெல்லாம் தனிப்பட்டவர்கள் எடுத்து நடத்தட்டும், இப்போது நடக்கக் கூடிய தொழிலை சர்க்கார் எடுத்து நடத்தட்டும் என்பது —அந்த முறையில்தான் பேசினார்கள். சர்க்கார் இறங்கிச் செய்ய வேண்டுமென்று சொன்னால் மற்றவர்கள் நடத்தாத தொழிலில், அவசியமாக நடத்தியாகவேண்டுமென்றிருக்கின்ற தொழில், இவைகளுக்கு முதலிடம் கொடுத்து அதில் முதலீடு செய்து அந்தத் தொழில் வளர சர்க்கார் ஏற்பாடு செய்வதுதான் முக்கியமானது. இன்று பலர் நடத்துகின்றவைகளை சர்க்கார் எடுத்து நடத்த வேண்டுமென்று சொன்னால் நமக்கு இருக்கக் கூடிய நிதி வசதி மட்டுமல்ல, நிர்வாக வசதியையும் இதிலேயே செலவழிக்க வேண்டி வரும். சர்க்காருடைய கொள்கை, மூன்றாவது, நான்காவது ஐந்தாண்டுத் திட்டங்களில் பல முக்கியமான தொழில் திட்டங்கள் ஏற்படுத்தப்பட்டு, அந்தத் திட்டங்கள் மற்ற தொழில் வளர்ச்சிக்கு அடிப்படையாக இருக்கக் கூடிய முறையில் அமையவேண்டும் என்று சொல்லும்போது, முதலிடம் கொடுக்க வேண்டிய அடிப்படையான தொழில்கள் என்ன, அந்தத் தொழில்களை எப்படி நிறுவுவது, மற்றவர்கள் நிறுவாவிட்டால் அவைகளுக்கு வசதி தேடவேண்டும், என்று பரிசீலனை செய்து, நிதி வசதியாக இருந்தாலும் சரி, நிர்வாக அனுபவமாக இருந்தாலும் சரி, அதில் செலவழிக்க வேண்டுமேயொழிய, இதில் பணம் சுலபமாக வருகிறது என்று சொல்லி, இதில் கவனம் செலுத்தவேண்டும் என்று சொன்னால், தாற்காலிகமாகச் சில லாபம் ஏற்பட்டாலும், அடிப்படையாக நாட்டில் ஏற்படக் கூடிய தொழில் வளர்ச்சிக்குப் பாதகமாக இருக்கும் என்று வலியுறுத்திச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதன் காரணமாக படிப்படியாக, இப்போது சென்னையை அடிப்படையாக வைத்துக்கொண்டு, கன்னியாகுமரியை அடிப்படையாக வைத்துக்கொண்டு எந்த அளவு விரிவுபடுத்தலாம் என்று விரிவுபடுத்தி வருகிறோம். அதற்கு மேல் வேறு ஏதாவது ஒரு இடத்தை அடிப்படையாக வைத்து வேறு ஏதாவது எடுக்க முடியுமா என்று பார்த்து அந்த இடத்தைக் கேந்திரமாக வைத்து எடுத்து நடத்தலாமா என்று பரிசீலனை செய்யலாம். தேசீய மயமாக்குவது, அதுவும் முழுவதையும் ஆக்குவது என்ற முறையிலே, அதுவும் உடனடியாக அல்லது கூடிய சீக்கிரத்திலே செய்யவேண்டுமென்று இந்தத் தீர்மானம் அமைந்திருக்குமானால் இதை சர்க்கார் ஒப்புக்கொள்ள முடியாதிருக்கிறது. அவ்வாறு

[Sri C. Subramaniam] [19th August 1960

இல்லாமல் சர்க்கார் சொல்லுகிற கொள்கையைத்தான் சொல்லு கிறது என்றால் இந்தத் தீர்மானம் அவசியமல்ல. ஆகையால்தான் இதை யோசித்துப்பார்க்கவேண்டும்.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ கல்யாணசுந்தரம் அவர்கள் இன்னொரு கருத்து சொன்னார்கள். தனிப்பட்டவர்களுடைய பஸ்களை நாம் வாங்கிக்கொள்ளவேண்டுமென்ற அவசியம் இல்லையென்று சொன் னார்கள். அப்படியானால் அவர்களிடத்தில் இருக்கக்கூடிய பஸ்கள் என்ன ஆவது? இதை தேசீய அடிப்படையில் பார்க்கவேண்டும். சமுதாயத்தில் இருக்கக் கூடிய வசதிகளை, அவை தனியார் துறையில் இருந்தாலும் அல்லது பொதுத் துறையிலே இருந் தாலும், நமக்கு இருக்கின்ற வசதிகளை உபயோகப்படுத்தித்தான் ஆகவேண்டும். தேசிய மயமாக்க வேண்டுமென்று சொன்னால் தனிப்பட்டவர்கள் பஸ்தானே எப்படியாவது போகட்டும் என்ற முறையில் இருக்கக் கூடாது. இன்றைக்கு இருக்கக் கூடிய ரூட்டு களை நாம் எடுக்க வேண்டுமென்று சொல்லும்போது, அந்த பஸ்களை நல்ல முறையில் — உபயோகப்படுத்தக் கூடிய முறையில் — தேசீய மயமாக்க வேண்டுமே தவிர, தனிப்பட்டவர்களுடைய பணம் தானே, பரவாயில்லை என்று சொன்னால் அது தேசீய நஷ்டம், அது சமுதாயத்திற்கு நஷ்டம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அந்த மாதிரியான கொள்கை சர்க்காருக்குக் கிடையாது. வேறு யார் வந்தாலும் அந்தக் கொள்கையைக் கொள்வார்களோ என்னவோ தெரியாது. தனிப்பட்டவர்களுக்கு நஷ்டமானால் பரவாயில்லை என்று அவர்கள் சொன்னாலும், அது நாட்டுக்கும், சமுதாயத்துக்கும் ஏற்படக் கூடிய பெரிய நஷ்டமாகும். நமக்கு இருக்கக் கூடிய வசதிகள் குறைவு. பஸ் கட்டக் கூடிய வசதி குறைவு. வெளி நாட்டு அன்னியச் செலவாணி மூலமாகப் பல பாகங்களைத் தருவிக்க வேண்டியிருக்கிறது. அதோடு பஸ்களை கட்டுவதற்கு வேண்டிய பல யந்திரங்களைத் தருவிக்க வேண்டி யிருக்கிறது. இவ்வளவு கஷ்டமான நிலையில் கட்டியிருக்கக் கூடிய பஸ்களை — போக்குவரத்து சாதனங்களை — தேசீய மயமாக்குகிறோம் என்ற காரணத்தினால் நஷ்டப்படுத்தினால் அது நமது தேசீயப் பொருளாதார வளர்ச்சிக்குப் பாதகமாகத்தான் ஆகும். ஆகையால்தான் இந்த யோசனையை ஏற்றுக்கொள்ள முடியாது. இருக்கக் கூடிய பஸ்களை எடுக்கவேண்டுமென்று சொல்லும்போது நியாயமான நஷ்ட ஈடு கொடுத்து எடுத்துத்தான் ஆகவேண்டும். வேண்டுமானால் மூன்று வருஷம் முடிகின்ற காலத்தில் எடுக்கும்போது, ரூட் பர்மிட்டுக்கு நஷ்ட ஈடு கொடுக்க வேண்டியதில்லை. பஸ்களை என்ன செய்வது என்று யோசித்துப் பார்த்து பஸ்கள் உபயோகப்படுகின்ற முறையில் ஏற்ட பாடு செய்யவேண்டும். வேண்டுமானால் ஆங்காங்கு ஒரு சில ரூட்டு களை எடுத்துக் கொள்ளும்போது அந்த பஸ்களை இன்னொரு பக்கம் உபயோகப்படுத்திக் கொள்ளலாம். எல்லா இடங்களிலும் உள்ள ரூட்டுகளை எடுத்துக் கொள்ளும்போது அந்த பஸ்களை வேறு இடத்தில் உபயோகித்துக் கொள்ள காரிய சாத்தியமில்லையென் பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். கொள்கை அளவிலே பஸ் போக்குவரத்தைத் தேசீயமயமாக்க வேண்டுமென்ற கொள் கையைச் சர்க்கார் ஏற்றுக் கொண்டிருக்கிறது. அப்படி கொள்கை அளவிலே ஏற்றுக் கொண்டிருக்கும்போது, நிறைவேற்றுவது

